நாகமுனிவர்

# தலைநோய் மருத்துவம்



அருள்மிகு
ரீ தண்டாயுதபாணி சுவாமி
கோயில் சித்த மருத்துவநூல்
வெளியீட்டுக்குழு
1976

வெளியீட்டுத் தொடர் எண் : 32

நாகமுனிவர்

# தலைநோய் மருத்துவம்

(நாகமுனிவர் சிரரோகவிதி)

முதல் முதலாக அச்சேறும் ஓலைச்சுவடி



அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழுவினருக்காக

கௌரவத் தலைவர்

டாக்டர் இரா. தியாகராசன் எல். ஐ. எம்.,

அவர்களால் பதிப்பிக்கப் பெற்று.

தமிழ்நாடு அரசுக்கு

நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

கி.பி. 1976 விலை ரூ. 7-25

முதற் பதிப்பு : 1976










அச்சிட்டோர் :
பூம் பிரிண்டர்ஸ்,
32-D, டாணா தெரு,
புரசைவாக்கம்,
சென்னை-600007.

# அருள்மிகு
# பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
## சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழு

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
பொறுப்பு அலுவலர்,
சென்னை-600 029. — தலைவர்

டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.,
தலைவர், இந்திய மருத்துவ மத்திய கழகம்,
சென்னை-600 005. — பொருளாளர்

திரு. கு. சின்னப்பன், தலைவர், அறங்காவலர் குழு.
அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
திருக்கோயில், பழநி. — உறுப்பினர்

டாக்டர் ப. சிற்சபை, ஆர். ஐ. எம்.பி.,
துணைத்தலைவர்,
இந்திய மருத்துவ மத்திய கழகம். — உறுப்பினர்

திரு. சி. எஸ். தீனதயாளு, பி. எஸ்சி, பி. எல்.,
நிர்வாக அதிகாரி, அருள்மிகு பழநி
தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழநி. — உறுப்பினர்

டாக்டர். பு. மு. வேணுகோபால், எச், பி, ஐ. எம்.
இந்திய மருத்துவத்துறை இயக்குநர்,
சென்னை-600029. — சிறப்பு அழைப்பினர்

# சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு
## உறுப்பினர்கள்

1. டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ எம்.,
பொறுப்பு அலுவலர், சித்த மருத்துவ
மைய ஆராய்ச்சி நிலையம், சென்னை-600029. — தலைவர்

2. டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,
இந்திய மருத்துவத்துறை இயக்குநர்,
சென்னை-600029. — உறுப்பினர் செயலர்

3. டாக்டர் சி. எஸ். உத்தமராயன், எச். பி. ஐ. எம்.,
முன்னாள் இந்திய மருத்துவத்துறை இயக்குநர்,
சென்னை-600005. — உறுப்பினர்

4. டாக்டர் எம். சண்முகவேலு, எச். பி. ஐ. எம்.,
முன்னாள் மருத்துவப் பேராசிரியர்,
இராமநாதபுரம். உறுப்பினர்

4. டாக்டர் கே. இராதாகிருஷ்ணன், எல் ஐ. எம்.,
ஓய்வு பெற்ற மருத்துவ அலுவலர், ஊராட்சி ஒன்றிய
மருந்தகம், காவேரிப்பாக்கம், வடஆர்க்காடு. ,,

6. டாக்டர் எ. சிறில் ஹென்றி, எல். ஐ. எம்.,
ஓய்வு பெற்ற மருத்துவ அலுவலர்,
நகராட்சி மருந்தகம், திருச்சி. ,,

7. டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.
தலைவர், இந்திய மருத்துவ மத்திய கழகம்,
சென்னை-600005. ,,

8. டாக்டர் ப. சிற்சபை, ஆர். ஐ. எம். பி.,
துணைத்தலைவர்,
இந்திய மருத்துவ மத்திய கழகம் ,,

9. பண்டித பெ. முத்துக்கருப்பப் பிள்ளை, ஆர். ஐ. எம். பி.,
தலைவர், சித்த மருத்துவ சங்கம், மதுரை. ,,

10. டாக்டர் டி. வி. கல்யாணசுந்தரம், ஆர். ஐ. எம். பி.,
தலைவர், சென்டிரல் சித்தா மெடிகல் கவுன்சில்,
சென்னை-600012. ,,

11. டாக்டர் என். சேதுரகுநாதன்,
தமிழ்ப்பேராசிரியர், விருதுநகர். ,,

12. திரு. நீ. கந்தசாமிப்பிள்ளை,
முன்னாள் செயலர், சரசுவதி மகால் நூலகம்,
சென்னை-600020. ,,

## சிறப்பு அழைப்பினர்கள்

1. டாக்டர் பொன். குருசிரோன்மணி, பி. ஏ., ஜி. சி. ஐ. எம்.,
முதல்வர், அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

2. டாக்டர் மு வே. ரமணன், எல். ஐ. எம்.,
பேராசிரியர், மேல் பட்டப் படிப்பு,
அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

3. டாக்டர் டி. வி. சுப்பாரெட்டி, கௌரவ இயக்குநர்,
இந்திய மருத்துவ வரலாற்று ஆராய்ச்சி நிலையம், ஐதராபாத்.

4. டாக்டர் இரத்தினவேலுசுப்பிரமணியம், பி. எஸ்ஸி.,
எம். டி., எம், ஆர். சி. பி. (லண்டன்), சென்னை-600010.



மாண்புமிகு

பேராசிரியர் க. அன்பழகன், எம். ஏ., அவர்களின்

# அணிந்துரை

முன்தோன்றிய—மூவா முதன்மொழியாம் தமிழுடனும் அதன் நாகரிகத்துடனும் பிறந்து வளர்ந்த—சித்த மருத்துவத்தின் தன்மையும் மேன்மையும் உலகம் என்றும் இழந்து விடாது காப்பது நம் கடன். தமிழகத்திலும் பிற தென் மாநிலங்களான திராவிடத்திலுத் சித்த மருத்துவம் இன்றும் பலரால்—வழிவழியாகவும் கற்றறிந்தும்—கையாளப்பட்டு வரினும் அதன் சிறப்பும் புகழும் நிலைபெறுவதற்கு நாம் ஆற்ற வேண்டிய பணிகள் பலவாகும். தமிழக அரசின் ஆதரவாலும்—இத்துறை வல்லுநர்களின் முயற்சியாலும்—மருத்துவ முறைகளும் சித்த மருத்துவமும் இடம் பெற்று வருகிறது. எனினும், அதன் தனிச் சிறப்புகள் அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக் கொள்ளுமாறு ஆய்வுகள் மூலம் நிலைநிறுத்தப்பட்டாக வேண்டும் என்பதை நாம் கருத்தில் கொண்டு செயல்பட வேண்டும். அந்த நிலை உருவாவதற்கு—ஓலைச் சுவடிகளாகவும் ஒருகாலத்தில் அச்சேறி இன்று கிடைத்தற்கரிதாகவும் உள்ள நூற்றுக்கணக்கான சித்த மருத்துவ நூல்கள்—உடனடியாகப் பதிப்பிக்கப்படல் வேண்டும். இவை வெளிவந்தால்தான், இன்று சித்த மருத்துவம் பயிலும் மாணவரும், இளம் மருத்துவரும் அவற்றைப் பயின்று பயன் பெற இயலும். மருந்து செய்முறைகளை ஒப்பு நோக்கி உண்மை தெளியவும், மருந்துகளின் தரத்தை உறுதிப்படுத்தவும், அரிய மூலப் பொருள்கள் கிட்டாத விடத்து மாற்று மூலப்பொருள்களைக் கொண்டு மருந்து செய்திடவும், மருந்து உற்பத்தியைப் பல மடங்காகப் பெருக்கி மக்களுக்குப் பரவலாகக் கிடைக்கச் செய்யவும் வாய்ப்பாகும்; பரவலாக எங்கும் எளிதில்

கிடைப்பதால் செல்வாக்குப் பெற்றுள்ள அலோபதி மருந்துகட்கு ஈடு கொடுத்து மக்களிடம் செல்வாக்குப் பெறவும் முடியும்.

எனவே, சித்த மருத்துவ நூல்கள் வெளியிடும் முயற்சிக்குத் தகுந்த நிதி உதவி வேண்டும் என்னும் எனது வேண்டுகோளை இசைவுடன் ஏற்று அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவல் குழுவினரும்-அதன் முன்னாள் தலைவர் திரு. பு. மனோகரன் அவர்களும்—இதற்காக இரண்டு இலட்சம் ரூபாய் நிதி ஒதுக்க முன்வந்ததுடன், சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்கென டாக்டர் இரா. தியாகராஜன், எல். ஐ. எம். அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவையும் அமைத்துச் செயல்படுத்தலாயினர்.

இக் குழுவின் தலைவரும் உறுப்பினர்களும் ஆர்வத்துடன் ஈடுபட்டு ஆற்றிவரும் நற்பணியும்—பல்வேறு வகையிலும் அவர்கட்குத் துணை நிற்போர் ஆற்றும் பணியும்—இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால் அவர்களின் இயக்குவித்திடும் திறனும் எனது பாராட்டுக்குரியனவாகும்.

அருள்மிகு பழநி திருக்கோயில் அறங்காவலர் குழுவினருக்கும் அக் குழுவின் தலைவருக்கும் எனது நன்றியும் பாராட்டும் உரியனவாகும்.

நாகமுனிவர் தலைநோய் மருத்துவம் என்னும் இந்த நூல் வெளியீட்டுக் குழுவினரால் தேர்ந்தெடுக்கப்பெற்று, முதலில் வெளியிடப்படும் வரிசையில் 32 வது நூலாகும். மதுரை அனுமந்தன், மதுரை முத்துக்கருப்பப்பிள்ளையின் மகன் டாக்டர் பி. எம். இராஜகோபால் ஆகியோர் ஓலைச் சுவடிகள் கொடுத்து உதவி இருக்கிறார்கள். அவர்களுக்கு நன்றி செலுத்துவதோடு, அரிய ஓலைச்சுவடி வைத்திருப்பவர்கள் கொடுத்துதவினால் சித்த மருத்துவம் மேலும் செம்மையாய் வளம்பெறவும், மக்கட்குப் பயன் படவும் வாய்ப்பாகும்.

'மிகக்கொடிய நோய்களையும், அறத்தீர்க்கும் பற்பம் செந்தூரமாகிய முறைகள், நமது நாட்டு மருத்துவத்தில் இருப்பதுபோல மற்ற மருத்துவத்தில் இல்லையென, நமது மருத்துவ நூல் பயிற்சியுள்ள ஐரோப்பிய மருத்து

வர்கள் மனப்பூர்வமாக ஒப்புக்கொள்கிருர்கள். ஆங்கில மருத்துவம், நாட்டு மருத்துவம் ஆகிய இரண்டிலும் சிறந்த பண்டிதர்களின் தீர்மானமாவது :

“அறுவை செய்தல் முதலிய இரண மருத்துவத்தில் ஆங்கில முறை வைத்தியம் மிகவும் மேலானது. மற்ற நோய்களின் மருத்துவத்தில் தற்கால சாந்தியாகச் செய் வதிலும் ஆங்கில வைத்தியமே அதிகம் சிறந்தது; ஆனால், நாட்பட்ட நோய்களையும், பெரிய நோய்களான குன்மம், நீரிழிவு, சயம், எருவாய்நோய், பாண்டு, மந்தாக்கினி, மேகம், தாது இழப்பு முதலிய கடின நோய் களையும் அறத்தீர்ப்பதற்கு நாட்டு மருத்துவ முறைகளே மிக மேன்மையானவை. அவற்றுள்ளும் முறைக் கிரம மாகச் செய்யப்பட்ட பற்ப, செந்தூரங்களே மேன்மை பெற்றவை” என்பதே.

இந்த அபிப்பிராயமானது மிகவும் சரியானதெனவும் உத்தமமானதெனவும் அதிகம் வாய்மையானதெனவும் சிறந்த மருத்துவர்களான ஒவ்வொருவரும் முழுமன தோடு ஏற்றுக் கொள்வார்கள்.

இக்கூற்று உண்மையாவதை, நவீன கருவிகள் வளர்ச்சியால் ஆலென வளர்ந்து அடர்ந்து நிற்கும் அலோபதி மருத்துவமும் ஏற்கும் வண்ணம் நடைமுறை யில் செயல்படுத்தி எண்பிக்கும் வல்லமையும், ஆராய்ச்சி முறையில் சான்றுகளை உருவாக்கும் முயற்சியும் ஓங்க வேண்டும் என்பதே எனது பேரவா.

இவ் வெளியீடு மேலும் பல நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுப்பட்டுள்ளோரை ஊக்கப் படுத்துவதற்குத் துணை செய்வதாகும் என நம்புகிறேன். அவர் தம் முயற்சி வளர வாழ்த்துகின்றேன்.

சென்னை
28-10-1975

**க. அன்பழகன்**

# முன்னுரை

---

உலக மொழிகளில் மிகப் பழமையானது தமிழ் மொழி; தமிழ் மருத்துவ முறையும் அத்தகைத்தே. இம் மருத்துவ முறையைத் தோற்றுவித்தவர் சித்தர்கள் எனப்படுவர். ஆகையால், இம் மருத்துவத்திற்குச் சித்தமருத்துவமென்று பெயர் அமையலாயிற்று. அச் சான்றோர்கள் தாம் கண்ட உண்மைகளையும் மருத்துவ நுணுக்கங்களையும் மருந்துச் சரக்குகளின் குணம் முதலானவைகளையும் மாணவர்கள் பலரை ஏற்று ஓதியும் ஓதுவித்தும், பற்பல ஏடுகளில் பதிவு செய்தும் உலகோர்க்கு உதவி செய்து தம் மருத்துவ முறைகளைப் பரப்பி வந்தார்கள்.

காலப்போக்கில், சிறிது சிறிதாய் இயற்கையின்—நிலநடுக்கம், கடற்கோள் போன்ற—சீற்றம் காரணமாகவும், வெளிநாட்டார் படையெடுப்பு, சிதலை, இராமபாணம் போன்றவைகளின் தாக்குதலாலும் பல ஏடுகள் அழிந்தவை போக மிகுந்தவைகளில் சில மேலை நாட்டு நூல் நிலையங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டன வெனக் கூறப்படுகின்றது. இன்னும் எஞ்சியுள்ள ஏடுகளாலும், அம் மருத்துவக் கலையைத் தொன்றுதொட்டுக் கையாண்டுவரும் மருத்துவர்கள் வாயிலாகவும், பல நூற்றாண்டுகளாக அதன் அடிப்படை உண்மை, தனித்தன்மை காரணமாகவும் சித்த மருத்துவம் அழியாது நிலைபெற்றிருக்கிறது.

தஞ்சையையாண்ட மராட்டிய மன்னர் சரபோஜி அவர்களின் ஆட்சிக் காலத்தில் சித்த, ஆயுள்வேத, யூனானி மருத்துவ ஏடுகள் எல்லாம் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் அரியணை ஏறின. மருத்துவப் புலவர்களின் அனுபவங்கள் ஏடுகளில் ஏறி ஏமமுற்றன. மருத்துவம் செய்முறையும் பிணித் தீர்வும் அவர் ஏற்படுத்திய தன்வந்திரி மகாலில் மறுமலர்ச்சியுற்றன. அவர் ஆட்சிக்குப்பின் சித்த மருத்துவம் அரசு ஆதரவை இழந்து பழையபடி குடிமக்களின் ஆதரவு கொண்டு ஆங்காங்கு வழக்கில் இருந்துவரலாயிற்று.

மிக அண்மையில், வெள்ளையராட்சிக் காலத்தில் நீதிக்கட்சி சார்பில் முதல் அமைச்சராகப் பணியாற்றிய பானகல் அரசர் 1924-ல் இந்திய மருத்துவப் பள்ளியைத் தோற்றுவித்து, பல கிராம மருத்துவமனைகளையும் அமைத்து இயங்கச் செய்து சித்த மருத்துவம் முதலான இந்திய மருத்துவ முறைகளின் மறுமலர்ச்சிக்கு வித்தூன்றினர். அக் காலத்தில் மேற்படி கல்வி நிலையத்தில் பயிலும் மாணவர்களுக்கு அமைந்த பாடத்திட்டப்படி கற்பிக்கப் போதிய பாடப் புத்தகங்களும், முதல் (மூல) நூல்

களும் இல்லாக்குறையை ஓர்ந்து பாடப் புத்தக ஆக்கக்குழுவை அரசு அமைத்தது. அந்நாள் சித்த மருத்துவத்துறைத் தலைமை ஆசிரியராய் இருந்த பண்டித, வைத்திய ரத்தினம், மருத்துவ சிரோன்மணி காலஞ்சென்ற க. ச. முருகேச முதலியார் அவர்கள் குணபாடம் (மூலிகை வகுப்பு) என்னும் நூலைத் தம் சொந்த முயற்சியால் இயற்றி அரசினர்க்கு நன்கொடையாக அளித்து வெளியிடச் செய்தும், குழுவினர் அரசுவழி வெளியிட்ட நஞ்சுநூல், பாலவாகடம் என்னும் நூல்களைப் பார்வையிட்டும் உதவினர். அக் குழுவினர் நூற்றுக்கும் மேற்பட்ட மருத்துவச் சுவடிகளையும், அச்சிட்ட நூல்களையும் சேகரித்து ஒரு நூல் நிலையம் ஏற்படுத்தினர்.

மேற்படி பள்ளி கல்லூரியாக மிளிர்ந்தபோது, அந்நாள் கௌரவ இந்திய மருத்துவ இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் ம. ரா. குருசுவாமி முதலியார் ஊக்கம் கொடுத்தமை காரணமாக 1950-ல் சித்த மருத்துவம், மருத்துவாங்கச் சுருக்கம், நோயில்லா நெறி, குணபாடம் (மூலிகை வகுப்பு), குணபாடம் (தாது சீவ வகுப்பு) என்ற நூல்களும் அப்போது பணிபுரிந்து வந்த கல்லூரி விரிவுரையாளர்களைக் கொண்டு எழுதுவித்து அரசுவழி வெளியிடப் பெற்றன.

அக் கல்லூரி நிகழ்ந்த காலத்திலும் பின்னர்ப் பாளையங் கோட்டைக் கல்லூரி தோன்றிய பின்னுங்கூட, பாட நூல்களும் துணை நூல்களும் நிரம்பாமை பெருங்குறையாக நீடித்து வருவ தாயிற்று.

ஆகவே, பண்டைய சித்த மருத்துவ ஓலைச் சுவடிகளையும், கையேடுகளையும், ஒருமுறை அச்சாகிப் பின் விற்பனைக்குக் கிட்டாத புத்தகங்களையும் சேகரிக்கவும், மருந்து செய்முறை அட்டவணை தயாரிக்கவும், பாடநூல்கள் வெளியிடவும் ஆகிய பணிகள் செய்ய (Pharmacopea Committee, 1966, G.O. M-S. 2163, Dt. 23-8-60) ஒரு குழுவும். சித்த மருத்துவக் கல்வி மற்றும் பாட நூற்குழு என்று (G.O. M.S. No. 1060, Health, Dt. 13-666). ஒரு குழுவும், திருவருட்பா, திருப்புகழ் முதலியவைகளில் உள்ள மருத்துவப் பகுதிகளை ஆய்வதற்காக ஒரு குழுவும் எனத் தமிழக அரசு குழுக்களை ஏற்படுத்தியது அதன் விளைவாக அறுவை மருத்துவம், சூல் மருத்துவம் என்ற நூல்கள் வெளிவந்தன.

மீண்டும் விரைவில் பயன்காண வேண்டி 1973ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 15ஆம் நாள் தமிழக அரசினர் மேற்கூறிய குழுக்களை ஒருங்கிணைத்து சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக்

குழு என்னும் ஒரு குழுவைத் (G.O.M.S. No. 2571 of 23—10—73) தோற்றுவித்தார்கள், அக் குழுவின் பணிகளாவன: சித்த மருத்துவ அரிய சுவடிகள், கையேடுகள், அச்சாகிய பழைய நூல்கள் ஆகியவைகளைச் சேகரித்துப் பாதுகாத்தல்; ஓலைச் சுவடிகளை ஆய்ந்து கையெழுத்துப்படி, தட்டெழுத்துப்படி முதலிய வைகளை எடுத்து அச்சியற்றி வெளியிடல்; ஒருமுறை அச்சில் வெளிவந்து விற்பனைக்குக் கிடைக்கப் பெறாத நூல்களை மீண்டும் வெளியிடல்; இதுவரை அச்சிடப்பெறாத நூல்களை வெளியிடல் என்பனவாம். அதன்படி இக் குழுவினர் இதுவரை 400 சுவடி களையும், 100 கையெழுத்துப்படிகளையும், 230 அச்சான பழைய நூல்களையும் சேகரித்துள்ளனர்.

இக் குழுவினர் தாம் மேற்கொண்ட பணிகளைச் செய்லாற்ற, இந்திய மருத்துவத்துறை இயக்குநர் அலுவலத்தில் ஒரு தனி அலுவலரையும், அவர்களுக்கு உதவியாளர்களையும் நியமித் துள்ளனர். அவர்கள் நூல்களைப் படியெடுத்துத் திருத்தம் செய்து அச்சியற்றத் தக்க வகையில் செய்துவருகின்றனர்.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிதியிலிருந்து சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்கென்று ஒதுக் கப்பட்ட இரண்டு இலட்சம் ரூபாயைக் கொண்டு மேற்படி நூல்களை நடைமுறைச் சிக்கல்களைத் தவிர்த்து வெகுவிரைவில் வெளியிட மேற்படி சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழுவிலுள்ள உறுப்பினர் சிலருடன், அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர்க் குழுத்தலைவர் அவர்களையும், மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியையும் கொண்டு அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு ஏற்படுத்தப்பட்டது. அக் குழு முடிவெடுத்தபடி முதல் வெளியீட்டு வரிசையில், 32வது நூலாக வெளிவருவது நாகமுனிவர் தலைநோய் மருத்துவம் எனும் நூலாகும். இந்நூலுக்குரிய ஓலைச்சுவடியை மதுரை அனுமந்தன் மதுரை பண்டிட் முத்துக்கருப்பப்பிள்ளையின் மகன் டாக்டர் பி. எம். இராசகோபால் ஆகியோரால் அளிக்கப்பட்ட ஓலைச்சுவடி களிலிருந்து எடுத்துப் பதிப்பித்ததாகும். இந்நூலுக்குரிய சுவடி களைக் கொடுத்துதவிய மேற்கண்டவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

இந்நூலுள், மண்டையில் தோன்றும் கபால கரப்பன், கபால குட்டம், கபால பிளவை, கபால திமிர்ப்பு, கபால கனப்பு, கபால வலி, கபாலவரட்சி, கபாலசூலை, அமுத வாத-பித்த-சிலேற்பனம்-வரட்சி, சன்னிசூலை, இரத்தசூலை, செவிச்சூலை, செவிச்சன்னி,

கண்நோய்கள், ஆகிய நோய்களின் குறிகுணம், மருத்துவம் முதலியவை விளக்கப்பட்டுள்ளன.

மேற்கண்ட அரிய நூல்களின் வெளியீட்டுப் பணிக்குப் பெருந் தொகை தேவைப்படுவதால், இப் பெரும் பணியை விரைவில் செயல்படுத்த உளங்கொண்ட நம் தமிழக அரசின் நல்வாழ்வுத் துறை அமைச்சர்மாண்புமிகுபேராசிரியர் உயர்திரு. க. அன்பழகன், எம். ஏ. அவர்கள் போரார்வங் கொண்டு மேற்படி பணிமுட்டின்றி முடிவதற்கு அரசு நிதியிலிருந்து ஆண்டொன்றுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் வழங்க ஆணை பிறப்பித்தார். மேலும் அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழு முன்னுள் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களைக் கொண்டு முதல் தவணையாக மேற்படிதிருக்கோயில் கருவூல நிதியிலிருந்து இரண்டு இலட்சம் ரூபாயை ஒதுக்கி வழங்கச் செய்தமையும், சித்த மருத்துவ நூல்கள் விரைவில் வெளியாக வாய்ப்புத் தேடித் தந்தமையும், காலஞ்சென்ற டாக்டர் ஜி. டி. நாயுடு அவர்களைக் கொண்டு காலஞ்சென்ற திரு. டி. வி. சாம்பசிவம் பிள்ளை யவர்கள் தொகுத்து வைத்திருந்த மருத்துவப் பேரகராதியின் முதல் மூன்று பகுதிகளையும் பிற சித்த மருத்துவ இலக்கிய நூல் களையும் அச்சிட்டு வெளியிடச் செய்தமையும் அமைச்சர் பெரு மகனுர் சித்த மருத்துவ மறுமலர்ச்சிக்கு முழுமனதுடன் ஆற்றி வரும் செயற்கரிய ஆக்கச் செயல்களாகக் கூறிப் பெருமிதமடை யலாம். இதற்குத் தமிழகம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி திருக்கோயில் அறங்காவலர் குழுவின் முந்நாள் தலைவர் உயர் திரு. பு. மனோகரன் அவர்கள் தமக்குள்ள பற்பல அறப்பணிகளுக்கிடையேயும் இக் குழுவின் கூட்டங்களில் பங்கு கொண்டு, நூல் வெளியீட்டுக்கான பற்பல வழிமுறைகளையும், ஆலோசனைகளையும் வழங்கி வெளியீட்டுப் பணி ஊக்கமும் ஆக்கமும் பெற்றுத் தங்குதடையின்றி நூல்கள் வெளிவர, மேற்படி திருக்கோயில் நிதியிலிருந்து மேற்படி அறங் காவலர் குழுவினரைக் கொண்டு முதல் தவணையாக இரண்டு இலட்ச ரூபாய் வழங்கச் செய்ததோடு, சித்த மருத்துவக் கல்லூரி ஒன்று பழநியில் தோற்றுவிக்க உடன்பட்டமைக்கும், சென்னையில் மத்திய சித்த மருத்துவ நூலகம் ஒன்றை நிறுவக் கட்டடம் கட்டித்தர முயன்றமைக்கும் இக் குழுவினரும், இதில் பணியாற்றி வருபவர்களும் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் ஆவார்கள்.

மேற்படி அறங்காவலர் குழுத்தலைவர் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து ஒத்துழைத்து வரும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரி அவர்களுக்கும், இப் பணி நிறைவுபெற ஆக்கிய தீர்மானங்களுக்கு ஒப்புதல் அளித்து வரும் இந்து சமய அறநிலையப் பாதுகாப்புக் குழுத் தலைவர் உயர்திரு கே, எஸ். நரசிம்மன், ஐ.ஏ.எஸ்., அவர்களுக்கும் இக் குழுவினரின் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

இக் குழுவினர் பணியாற்றுவதற்கு ஏற்ற இடவசதியும், பிற வசதிகளும் தம் அலுவலகத்தின் ஒரு பகுதியில் கொடுத்து, பணி இடையீடின்றி நடைபெற வேண்டிய ஆலோசனைகளும், ஊக்கமும் அளித்துவரும் இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு, வேணுகோபால், எச். பி. ஐ. எம்., அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அச்சடிக்கும் தாள்கள் அடக்க விலையில், திருவாளர்கள் சேஷசாயி பேப்பர் மில்சாரிடமிருந்து மிக விரைவில் கிடைக்கும்படி செய்த முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களுக்கு இக் குழு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளது.

மற்றும் இந் நூல்களை அச்சியற்ற ஏற்றவண்ணம் மூலப்படிகளைத் திருத்தம் செய்வித்தும், கருத்துரைகள் தந்தும் இக் குழுவுக்குத் துணை புரிந்துவரும் தனி அலுவலர் டாக்டர் வி. விசுவநாதன், எல். ஐ. எம். அவர்களையும், அன்னாருக்குத் துணைபுரிந்து வரும் டாக்டர் மு. சௌரிராசன், புலவர்கள் வை. முரு. முத்துக்குமாரசாமி, வி. செ. விநாயகம், தா. சிங்காரவேலு ஆகியவர்களையும் இக்குழு மனமுவந்து பாராட்டுகிறது.

இந்நூலைக் குறுகிய காலத்தில் அழகிய முறையில் அச்சியற்றிய பூம் பிரிண்டர்ஸ் அச்சகத்தாரின் சேவைக்கு இக் குழு மனமுவந்து பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது.

சான்றோர் மிகுந்த இவ்வுலகு இந் நூல்களில் காணும் குற்றங்கண்டு முனியாது நனியாதரவு தந்து எம்மை ஊக்குவிக்குமென்ற துணிவுடன் நூல்களை வெளியிடுகின்றனம்.

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
தலைவர்,
அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
திருக்கோயில் சித்த மருத்துவ நூல்
வெளியீட்டுக் குழு.

இந்திய மருத்துவத்துறை
இயக்குநர் அலுவலகம்,
சென்னை-600 029.

## தலைநோய் மருத்துவம்

## பொருளடக்கம்

தலைநோய் மருத்துவம்

பொருளடக்கம்

முற்றிற்று.

———

# நாகமுனிவர்
# தலைநோய் மருத்துவம்
## (சிரரோக விதி)

——

வேதநான் முகத்தோ னுன்ற வேதத்தில் விரித்துச் சொன்ன
கோதிலா வியல்பி னுலே குறு முனி யருளிச் செய்தார்
ஆதலால் தமிழி னுலே யாய்ந்துணர்ந் தவரு ரைத்த
தீதிலாச் சிரரோகத்தைத் தெளிந்துநீ யறிந்து கொள்ளே. 1

கொள்ளவே குருவின் பாதம் கூர்ந்துமே தேர்ந்து நின்று
வள்ளலைப் பணிந்து போற்றி மாசற்ற சுடரை நோக்கி
உள்ளத்தி லழுக்கை மாற்றி யுருகவே பெருகு மென்று
தள்ளையின் பாதந் தன்னைச் சாட்சியாய்ப் போற்று வாமே. 2

### நோய்த் தொகை

பூவுளோ னரியும் போற்றும் புங்கவன் ருளைப் போற்றி
மேவுமா மறைகள் தம்முள் விரித்துரை முன்னோர் சொன்ன
வாவுமெண் சாணு நீள மதிலுறுப் பெண்ணுன் கென்றும்
பாவியே யதனில் ரோகம் இன்னமும் பகரக் கேளே. 3

பகரநா லாயி ரத்தி நானூற்று நாற்பத் தெட்டுங்
புகலுறுப் பெண்ணுன் கோடும் பொருந்திடும் பெண்ணே கேளாய்
சிகையுறு சிரசில் நோய்தான் செப்பிலா யிரத்தெட் டாகும்
வகையுறு பேர்சாத் தியம சாத்தியம் வழுத்த லாமே. 4

மேவிய வுச்சி தன்னில் விளம்பிய வியாதி செப்பில்
காவியங் கண்ணி னுய்கேள் கருதியே நாற்பத் தாறு
சீவிய வமுர்த மீது சேருநோய் பதினு றுக்கும்
பாவலர் உரைத்தார் காதில் பற்றிய வியாதி நூறே. 5

நூலவ ருரைத்தா ரான்ற வேதத்தில் நுவலு மாறும்
ஏலவார் குழலி னுளே யியம்பிய நாசி தன்னில்
சாலநோ யெண்பத் தாறும் சத்தியம் விழியில் ரோகம்
மேலும்தொண் ணூற்ரு றென்றே விரித்துரை விளம்பி னுரே. 6

நாரியே யலகி ரண்டில் நாதனு ருரைத்த ரோகம்
சீரிய முப்பத் தாறும் சிறந்திடும் கவுளி ரண்டில்
வார்முலை மானே நாற்பத் தொன்பதாம் வலிசே ரீறில்
சேரும் நோய் முப்பத் தேழாம் என்றுதான் செப்ப லாமே. 7

ஆகுமெண் ணுன்கு தந்த மதனில்நோய் நாற்பத் தைந்தாம்
தோகையே சிகுவை தன்னில் ரோகமுஞ் சொல்லும் காலை
நாகமா முனியு ரைத்தார் முப்பத்து நாலா மென்ன
பாகமா யறியுண் ணுக்கில் பற்றுநோ யிருப தாமே. 8

தானமா மிதழி ரண்டில் சாருநோய் பதினு ருகும்
மானனு யிலாடந் தன்னில் வைகுநோ யிருபத் தாரும்
ஊனமில் கண்ட மீதி லுதித்தநோய் நூரு மென்னின்
பானலங் கண்ணிக் கீசன் பகர்ந்துரை வேத மாமே. 9

மெல்லிநல் லாளே கேளாய் விளம்பிய பிடரிதன்னில்
புல்லுநோ யெண்பத் தெட்டு பொருந்திடும் புருவந் தன்னில்
சொல்லிய பதினுருகும் தோகையே கழுத்தின் மீது
தில்லையு ளாடி சொன்னுர் தெரிந்துகொள் முப்பத் தாறே. 10

ஆதியெம் மிறைவன் கூறு மாமறை தன்னிற் சொன்ன
நீதிசேர் சிரசில் ரோகம் நிகழ்த்திலா யிரத்தோ டெட்டில்
ஆதியெண் ணுற்று நாற்பத் தேழுமே யுணர்ந்தால் நின்ற
தீதில்நூற் றறுபத் தொன்றும் தேகமெண் சாண தாமே. 11

## உச்சிநோய் வரக் காரணம்

கனத்திடுஞ் சுமைக ளாலும் கடுவெயி லுழல்த லாலும்
நினைத்திடும் எண்ணெய் தன்னை நாள்பட்டு முழுக லாலும்
புனக்கொடி மடநல் லாரை விடாதுறப் புல்கை யாலும்
சினத்தடி படுகை யாலும் சிரசில்நோய் சேரும் காணே. 12

இருசெவி நாசி யூடே யீவண்டு மேறி னுலும்
முருகவிழ் குழலீர் கானற் சுனையிடை முழுகி னுலும்
மருவிய லகிரி யாலும் மயலுற வருந்தி னுலும்
சிரமிசை யனேக தோடம் சேர்ந்திடும் திருவி னல்லாய். 13

## உச்சி நோயின் வகை

எண்ணிய சிரசின் மீதே யிப்படி வகுத்துச் சொன்ன
வண்மையா முறுப்புப் பத்தோ டேழதா மதனி லுச்சி
நண்ணிய வியாதி நாற்பத் தாறையும் நவிலக் கேண்மோ
நுண்ணிய பொருளை யீந்தோர்க் குணர்த்திய நூலி தாமே. 14

அன்னநடை மின்னேகேள் ஆனமறை யுட்டெரிந்து
சொன்னசிர ரோகத் தொகுதியினில்—முன்னமே
ஆன்ற கபாலத்தி லாங்குதித்த நோய்க்குணமும்
தோன்றுபேர் மீட்சிகுறி சோர்வுதங்கள்—ஊன்றுங்
கருவி பலமருந்து காரமொடு ரெட்சை
யுருமுதலா யித்தனையு மோதுமென்—றெருவை
யெழுந்து கபாலத் தலமுழங்கும்—பெருவாயு
வந்தஒரு பால்வாயு வளர்பித்த—மந்தமுறு
சேற்பனமிம் மூன்றும் சேர்தோட மூவாறும்
கோற்றெடியே யெண்பான் குலாவு நோய்—மாற்றமாய்த்
தீரா வியாதியாந் தேரை செறிகதமும்
ஊரும் கரப்பானுெய்யாறும்—நேரான
குட்டமைந்து நீள்பிளவை பத்துக் கொடுந்திமிர்ப்பும்
இட்டமுற ரெண்டோ டிருகிருமி—துட்டக்
கனப்பொரு மூன்று கபாலவலி யொன்று
சினத்தகுத் தொன்றுசிர வறட்சை—கனப்புடைய
சூலையொரு மூன்றுடனே தோடமொன்று தோகையே
சாலநாற் பத்தாறும் சாற்றும்கால்—மூலமாம்
வாயுமுதல் பத்தில் வருந்தாது தீர்நோய்கேள்
காயுமிரு மூன்றும்கா ணீரரண்டுந் —தூய்தாகத்
தீரா தெனவுந் தெளிந்துரைத்தா ரப்பெயர்கள்
நேராக யானும் நிகழ்த்துவேன்—கார்குழலீர்
பக்கத்தில் வாயு பயித்திய வாதமொடு
தக்கசேற் பனவாதம் சாற்றுங்கால்—மிக்கதோர்
வாதசிலேற் பனமும் மாரு வியாதியிது
ஓதுநற் சாத்தியமா மொன்றும்—தீதில்லா
வாயுவொடு வாதபித்த மாம்பித்த சேற்பனமும்
ஆய்சேற் பனபித்த மையிடுே—டேயதொரு
பித்தமுத லாறும் பேர்குணத்தை—ஒண்டொடியே
உத்தமமாய்க் கேட்பா யுகந்து. 15

## உடம்பில் பொருந்திய உறுப்புகள் 32

அவையாவன :— உச்சி, மூளை, நெற்றி, கண், காது, நாசி, வாய், புருவம், பல், ஈறு, கன்னம், அலகு, நாக்கு, தொண்டை, பிடரி, கழுத்து, நெஞ்சு, முலை, கை, விலா, உதரம் (வயிறு), ஈரல், குடர், உந்தி (கொப்பூழ்), இலிங்கம், அபானம், அண்டம், அரை, முதுகு, கால், நகம் என்பன.

இவ் வுறுப்புகளைப்பற்றிவரும் நோய்கள் 4448 ஆகும். அவற்றுள் சிரசைப்பற்றி வரும் 1008 நோய்களில், உச்சிமுதல் கழுத்து ஈருகிய பதினேழு உறுப்புகளிலும் வரும் நோய்களின் தொகை :

உச்சியில் (கபாலத்தில்) 46, மூளையில் (அமிர்தத்தில்) 16- காதில்-100, நாசியில்-86, கண்ணில்-96 அலகில்-36 கன்னத்தில் 49, ஈறில்-37, பல்லில்-45, நாக்கில் 34, உண்ணுக்கில்-20 இதழில்-16, நெற்றியில்-26, கண்டத்தில்-100, பிடரியில்-88, புருவத்தில்-16, கழுத்தில்-36 ஆக 847 ஆம். இவற்றுள்,

### உச்சி (கபால) நோய் 46-ன் வகை

வாதாதி முக்குற்றங்களினுலும்-10, கபாலத் தேரை-1, கபாலக் கரப்பன்-6, கபாலக் குட்டம்-5, கபாலப் பிளவை-10, கபாலத் திமிர்ப்பு-2, கபாலக் கிருமி-2, கபாலக் கணப்பு-3, கபால வலி-1, கபாலக் குத்து -1, கபால வறட்சி-1, கபால சூலை-3, கபால தோடம்-1, ஆக 46. கபால பாரிச வாதத்தையும் கபால வாதத்திலடக்கி-45 என்று ஓரிடத்திற் கணக்கிட்டனர். இவற்றுள்,

### வாதாதி முக்குற்றங்களினுல் உண்டாகும் 10-ன் விவரம்

வாதம், பித்தம், சிலேற்பனம் ஆகிய மூன்றும் தனித்தனியே மிகுந்து சேட்டித்தலால் ஒவ்வொன்றும், இரண்டிரண்டாகக் கூடித் தொந்தித்தலினுல் ஒவ்வொன்றில் இவ்விரண்டு பேதம் தோன்றி ஆறும், வாதம் கபாலத்தின் ஒரு புறத்தில் நிற்றலினுல் ஒன்றும் ஆகப் பத்து.

வாதம் இரண்டு பங்கும், பித்தம் ஒரு பங்குங் கூடித் தொந்திப்பது வாத பித்தத் தொந்திப்பு என்றும்; வாதம் இரண்டு பங்கும் சிலேற்பனம் ஒரு பங்குங் கூடித் தொந்திப்பது வாத சிலேற்பனத் தொந்திப்பு என்றும்; பித்தம் இரண்டு பங்கும், வாதம் ஒரு பங்குங் கூடித் தொந்திப்பது பித்தவாதத் தொந்திப்பு என்றும்; பித்தம் இரண்டு பங்கும், சிலேற்பனம் ஒரு பங்குங் கூடித் தொந்திப்பது பித்த சிலேற்பனத் தொந்திப்பு என்றும் ; அங்ஙனமே சிலேற்பனம் இரண்டு பங்கும், வாதம் ஒரு பங்குங் கூடித் தொந்திப்பது சிலேற்பனவாதத் தொந்திப்பு என்றும் ; சிலேற்பனம் இரண்டு பங்கும், பித்தம் ஒரு பங்குங் கூடித் தொந்திப்பது சிலேற்பன பித்தத் தொந்திப்பு என்றும் கூறப்படும்.

வாதம் முதலிய மூன்றும் கூடித் தொந்திப்பதனுல் தோடம் அல்லது சன்னி பிறக்கின்றது.

இனி, மேற்கூறிய கபால (வாயு) வாதம் முதலிய பத்தினுள் கபால வாதம், கபால பித்தம், கபால வாதபித்தம், கபால பித்த சிலேற்பனம், கபால சிலேற்பன பித்தம், கபால சிலேற்பனம் என்னும் ஆறும் சாத்தியம் ஆகும். கபால பாரிச வாதம், கபால பைத்திய (பித்த) வாதம், கபால சிலேற்பன வாதம், கபால வாத சிலேற்பனம் என்னும் நாலும் அசாத்தியமாகும். தீரினும் சுத்த மாகத் தீராதென்பார், 'தூய்தாகத் தீராது' என்றார் ஆசிரியர்.

இனி, ஒவ்வொரு நோயின் குணமும், சிகிச்சையும் முறையே கூறுவான் தொடங்கி, முதலிற் கபால ரோகம் பத்தின் குணமும் சிகிச்சையும் கூறுகின்றார்.

### சாத்தியம் 6-ல் கபால வாயுவின் குணம்

மண்டை யிடிக்கும் பிடரி கனக்கும் வலதுபுருவத் திடைகுத்தும்
துண்ட மடைக்கும் செவியிரைக்கும் துளிக்கும் கண்ணீர் துயரமிகும்
மண்டு நீரு மிமைகனக்கும் மலைபோல் கண்ணும் தெரிவரிதாய்
மண்டை முழுதும் பரந்துகுத்தும் வருத்தும் கபால வாயுவிதே. 16

இருசெவி யடைக்கு மண்டை யிடித்திடு மிரைச்ச லுண்டாம்
கருவிழி புகையும் கண்டம் கரகரத் திரும லுண்டாம்
மருவிய வலகி ரண்டும் கடுத்திடு மண்ணு வெங்கும்
எரிவது போல வாகும் கபாலத்தில் வாயு வீதே. 17

### கபால வாயுவின் குற்றம்

செறுத்திடும் வாயு நின்று சில்லெனப் பறந்து சிக்கும்
முறித்திடும் செவியில்புண்ணுய் ஒடுவிழுந் துலைந்து நாறும்
சிறுத்திடு மிடையி னுளே சினத்திடர் சிரத்தில் குத்தும்
மறுத்துமிக் குணங்க பால வாயுவின் ரோகந் தானே. 18

### கபால வாயுவுக்கு அசனவில்வாதி எண்ணெய்

மின்னிடை மின்னே வேங்கைக் காதல்கூ விளைவேர் சீந்தில்
நன்னில மிளகு தான்றி நாரியோ டமுக்கு ராவேர்
இன்னமு முகாவேர் நொச்சி காஞ்சிரை யதன்வேர் வள்ளி
சொன்னலா மிச்சு முத்தம் சொல்லிரு வேலி கேளே. 19

கேளாய் திரிபலை திரிகடுகு கிளரும் சித்திர மூலமுடன்
தாளா தொன்று பலம்பத்துத் தண்ணீர் தூணி தனிலிட்டு
மாளாத் தீவைத் தெட்டொன்றாய் வடித்துக் கையா னீர்வள்ளி
வாளார் விழியாய் கொடுப்பை புடோல் வனச வளைய முட்டியுமே

இவையோ ரொன்று சாறுரிகொள் எண்ணெய் ரெண்டு படிகூட்டு
கவிலைப் பாலு மிளநீரும் கலந்து கற்கம் சாதிக்காய்
புவியில் கிராம்பு அதிவிடையம் புகலு மதுரம் தாரமுடன்
நவிலு மாஞ்சில் மஞ்சிட்டி நாட்டி லவங்கம் பத்திரியே. 21

ஏல மகரப் பூக்கோட்ட மியலா ரரத்தை கச்சோலம்
மேலும் திப்பிலி மூலமுடன் விளாவி னரிசி செண்பகப்பூ
கோல சந்தனம் கற்பூரம் கொள்ளொவ் வொன்று முக்கழஞ்சு
சால வரைத்துக் கரைத்து வெந்து தைலம்பதத்தில் வடிப்பதுவே.

வடித்தே யெண்ணெய் முழுகிவர மானே கபால வாயுவினல்
அடைக்கும் செவியும் துறக்குமிடி ரொடுவு மாறும் திமிர்போகும்
துடிக்கும் காம்புள் வாயுவறும் தொண்டை தெளியும் உண்ணுவுள்
வெடிக்கும் வறட்சை யிவைமுதலா யனேக வியாதி தீர்ந்திடுமே

## கபால வாயுவுக்குச் சாரணை நெய்

சாறடை வீழி வேலி சம்பீர முருங்கை காலி
வீறுள கொன்றை தோடை விளம்பிடும் வாயும் வாகை
மாறிடா தொக்க வோரொன் றெருபடி சாறு கூட்டி
வேறுநெய் நாழி விட்டால் மேல்மருந் தினிச்சொல் வேனே. 24

கடுக்கா யுள்ளி கால்பலமும் கடிய இந்துப் பொருபலமும்
முடுக்கும் சிவதை ஒருபலமும் மூன்று கழஞ்சு பெருங்காயம்
அடுக்கும் வசம்பு விளாலரிசி அரிய காந்தம் கெந்தகமும்
எடுக்கும் மருந்து தள்ளாமல் இவைதா னரைத்துக் கரைப்பதுவே

கரைத்திது காய்ச்சிக் கற்கம் கலந்துட னருந்து வோர்க்கே
உரைத்திடுங் கபால வாயு ஒடுவிழும் சீழி ரத்தம்
விரைகுழல் மானே யெல்லா வியாதியுந் தீரு மென்றே
கருத்தினு லுரைத்தார் முன்னேர் வாகடம் கருது வோர்க்கே. 26

## கபால வாயுவுக்கு உள்ளிக் குழம்பு

வெள்ளுள்ளிச் சாறு நாழி விளங்கிஞ்சிச் சாறு நாழி
கள்ளவிழ் முருக்குத் தும்பை காணத்தின் சாறு நாழி
வள்ளியின் சாறு நாழி வளர்நொச்சி வேளை மேனி
உள்ளதோர் சாறு நாழி உறவெல்லாம் கலந்து காய்ச்சே. 27

திரிகடு கிருசீர் காயம் திப்பிலி மூல மிந்து
நறுவிய விளங்க மேலம் நற்கெந்தி சிவதை ரோணி
உறுவசம் புள்ளி ஓமம் சூதம்நற் கந்த மொக்கக்
குறிசமன் கூட்டிக் கொண்டால் கொதித்தெழும் வாயு போமே. 28

## கபால வாயு, ஒடுநீர்ப்பாய்ச்சலுக்குப் புகை

துலங்கு லிங்க மொன்றரையும் துரிச தரையும் பாசாணம்
நலுங்க அரைக்கால் கெந்தகமும் நாட்டி லரையு முடிதாரம்
மிலங்கக்காலு மெருக்கின்வேர்ப் பட்டைப் பொடியி லிவைபொடித்து
நலங்கொ ளெடுத்து மிசைதூவி நாவி லேழு பொழுத ருந்தே. 29

அருந்தி யேழு நாள்வெந்நீ ரடுக்க விட்டா மணக்கெண்ணெய்
வருந்தத் தேய்த்து முழுகிவர வாய்வு மிடியும் ஓடும்போம்
குரும்பை முலையாய் புளியுப்புக் கூட்டா தோர்மண் டலமுண்டால்
பொருந்தும் சரீரம் வச்சிரமாம் போகும் கபால வாயுவுமே. 30

## கபால பித்த குணம்

மண்டைப் பித்தகுணந்தன்னை வழுத்தக் கேளாம் வறட்சை யுண்டாம்
பண்டை விழியும் புகைந்துவரும் பருகு மசனம் சிறுத்துவரும்
துண்டப் புருவத் திடைகுத்தும் தூய நாவுங் கசந்திருக்கும்
கண்டக் காலே கண்மூடும் காந்தும் கரமும் பாதமுமே. 31

மேவு மலநீர் சிவந்திருக்கும் மெய்யே நடுக்கும் தலைவலிக்கும்
பாவு முடம்பின் மயிர்சிலிர்க்கும் பாண்டம் வெளுக்கும் கிறுகிறுக்கும்
காவி யனைய கண்மடவீர் கைகா லயர்ந்து தள்ளிவிடும்
மேவும் செவியில் சில்லென்னும் விக்கல் வாந்தி மிகுந்திடுமே. 32

மேனி வெளுக்கும் தலைசுழலும் வெய்ய பொருத்துக் கடுத்துளையும்
வாய்நீர் பெருத்து வயறளற்றும் மலமும் சலமும் மஞ்சணிக்கும்
தேனீ போலே செவியிரைக்கும் சில்லென் றடைக்கும் தேன்
மானே யனலின் பொறிபோல வந்தே பறக்கும் மங்கிடுமே.[விழியில்

## சன்னிவாதாடி மாத்திரை

வாதாடு வெள்ளைசிவன் விந்துலிங் கம்காந்தம்
வகைசம னரைக்கழஞ்சு
வசம்புவெள் ளுள்ளிகரு நாவிசனி நாயகம்
மால்கெந்தி அன்னபேதி

சூதாடு வெண்பிசின் வெண்பொரிகார் கரியசீர்
சுக்குபூ லாவின்வித்தும்
தொகையோர் கழஞ்சுமுசு றண்டம்ஐங் கூறுநிறுத்
தேவடயிலை ரசம்விட்டரை

சூதாம சனக்கடுகுப் பிரமாணம் உண்டைசெய்
காயவே உலர்த் திச்செப்பில்
சுருள்தரும் இஞ்சியின் சுரசமதி லொன்றிடு
அறுபத்து நாலுசுரமும்

ஏதேது சன்னிபதின் மூன்றுவலிக் குஞ்சூடன்
இளைப்பிருமல் வாயுகுன்மம்
எங்கென்று தெரியாது பண்டிதர் குடோரியா
மிதுசன் னிவாதாடியே 34

## கபால பித்தத்துக்குக் குமரி யெண்ணெய்

குமரிச் சாறு நாழுழி கோட்டம் நறும்பிசின் மஞ்சிட்டி
யமரச் சோல மட வியினில் அரிய கச்சோல மேல்தோல்
தமரி லவங்கம் பச்சிலைகற் பூரமகில் சந்தனம் குங்குமம்
நமதஞ் சனக்கல் கடுகுரோணி நல்விலா மிச்சிரு வேலிவேர். 35

வேண்ட தாவரிசி நாகப்பூ மிக்கமதுரம் மின்னேகேள்
கண்ட தகரம் செங்கழுநீர்க் கிழங்கு தாமரை வளையமுடன்
நீண்ட சாதிக் காயுடனே நிகழ்த்தும் தக்கோ லம்புடலே
காண்டற் கரிய கண்டில் வெண்ணெய் கருதும் வெறியீ றில்கிழங்கே.

இவையோர் கழஞ்சு கொண்டே எண்ணெ யான்பால்சரி கூட்டிப்
புகவே விட்டுக் கடைச்சரக்கும் பொருந்த வரைத்துக் கரைத்து வெந்து
மிகவே மெழுகு பதமானல் மே·பி வடித்து முழுகிவரப்
பகையே செய்யும் கபாலபித்தம் பதறிக் கதறி யோடிடுமே. 37

## குமரி எண்ணெய்—வேறு

சொல்லும் குமரி நீர்குறுணி தூய ஆன்பால் குறுணிவிட்டு
நல்ல எண்ணெய் நானுழி நவிலு மருந்து நான் சொலக்கேள்
புல்லும் தாமரை வளையமுடன் பொருந்தும் செங்கழு நீர்க்கிழங்கு
வல்ல கொட்டிக் கிழங்குமுத்தம் மருவும்மிச் சிலுப்பைப்பூ. 38

பூவிரு வேலி புன்னைப் பூந்தாது பொருந்தும் சந்தம்
காவி லேலை மிலவங்கம் கரிய அகில்பச் சிலையுடனே
தாவு நாகப் பூமதுரம் தகரம் கோட்டம் குந்திருக்கம்
பாவு நாகண மாஞ்சில்மஞ்சள் பகர்கம் பிப்பிசின் நறும்பிசினே. 39

நேரே சொல்லும் கடைச்சரக்கு நிறைநாற் கழஞ்சா மோரொன்றும்
சேரே யரைத்தே யெண்ணெயுடன் திரளப் பதத்தில் வடித்தாக்கால்
வாராய் தலையி லுடம்பிலிட மண்டைபித்த மோடிடும்போய்
யாரா கிலும்போ யழைத்தால் அரனு ராணை வாராதே. 40

## சிரசு பித்தத்துக்கு நெல்லிக்காய் எண்ணெய்

ஓதும் நெல்லிக் காயுடனே யுறுமிலா மிச்சம் வேர்முத்தம்
போதச் சீந்தில் ஒரொன்று பொன்னே யிருபது பலமாக
வேதப்படியே யிருதூணி நீரில் விரவி யெரித்தாக் கால்
மாதே குறுணி யாகியபின் வடிக்கும் கற்கம் வகைகேளே. 41

கேளாய் வளையம் பூவல்லி கிளரும் அரிசி வகையாறும்
தாளார் செங்கழு நீர்க்கிழங்கு தாவும் கொட்டிக் கிழங்கு புன்னை
நாளா தாது லாமிச்சம் நன்னரி யிவையின் வேர் சந்தமகில்
தூளா மேல மில வங்கம் சொல்லும் கோட்ட மதுரமுமே. 42

மெய்யே செஞ்சந் தனமுடனே மிக்க சீவக மிடவகமும்
துய்ய சாதிக் காயதுவும் துலங்கும் தக்கோலப் பொட்டில்
செய்ய நல்ல கண்டில்வெண்ணெய் திரள்முந் திரிகை பச்சிலையும்
வெய்யாமீறில் கிழங்கதுவும் வேருஞ் சாளக நாகணமே. 43

கடல்நுரை மாஞ்சில் புனுகுசட்டம் கருதிவை யோரொன்றிரு கழசுஞ்
உடனே யிளநீ ரிருநாழி யோது மெண்ணெய் நாழிவிட்டுத்
திடமாய் முன்சொல் கடைச்சரக்குஞ் சேர விஞ்சிச் சாற்றிலரைத்
தடைவே யான்பா னுழிவிட்டே யாக வெந்து வடிப்பதுவே. 44

## குமரிவேர் எண்ணெய்

கற்று ழையின்வேர் நூறுபலங் கடுகத் தறித்துப் பதக்குநீர்
அத்தோ டொக்க விடுகாய்ந்தே யாக நாலொன் றதுவானால்
முற்றுக் குரும்பை நீர்நாழி முன்னே யிளநீ ரிவைநாழி
நற்று ரணியி லெள்ளெண்ணெய் நவிலும் பாலுங் குறுணி கொள்ளே,

கொள்ளே கலந்த திற்கற்கம் கூறும் சந்தம் மகிலேலம்
நள்ளே யணைய செஞ்சந்தம் நாடி லவங்கம் கோட்டமுடன்
தள்ளா மதுரம் பச்சிலையும் சாதிக் காய்தக் கோலமுடன்
கள்ளார் முந்திரிகைப் பழமும் கண்டில் வெண்ணெயி றில்கிழங்கே.

சாள நாகங் கடல்நுரையும் சாற்றும் புன்னைத் தாதுடனே
வாழும் செங்கழு நீர்க்கிழங்கு வனச வளையம் பூவல்லி
கேளு மதன்கா யிலாமிச்சுக் கிளரிரு வேலி நன்னாரி
தாளு மாஞ்சில் கொட்டிக்கிழங்கு தக்க புனுகு சட்டமுமே. 47

மேவு மருந்து நாற்கழஞ்சு மின்னே யிளநீ ராலரைத்துப்
பாவு மெண்ணெ யுடன்கலந்து பகரும்குமரி மடற்சாறு
தாவு மிரண்டு படிவிட்டுத் தறுகா தெரித்து வடிகொண்டு
வாவும் சிரசில் தேய்த்தாக்கால் மண்டைப் பித்த மோடிடுமே. 48

## கபால பித்தத்துக்குச் சஞ்சீவி எண்ணெய்

சீந்தில் தண்டு பலம் பத்துச் சேர்நெல் லிக்காய் பலம்பத்துப்
போந்து லாமிச் சிருவேலி புகலு முத்தன் சேவகன்பூ
டேந்து மகிழம் பூச்சந்த மேல மிவையொன் றெண்பலங்கொள்
சாந்த முலையாய் தறித்திட்டுத் தண்ணீர் தூணி தனில்புகட்டே.

ஏலங் குழலாய் நாலொன்று யிறுத்து வடித்தா லின்னம்கேள்
மேலும் தண்ணீர் மீண்டானும் மிக்க விளநீர் கரும்பின்நீர்
சாலக் கொவ்வை நீர்கையான் சாறு நரிப்பயற் றிலைச்சாறு
சீலத் துடனிவை யோரொன்று திருந்து நாழி விடுவதுவே. 50

வேறே யாவின் பால்குறுணி மிகுநல் லெண்ணெய் குறுணிவிட்டு
ஊறிக் கலந்து காயும்போ துடனே கற்க முரைப்பக்கேள்
கூறு மிலாமிச் சிருவேலி கொடிநன் னாரி சதவேரி
நாறு முத்தங் கமலவேர் நற்செந்தங் கழுநீர்க் கிழங்கதன்பூ. 51

பூவே சந்தம் காரகிலும் பொன்னே யேல மிலவங்கம்
காவே பொருந்தும் செண்பகப்பூ கற்பூ ரமுமோ புழுகுசட்டம்
கோவே யூசிக் காந்தப்பூ கூறு மிருகச் சோலமுடன்
தாவே தக்கோ லப்பொட்டில் சாதிக் காயும் கோட்டமுமே. 52

முந்து மதுரம் சாலமுடன் மூரி நாணல் தாததுவும்
மந்தம் போக்கும் தாவரிசி மாஞ்சில் தகர முந்திரிகை
கெந்தம் தேவ தாரமொடு கிளர்சத குப்பை நறும்பிசினும்
மந்தப் புனத்தில் கண்டில் வெண்ணெய் மதுர அஞ்சனச் சயிலகமே. 53

கடுகு ரோகணி திப்பிலியும் கருதும் குங்கும மிலுப்பைப்பூ
வடிவே லனைய கண்மடவீர் மருந்தோ ரொன்று மிருகழஞ்சாய்க்
கொடுவா விளநீரி லரைத்துக் கூறு மெண்ணெ யதிற்கரைத்து
முடுகா தெரித்துப் பதத்தில்வடி முழுகப் பித்தம் முடுகாதே. 54

## கபால பித்தத்துக்குச் சீதேவி நெய்

பொன்னுங் காணி பேய்ப்புடலம் பூசணிக் காயிள நீர்கன்னல்
பொன்னு வரைமலர் வெள்ளரிப்பூ பூமி சர்க்கரை சதாவேரி
நன்னாரி சீந்தில் பற்படகம் நற்கம் பளிக்கொட் டான்பீர்க்குப்
பொன்னர் மலர்த்தா மரையின்விழுது புளிக்கு மாரை சிறுகீரை. 55

இவையோ ரொன்று நாழிசா றிளநீர் நெய்பால் சரிகூட்டிச்
சுவைசேர் நெல்லிக் காய்ச்சாறு சொலுமா தனையின் பழச்சாற்றோ
டவையே விட்டுத் திரிகடுகு பலைமூன் றதுவு மதிமதுரம்
கவைசேர் கமலப் பூவல்லி வனைய மதன்கா யிருவேலி. 56

சீனி செங்கழு நீர்க்கோட்டம் தேவ தாரம் மகிழம்பூ
வானீர் தெளிக்குந் தேற்றுவிதை வளர்செண் பகப்பூ வகைப்பூ
ஊனே யுறுகோ ரோசனையும் உறுநற் பச்சைக் கற்பூரம்
கானர் கூகை நீறுடனே மருந்தொவ் வொன்றுங் கழஞ்சிரண்டே.

ஏய மருந்தை யிளநீரில் இதமா யரைத்துக் கரைத்துவெந்து
தூய மெழுகு பதத்தில்வடி சொன்னர் பத்து நாள்கொள்ள
காயு மண்டைப் பித்தமவை கதறிப் பதறி யோடுமென
ஆயும் மறையை யிறையவர்முன் அறிய வுரைத்தா ரம்பிகைக்கே 58

## மண்டைப் பித்தத்துக்குக் குடிநீர்

மண்டைப் பித்தம் சுழற்றுதென்று மயங்கி விழுந்து கிடப்போர்க்கு
கண்டங்கரியோ னுரைசெய்த குடிநீ ரடைவை யானுரைப்பன்
கொண்ட திரிபலை திரிகடுகு கோட்ட மதுரஞ் செண்பகப்பூக்
கண்டில் வெண்ணெய் முந்திரிகை கிராம்போ டேலம் கச்சோலம்.

ஓல மென்றோ டோங்கியபூ டுற்பலம் ஆம்பல் நெய்தல்கொட்டி
யேலம் சேரும் குழல்மடவீர் இந்து சீந்தில் கைதையின்வேர்
மூல மிலாமிச் சிருவேலி முல்லை வில்லை யீசுரமூலி
யாலம் விழுதி னிளந்துளிரும் அரிய தென்னங் குரும்பையுமே. 60

மெய்யே தாளிச பத்திரமும் விளாவி னரிசி சிறுபயறும்
பொய்யே யல்லாச் சிறுதேக்குப் பொன்னுங் காணி நரிமுற்கம்
கைய்யாந் தகரை யிவையெல்லாம் கதிக்க நாலு கழஞ்சிட்டு
நைய்யக் காய்ச்சி யெட்டொன்றாய் நல்கீர் பித்தம் நாடாதே. 61

## கபால சேற்பனக் குணம்

உச்சி யிடிக்கு மயிர்முறியும் உறக்கம் பெரிதா முகங்கறுக்கும்
அச்சந் தோன்றுங் கைகால்கள் அயரும் வேர்க்கும் விழிசிவக்கும்
பச்சென் றிருக்கும் நாசியிற்சீழ் பாயும் நாறும் புலால்போலக்
கச்சிற் கனத்த முலையாளே கபால சேற்ப மிதுகாணே. 62

## பறங்கிப்பட்டைச் சூரணம்

சுத்திகொள் பறங்கி நாலு பலமாகுந் துலங்கு குக்கில்
அத்திலோர் பலமுங் கூட்டி யானகெந் தகமி ரண்டு
வித்துறு சாதிக் காயும் பத்திரி விளங்க மேலம்
ஒத்தமுக் கடுகோ டோம முறவுசெய் தேனி லுண்ணே. 63

## மிளகு தைலம்

மிளகு நாழி நீர்குறுணி விட்டுக் காய்ச்சி நாழியதில்
அளவே கையான் பாலிள நீ ராட்டு மெண்ணெ யிவைநாழி
வளரெலு மிச்சம் பழச்சாறு மானே தாம்பூ லச்சாறு
உளமே துளசி பாவட்டை யோது மவுரி முருக்கியங்கு 64

குல்லைச் சாறு மிவையொன்று கூட்டு நாழி யதிற்கற்கம்
நல்ல லாமிச் சிருவேலி நன்னு ரியின்வே ரிலுப்பைப்பூச்
சொல்லு மிளகு திரிபலையுஞ் சுக்குக் கோட்ட மரமஞ்சள்
புல்லு மஞ்சள் செண்பகப்பூப் பொருந்தும் அரிசி வகையாறே. 65

ஆரு மதுரந் தாரமுட னடைவே பச்சைக் கச்சோலம்
சேரு மேல மிலவங்கந் திப்பிலி மூலஞ் சடாமாஞ்சில்
சாருங் கர்ப்பூ ரம்புனுகு தண்ணெரி காசு மிவைகழஞ்சு
கூரு மருந்திங் கிவைகரைத்துக் குணமாய் வெந்துகொள்ளுவதே

தேனே சிரத்திற் றேய்முழுகத் தீருங் கபால சேற்பனமும்
ஊனே யுருக்கு மூக்குநீ ருடனே சிரத்தி லிடியொடுவும்
கானே நோக்கி யோடுமிது கடுகச் செய்ய வல்லீரேல்
வானோர் தலைவன் ஆயுமறை தன்னில் வகுத்த வரலாறே. 67

## கபால பித்தச் சேற்பனக் குணம்

தேனே கபாலந் தனில்பித்தச் சேற்பம் செய்யும் குணம்கேளாய்
வானீ ரூறி வழுவழுக்கும் மண்டை வதன மிகவேர்க்கும்
தானே சிலகாற் றலைசுற்றும் தரையில் நடக்கில் கிறுகிறென்னும்
மானே யுடம்பு வெளுத்துவரும் மலமும் நீரும் அழன்றிடுமே. 68

மேவும் சிரமும் கணப்புண்டாம் இருகா தடைக்கும் வெதும்புமுடல்
பாவு மிருகால் கைகசியும் பரத வித்துக் கண்தூங்கும்
கோவித் திருமிக் கோழைவிழும் கொள்ளு மசனம் சிறுத்துவரும்
தாவும் கைகால் மிகத்தளரும் சாற்றும் குணத்தைத் தானறியே. 69

சென்னியின் மீது பித்தச் சேற்பனக் குணத்தைக் கேளாய்
மன்னிய புருவ நெற்றி வருமுச்சி இவற்றில் குத்தும்
பின்னமே விழிநீர் காய்ந்து சிவந்திடும் மூக்குள் நோவாம்
தன்னுடல் வெதும்பி நெஞ்சில் சலமுறைந் திருமுந் தானே. 70

## சீந்தில் நெய்

முற்றின சீந்திச் சாறு மொசுக்கையின் சாற்றி னோடு
புத்திசேர் பிரமிச் சாறு புடோல்சாறு தண்ணீர் விட்டான்
அத்தினில் சாறு கையான் அவுரியோ டிசங்கோ டிண்டு
கொத்தெலு மிச்சங் காய்நீர் கூறும்பா லிளநீர் கன்னல். 71

கண்டங்கத் திரியின் சாறு கருதுஞ்சா றென்று நாழி
கொண்டுநெய் நாழி விட்டுக் கோட்டங்கோ ரோசனை யிந்துப்பு
பண்டைமுந் திரிபே ரீந்து பச்சைக்கற் பூரஞ் சாதி
விண்டபத் திரிகி ராம்பு விளங்க மோடேலஞ் சீனி. 72

சீரகங் கன்னுர் கோட்டந் திப்பிலி மூல மாஞ்சில்
தேவர்தம் தாரமோ டத்தித திப்பிலி நாகங் கெந்தி
மேவுவெண் காரம் காந்தம் மிடவகம் கடுக்காய்த் தேறு
பாவு முப்பலையே சூதம் பதித்திடுங் கழஞ்சொவ் வொன்றே. 73

ஒன்றித்தே யரைத்து வெந்து உள்ளில் நாற்பதுநாள் கொள்ள
கன்றிய கபால பித்தம் கபமெல்லாம் ஓடு மென்ன
அன்றரன் உமையாட் கோதும் ஆய்ந்தநன் மறையே கூறும்
நன்றியின் உணர்ந்த வேத நான்முகன் முனிவர்க்கோதும். 74

## கபாலபித்தச் சேற்பனத்துக்குக் குடிநீர்

ஏலும் குணத்தை மிகவறிந்தால் இந்நோய் தீர மருந்துரைப்பேன்
மேலும் திப்பிலி வெள்ளுள்ளி வெண்குந் திரிக்கம் கடுதான்றி
சாலும் பேய்ப்புடல் வேப்பலத சாறடைவேர் ஓரொன் றிருகழஞ்சு
காலம் பெறவெட் டொன்ருக்கிக் காய்ச்சிக் குடிக்க வல்லீரே. 75

## ஆடாதோடை நெய்

ஆடா தோடை தூதுளையும் அரிய பிரமி சிறுவழுதில்
வாடாக் குமரி துளசிபுடோல் வள்ளி தொய்யில் சீந்தில்வள்ளி
தாடாம் வல்ல முல்லைமலை தாங்கி கற்ரு ழஞ்சருகு
போடா தோரொன் றுலையாமல் பொருந்த எட்டொன் ருய்க்காய்ச்சே. 76

சேரும் குடிநீர் வடிகொண்டு திரிபலை யரத்தை கொத்தமல்லி
பாரும் திரிகடுகு வெட்பாலை பாரங்கி கச்சோ லங்கடுகு
கூரும் சிவதை வசம்பு கோட்டம் கோரோ சனைசெண் பகப்பூவும்
சாரு மேதை கண்டில்வெண்ணெய் தாளிச பத்திரி முந்திரிகை. 77

இந்தக் கடுகுரோ கணிசீனி யிவையோ ரொன்று முக்கழஞ்சு
வெந்த குடிநீ ருடனரைத்து வேண்டு மிளநீர் பால்நெய்யும்
தொந்த மாகப் பதத்தில்வடி சொல்லு மரைமண் டலம்கொண்டால்
வந்த சிலேற்பன பித்தமெல்லாம் மாதே தீரும் உண்மையிதே. 78

## திரிபலை எண்ணெய்

ஒத்த திரிபலை பலமைம்பான் உள்ளில் விதையினைத் தள்ளியே
சுத்தமான நீரதி லேயொரு தூணி நீர்விடு வெந்தபின்
பத்தி யீரிரு நாழிநீர்வடி பாக மெய்யுறு கற்கமும்
துத்த நாற்படி எண்ணெயிள நீரு மப்படிச் சொல்லவோ. 79

சொல்லுஞ் செங்கழு நீர்க்கிழங்கொடு தூய சீரக மேலமும்
நல்ல திப்பிலி மூலம்ரோசனை நாக கேசர நாகணம்
புல்லும் பச்சிலை மேதைவாய் விளங்கமும் புழுகு சட்டமும்
நல்ல சாதி கிராம்புகற்பூரம் நாரி வேரி லவங்கமே. 80

வங்க வேரிரு வேலிமிச்சொடு வல்ல தாரமு மதுரமும்
குங்கு மத்தொடு சந்துகாரகில் குக்கில் செம்பக மொட்டுமே
பொங்க மாக நிறுத்துமூன்று கழஞ்சொவ் வொன்று பொருந்தவே
தங்கு மெண்ணெய் பதத்திலேவடி தாக்குஞ் சேற்பன மோடுமே.

## கடுக்காய்ச் சூரணம்

நல்ல அரிதகி வீசனீக்கிடு நாற்ப லஞ்சிறு தேக்குமே
நால தாமதி மதுரமேலமும் நல்ல சீரக முந்திரி
சொல்லும் தாளிச பத்திரத்தொடு கூகை நீரகில் சீனியும்
தூது ளம்பழ மாதுளங்கனி தொகுத்த ஊறலுந் தொக்கவே
வல்ல திரிகடு ரோணிமேதை விளங்க மாஞ்சி லரத்தையும்
வாழை யின்கனி நாககேசரம் வனச மேயநல் வளையமும்
வெல்ல வேசம ளுகவேவறு வெச்சக் கொட்டி யிடித்துநீ
வெருகடிப் பிரமாண மேகொடு மேவிடா கபால பித்தமே. 82

## கபால வாத பயித்தியக் குணம்

சிரத்தில் வாத பயித்தியமது செய்யும் குணத்தைத் தெரிந்துரைப்பேன்
உரத்துத் திமிர்த்துக் குத்துண்டாம் உடனே யடங்கும் சிரந்தன்னில்
பெருத்த பிடரி தனில்வலிக்கும் பேசும் நாக்கு மரம்போலாம்
பொருத்துத் தோறும் புண்ணுப்நோம் பேருந்தும் வாத பயித்தியமே; 83

## ஆயில் எண்ணெய்

ஆயில் பட்டை நூறுபலம் அதனைத் தறித்து அவற்றோடே
யேயும் சீந்தில் சிறுவழுதில் எட்டி நொச்சி தழுதாழை
தோயும் வெட்டி யிருவேலி சொன்னேன் முப்பலம் வேப்பந்தோல்
காயும் குமரிச் சருகுடனே கருதும் சித்தா முட்டியுமே. 84

முதியார் கூந்த லிலந்தையின்வேர் முன்னைபாதிரி திரிபலையும்
சரியாய் நிறுத்து அவ்வளவே தக்க வரத்தை யுங்கூட்டி
மதியா வெட்டொன் ருய்க்காய்ச்சி வாழை கைய்யான் பாலிள நீர்
விதியாய்க் கற்க மிடவகமு மேத்த திரிகடு திரிபலையே. 85

ஏலம் கிராம்பு மகரப்பூ யிலவங்கத்தோல் வெந்தயமும்
சாலும் கோரோ சனைகோட்டம் சாத்திரபேதி தக்கோலம்
மேலும் தேவ தாரமுடன் விளாவினரிசி செண்பகப்பூ
கோலமாஞ்சில் மஞ்சிட்டி கொட்டிக் கிழங்கோ டிலுப்பைப்பூ
காலு மதுரம் கற்பூரங் கமழ்நெரி யரிசி கழஞ்சொன்றே. 86

ஒன்றித் தரைத்துக் கரைத்துவெந்து ஊற்றி யாற்றிப் பதத்திலிவை
நன்றி பெறவே முழுகினுக் கால்நாடா தோடும் வாதபித்தம்
துன்றும் பிடரி நோவும்போம் உடம்பு துலங்கும் துடியிடையே
வென்றி பெறவே ஆய்ந்தமறை விதித்தோ ருரைத்த கருத்தாமே.

## கபால பாரிசவாயுவின் குணம்

ஓதிய கபாலந் தன்னில் ஓர்புறம் திமிர்த்து வேர்த்து
வேதனை வரவே குத்தும் விழியிடை புருவத் துள்ளே
ஊதையுண் டாகி நாளும் ஒடுவிழும் செவியில் புண்ணும்
தீதுடன் தலைவ றண்டு பிடரிநோய் தீரா தென்னே. 88

## மீட்பு (இரட்சை)

ஏயு மருந்தில் தீராதா லேழை மானுட ரேகேளும்
தூய விரட்சைக் கருவிமுன்னோர் சொல்லும தொண்ணூற் றெட்டதனில்
ஆயும் சிரபா ரிசவாயுக் கமைத்த சூலக் காலதனல்
நீயு மறிவை செய்வைபிடர் நெருங்கும் புருவ நடுவிலுமே. 89

## மருந்துவம்

புண்ணழல் தீர மாற்றிப் பொங்கவே மஞ்சள் காரம்
அண்ணலா ருரைத்த வுண்மை அடைவிலே எண்ணெய் நெய்யும்
வண்மையாய்ச் செய்யும் போது பக்கத்தில் வாய்வுந் தீரும்
உண்மையாய் உரைக்கு முன்னோர் உறுதியாய்க் கேட்ட தாமே. 90

## கபால பித்த வாதக் குணம்

சென்னியில் பித்த வாதம் செய்குறி உரைக்கக் கேளாய்
அன்னித மாகப் பேசும் அயர்வுறும் ஆடும் பாடும்
கொன்னுதி வேற் கண் மாதே கூர்விழி புகைச்ச லுண்டாம்
துன்னிடு மிரும லுச்சி துடியடி கபாலம் நோமே. 91

## பொன்னாங்காணி நெய்

நன்னிலப் பொன்னாங் காணி நரிப்பயற் றிலையே சீந்தில்
முன்னைபா திரியே நொச்சி முள்ளங்கி துளசி தோடை
வன்மரை யிலந்தை கொட்டி மல்லிகை வில்வம் முல்லை
தன்னல்வெள் ளரிக்காய் பூழி சர்க்கரை கைதை வேரே. 92

வேரொவ் வொன்று சாறுரிகொள் வேலி நாரி விரிபூடு
சோரு மிச்சு பற்படகஞ் சீந்தில் சித்தா மல்லிபுடோல்
நேராந் திப்பிலி திரிகடுகு நீயே யொன்று பலம்பத்து
வாராய் நாலு மரக்கால்நீர் வற்றக் காய்ச்சி யெட்டொன்றே. 93

ஒன்றியே காய்ந்த சாற்றி னுடனெய்யு மிளநீர் பாலும்
நன்றியா கற்க மேல நாககே சரமிந் துப்பு
துன்றுபே ரீந்து முந்திரிகை துவட்கை சிவதை ரோகணியும்
வென்றிசேர் கோட்டந் தாரம் விளங்கமோ டோம மாஞ்சில் 94

திப்பிலி மூலந் தேறு செஞ்சந்து தகரம் குங்குமம்
ஒப்பிடக் கூட்டி நன்ருய் ஒக்கவே அரைத்துக் காய்ச்சி
மைப்புறு விழிநல் மாதே வடிந்துநாற் பதுநாள் கொள்ளே
வெப்புறு சிரத்தில் பித்த வாதநோய் விரைந்து போமே. 95

## கபால சிலேற்பன வாத குணம்

மேவிய கபால சேற்ப வாதஞ்செய் விதத்தைக் கேளாய்
கூவிய சிரத்தின் வேர்வை கொண்டிடும் குலுப்பு முண்டாம்
பாவிய விழிமூக் கோடு பாய்ந்திடும் நீரும் சீழும்
தாவிய நெஞ்சு நொந்து சலமிழும் யிருமுந் தானே. 96

## கண்டங்கத்தரி இளகம்

கண்டங் கத்தரி சமூலமது கருதி நூறு பலங் கூட்டி
துண்டம் துண்ட மாய்த் தறித்து தோடை யிசங்கு தூதுளையும்
விண்ட பிரமி சிறுவழுதில் வேலிப் பருத்தி துளசிநொச்சி
பண்டை யுள்ளி தொய்யில் பசளை காரை செந்தொட்டி 97

இயம்பிய மருந்தோ ரொன்று பலம்பத்து யினிது கூட்டிப்
பயம்படி புனலும் நூறு பற்றவே யெட்டொன் ருக
நயம்பெற வடித்துக் கொண்டு நறுநெய்யில் நாழி விட்டுத்
தயங்கிய ஆன்பால் நாலு படிவிட்டுச் சாற்றக் கேளே. 98

கேளாய்கற் கடக சிங்கி கிராம்புசுக் கரத்தை யேலம்
தாளீச பத்திர மிந்து தகரங்குங் குமமே கன்னூர்
வாளாரும் விழியாய் சீனி வனசப்பூ வளைய மல்லி
கோளில்முந் திரிபே ரீந்து கிளர்கண்டில் வெண்ணெ யோமம். 99

ஓங்கும் கண்டங் காரிவிதை உடனே வெப்பால் விழாலரசி
பூங்கொம் பனையாய் தசமூலம் பொரியும் காரம் சடாமாஞ்சில்
பாங்கோ டரத்தைச் சிறு தேக்குப் பச்சிலை மதுரந் தாரமுடன்
ஆங்கால்மருந்து கழஞ் சிரண்டாய் அரைத்துக் கரைத்து வடிப்பதுவே. 100

வேறு கரண்டி நாற்பதுநாள் மெய்யே கொள்ளச் சோற்பனமும்
ஊறுங் கோழை புலால் நாற்றம் உண்ணு மசனம் வாந்திவிக்கல்
மாறும் கபால வாதமிவை வாராதேபோம் எனமுன்னோர்
கூறும் கருத்தை ஆய்ந்துணர்ந்து குறித்துச் செய்ய வல்லீரே. 101

### கபால வாத சேற்பன குணம்

மின்னே கபாலந் தனில்வலித்து வேர்த்து வெதும்பிப் பல்கிட்டி
முன்னே வாய்நீர் வழுவழுத்து முகமும் வெளுத்தே யிருமலுமாய்
அன்னந் தானும் சிறுத்துவிம்மியாக முலர்ந்தே கண்குழியும்
பொன்னே கபால சேற்பனத்தின் பொருந்தும் வாத மிதுவென்றே. 102

### திப்பிலி ரசாயனம்

நல்ல திப்பிலி பலமொன்று நாகம் கெந்திகற் கடகசிங்சி
சொல்லுந் திரிபலை மாஞ்சரத்தை சுக்குக் கோட்டம் விழாலரசி
வல்ல சிவதை கடுகுரோணி மதுரம் தேவ தாரமுடன்
புல்லும் சீரக முந்திரிகை பொன்னே யேலம் கிராம்புடனே 103

உடன்கச் சோல முருளரிசிஓமம் விளங்கம் கண்டில் வெண்ணெய்
அடைவே தாளிச பத்திரமும் ஆன கிராம்பு சீரகமும்
கடலில் நுரையும் பேரீந்து கனக மிளகோ டிருவேலி
மடவீர் மருந்தொன் றிருகழஞ்சு வறுத்துத் நூள்செய் தேன்பிசறி
அடவா யிடுநெய் யும்பன்னீரு மாக விரவிக் கொள்வீரே. 104



1. தலை அதிரலுடன் நோதலும், நாசியில் நீர் வடிதலும், வெளிச்சத்தைப் பார்க்க முடியாதிருத்தலும், சீலை முதலியவற்ருல் தலையைக் கட்டக் குறைதலும், இராக் காலங்களில் நோய் அதிகரித்தலும் முதலியவை வாதத்தினுல் உண்டாகிய கபால நோயின் பொது குணங்களாகும்.

2. தலையில் காய்ச்சல் போலக் காய்தலும், கண் மூக்கு முதலியவை நெருப்புக் கக்குவதுபோல எரிவு உண்டாதலும், இராக் காலங்களில் நோய் குறைதலும் முதலியவை பித்தத்தினுல் உண்டாகிய கபால நோயின் பொதுக் குணங்களாகும்.

3. தலை கனத்தலும் அதிக குளர்ச்சி உடையதாயிருத்தலும், கண் வீங்குதலும் முதலியவை சேற்பனத்தினுல் உண்டாகிய கபால நோயின் பொதுக் குணங்களாம்.

4. வாதம் முதலியவை தொந்தித்து உண்டாகும் காலங்களில் மேற்கூறிய அவ்வவற்றின் குணங்கள் கலந்து ஏறியும் குறைந்தும் தோன்றும். உதாரணமாய், வாதம் இரண்டு பங்கும், பித்தம் ஒரு பங்கும் கூடியதே வாதபித்த தொந்திப்பு ஆதலால் அதில் வாதத்தின் குணங்கள் ஏறியும் பித்தத்தின் குணங்கள் குறைந்தும் தோன்றும். இப்படியே மற்றையவற்றிலும் கண்டுகொள்ளக.

5. வாதபித்த தொந்திப்பினல் உண்டாகும் கபாலநோய் வாதகாலமாகிய சூரியன் உதிக்குமுன் ஆரம்பித்து வெயில் ஏற ஏற நோயும் அதிகரிக்கும். மாலையில் பித்தம் தணிந்து அதனல் இயக்கப்படும் வாதமும் தனக்குரிய சமநிலையை அடைய சேற்பனம் அதிகரித்தலால் நோய் தணிந்துவிடும். அதனல் இதைச் சூரிய கபாலம் என்றும் எழுஞாயிறு என்றுங் கூறுவர். சூரியாவர்த்தம் என்பதும் அது. வாதசேற்பன தொந்திப்பினல் உண்டாவது சேற்பன காலமாகிய மாலைக் காலத்தில் நோய் அதிகரித்து மற்றைக் காலங்களில் குறையும். அதனல் இதைச் சந்திர கபாலம் என்றும் படுஞாயிறு என்றும் கூறுவர். சந்திரா வர்த்தம் என்பதுமது.

கபால பித்த வாதம், உச்சிக் காலங்களில் நோய் அதிகரித்து மற்றைக் காலங்களில் குறையும்.

6. கபால பாரிசவாதத்தை ஒருத்தலைக் கபாலம் என்றும், ஒற்றைத் தலைவலி என்றும் கூறுவர். இதில் வாதம் தனித்தாயினும் சேற்பனத்தோடு கூடியாயினும் இருக்கும். சேற்பனத்தோடு கூடின் நோய் கடுமையாயிருக்கும் என்பதறிக. இதற்குச் சொல்லிய இரட்சையினல் உண்டாகிய புண் முற்றும் ஆறிய பின்பே தைலம் தேய்த்து முழுகுதல் வேண்டும். சூலம் போன்ற முக்கவருள்ள இரட்சைக் கருவியினல் சூடிட்டாயினும் கொடுவேலி வேர் முதலிய கொப்புளம் உண்டாக்கக்கூடிய பொருட்களை அரைத்து அவ்வுருவமையப் பூசியாயினும் புண்ணுக்குதல் கூடும்.

மேற்கூறிய கபால நோய்களுக்கெல்லாம் அந்தந்த நோய்களின் கீழ்ச்சொல்லிய மருந்துகளை உண்டு ஆயில் தைலம், திரிபலைத் தைலம் அமுக்குராத் தைலம் முதலியவற்றைச் சூரியன் உதிக்குமுன் தேய்த்து முழுகிவர நோய் விலகும். புளிப்புள்ள பொருள்கள் நீக்கிப் பத்தியம் வைக்க வேண்டுவது மிகவும் அவசியம்.

## கபால தேரை

### மண்டைத் தேரைக் குணம்

மண்டை கனக்கும் கண்பருக்கும் வயிறுகழியுங் கர கரக்கும்
தொண்டை காது முடம்புலரும் சோறும் சிறுத்துச் செல்லாது
துண்டத் தூடுஞ் செவியூடும் சோரி நீர்ப்போல் கலங்கிவரும்
மண்டைத் தேரைக் குணமிதெனப் பகர்ந்தார் பழைய மறையாய்ந்தே.

தேனே தேரைக் குணமறிந்தால் சேராக் குணத்தைச் செப்பக்கேள்
மானே மூக்கில் குருதிவரும் வார்காதிரண்டு வழும்பிவிழும்
ஊனே யுருக்கும் சொறியுமுடல் உவர்போல் வெளுத்தே உதிர்ந்துளையும்
வானோர் தலைவன் வகுத்துரைக்கும் மாரு திதுவு மசாத்தியமே.

இக்குணந் தன்னைக் காட்டி யறிந்தவ ரிதற்குச் செய்யும்
தக்கநல் மருந்து பார்த்துத் தந்திர மேதோ வென்னில்
அக்குல வித்துக் கான மாற்றமே யாவதென்றால்
மிக்கவர் தீர்ப்பா ரித்தை மீட்பனென் றவன்சொல் வானே. 107

### மண்டைக் கரப்பான் குணம்

தீதில் லாத சிரத்தில் கரப்பானேய்
ஓதி லாரதன் பேர்குண மோதுவேன்
ஆத லால்வா லாறுகேள் அன்னமே
வேத மாமுனி விளம்பிய வேதமே. 108

வாத பித்தக் கபமவை மூன்றினுள்
வேது வால்வெயி லாமிடி யாலியற்
றேகை யார்மய லால்வியர் வாகிய
பேத னீரிவை யாலுள பேசுவேன். 109

வேகக் காற்றி னுல்பனி வெல்லத்தால்
பாக னேகன லால்மேதிப் பால்நெய் பால்
தாக மாவிள் வடுக்கனிச் சாரத்தால்
மோக வாளை வழுதலை முள்ளிக்காய் 110

காயும் பல்விடக் கால்சுரத் தால்கனல்
ஏயும் மண்டலி யால்வரு மேதுவென்
றேயும் நல்லறி வாள ரருளினுல்
மாய மான கரப்பன் வகைகளே. 111

### மண்டைக் கரப்பான் ஆறின்வகை

ஏதமுறு கரப்பானேய் இருமூன்றி லேந்திழையீர்
வாதபித்த சேற்பனத்தில் வகுத்தவொரு மூன்றுளவாம்
தீதுசெறி செங்கரப்பன் தீராத வெண்கரப்பன்
ஓதுகருங் கரப்பனென வோர்மூன்று மோதுவாம். 112

### அசாந்தியம் 2. சாத்தியம் 4.

ஓதுங்கால் வெண்கரப்ப னூதைக் கரப்பனென
வாதியர னுரைசெய்த அவையிரண்டுஞ் சாத்தியமே
நீதியாம் பித்தகபம் நீள்கருமை செங்கரப்பன்
வேதன்றன் உரைத்தமொழி யிவைநான்கு மீளுமென்றே. 113

### அசாத்திய வெண்கரப்பான் குணம்

என்னே சிரவாதஞ் செய்யுங் கரப்பனது
மின்னே முகம்வீங்க மெய்குளிரும் வேதனையாம்
பின்னுன சந்துடனே பொறுத்துப் பிடரிமுதல்
தன்னுக நொந்து மிகத் தலைதனக்கு மென்றறியே. 114

அறியே நீருஞ் சலமும்பாய்ந் தனல்போ லெரித்து குத்துண்டாம்
சொறியும் பின்னர் மிகக்காய்ந்து துஞ்ச நெய்போற் கழித்தோடும்
பறியும் பொருக்கு சாம்பரெனப் பரிய நாறும் புலானுற்றங்
கூறியே வாதசிர கரப்பன் கொண்டார்க் குற்ற குணமிவையே. 115

## 1. நிலவாகை யெண்ணெய்

நல்ல நிலவாகையின் சமூல நாறுங் கெருடக் கொடியியங்கு
புல்லு மிஞ்சி சங்கங்குப்பி பூவர சவுரி புங்குகொன்றை
சொல்லும் வேலிப் பருத்திபுனத் துளசி சிறுகாஞ் சோறியுடன்
வெல்ல வொன்று சாறுழக்கு மேலு மருந்து விளம்புவனே. 116

தேனே கருஞ்சீ ரகஞ்சிவதை தேறு வசம்பு வெள்ளுள்ளி
கானுர் மஞ்சண் மரமஞ்சள் கடல்கத் தூரி மஞ்சளுடன்
தானே சிவதை ரோகணியுஞ் சாறறுந் துரிசு துத்தமதும்
கானுர் மிளகு கழஞ்சொன்று கரைத்து வெந்து குடிப்பதுவே. 117

குறிப்பு: (1) மேற்படி மருந்து பொருட்களுடன் ஆமணக்கெண்ணெய் ஒரு நாழி சேர்த்து வடிக்கவும்.
(2) மேற்படி பாட்டில் வரும் துரிசு, துத்தம் இரண்டையும் முறைப்படி தூய்மை செய்து சேர்க்கவும்.

## 2. துளசி யெண்ணெய்

வேறு துளசி குருந்துநொச்சி வேலிப் பருத்தி பிவையுடனே
கூறுங் கரிச்சை செநதொட்டி கொட்டக்கரநதை, கருக்துவாய்
மீறுங் குமரி சீதேவி வேம்பு முருக்குக் கையானும்
மாறு மிவைகள் சாறென்று வகையா யுழக்கு விடநன்றே. 118

நன்றே சிவன்வேம் பவுரிவேர் நாரி வேர்தலைச் சூடுவல்லி
குன்ரு நிலவா கையின்மூலங் கூறுங் கருஞ்சீ ரகமதுவும்
பொன்ரு விந்து மதுரமுடன் பூசுஞ் சாந்த மகில்காரம்
ஒன்ரு நற்சீ ரகஞசிவ தை யே மங் காந்தங் கெந்தகமே. 119

மேய வரிதா ரங்கடுகு வெண்கா ரத்தொடு மாஞ்சரத்தை
தூய திரிபல யோரென்று சொன்னேன் கழஞ்சா மணக்கெண்ணெய்
நீயு நாழி யதில்வெந்து நெருங்கி யுள்ளுங் குடிபூசில்
மாயும் வாத கரப்பனென ஆன்ற மறையுள் வழுத்தியதே 120

## மண்டை வெண்கரப்பான் குணம்

சீறும் சிரசில் வெண்கரப்பன் செய்யும் குணத்தைச் செப்பக்கேள்
கூறும் புண்ணிறம் வெளுப்பாய்க் குறுநொய்ச் செதில்போற் கொதித்து
ஊறும் நீருந் தினவுண்டாம் ஒட்டைபோலக் கர கரக்கும [விழும்
மாறுபோல வுடல் வற்றும் மாதேயிதுவு மாத்தியமே. 121

## சாத்திய கரப்பன் நாலில்—மண்டை பித்த கரப்பன் குணம்

பித்தத்தால் வெதுப்புக் கொண்ட கரப்பனர் குணத்தைப் பேசில்
மெத்தவே யெரித்து வீங்கி வெடித்து நீர் சலமும் பாயும்
குத்துண்டாய் விட நீர்பாயும் குன்றிபோல் கனத்துக் கொள்ளும்
அத்தியார் விழியினுளே அறிந்து கொள்மறையை ஆய்ந்தே. 122

அடிக்கடி விசிறிக் காட்டும் அனலென வெரிக்கு மாங்கே
வெடித்திடும் பொருக்கை மென்மேல் வீழ்ந்திடும் விடநீர் பாயும்
தடித்திடும் மரம்போல் வீங்கி சர சரத்து திருந்தூளாய்ப்
படித்திடு மாக மத்தின் பயன்பித்தக் கரப்பன் தானே. 123

## கபால சேற்பன கரப்பான் குணம்

சிரத்திலே வேர்வை யுண்டாய் திண்ணென வீங்கி நோவாய்
மொருத்திடும் சலநீர் பாயும் பேதமாய்த் திமிரு முண்டாம்
பொருக்கதா யசடு நாறும் பொங்கிடு மழுகண் ணீர்போல்
தெரித்திடுங் குணங்க ளெல்லாம் சேற்பனக் கரப்பன்றுனே. 124

காதடி பிடரி கன்னம் கழுத்தடி நெறியே கட்டும்
வேதனை யாக நெற்றி புருவத்தில் விரைந்தே குத்தும்
மோதியே வீங்கும் நீரும் சீழுமோ விரவி யோடும்
ஆதலால் சிரசில் சேற்பக் கரப்பனுங் குணங்க ளாமே. 125

## தூதுளை யெண்ணெய்

நல்கு தூதுளை நீர்முள்ளி நாரத் தெலுமிச் சிலையுடனே
வெல்லு மாடா தோடைகுல்லை வேலிப் பருத்தி முசுமுசுக்கை
புல்கு காரை சாறடையும் பொன்னுங் காணி தேற்றிலையோ
டொல்லு மிவையொன் றெருநாழி யுற்ற வெண்ணெய் நாழிவிடே.

விட்டே யரத்தை யிரண்டுடனே விழாலி னரிசி கருஞ்சீரம்
மட்டி யபினுங் கத்தூரி மஞ்சள் வசம்பு சிவதையுள்ளி
கட்டாய் மிளகு குந்திரிக்கங் கார்போ கரிசி யதாவரிசி
தட்டா திவையொன் றோர்கழஞ்சு தானே யரைத்து வெந்து கொள்ளே.

கொள்ளாய் மேலும் பூசிடுகிற் கூறுஞ் சேற்ப மொடுகரப்பன்
உள்ளே நின்ற நீர்த்திரட்சி யூருஞ் சொறியும் வீக்கம்போம்
பிள்ளாய் உப்புப் புளிகசப்புப் பேசுங் காறல் வெல்லமுதல்
தள்ளாய் சென்னிக் கற்கரப்பன் றுனே தீரு முண்மையிதே. 128

## கருங் கரப்பன் குணம்

கருமணல் தூற்றி னுற்போல் கனக்கமேல் கபாலந் தன்னில்
விரவியே படர்ந்து மேலே வி—நீரா யோடு மூரும்
கரகரத் திடுமென் மேலும் கனப்புண்டாய்ச் சுணங்கும் காட்டும்
தெரிவையிக் குணங்க ளெல்லாம் தேர்கருங் கரப்ப னுமே. 129

## திரிகடுகு எண்ணெய்

திரிகடு கரத்தை ரோணி சிவதைசெவ் வலரி வேரும்
கருதிடு காக்கைக் கொல்லி மணிக்கொன்றை கருஞ்சீர் மஞ்சள்
விரவுநேர் வாளம் பேயின் பீர்க்குறு விரைமஞ் சிட்டி
சொரிபுன்னை வித்துக் குன்றி சொல்லாலங் கொட்டை யாமே. 130

ஆமே சித்ர மூலமுட னருநில வாகை யியங்கம்வேர்
நாமே சொன்னே மருந்தொன்று நாட்டுங் கழஞ்சு நாழியெண்ணெய்
தாமே விட்டுப் பதத்தில்வெந்து தடவிக் குளிக்கக் கருங்கரப்பன்
போமே யென்று மறைவல்லோர் பொருந்த வுரைத்த பொருளாமே.

## செங்கரப்பன் குணம்

பொங்கியே சிவந்து குன்றி போலவே விசிறிப் பொங்கும்
அக்கியாய் மேன்மேல் காந்தும் மருவிநீர் சலமும் பாயும்
இக்கவே யுடம்பு காயும் வாந்தியு மூச்சு முண்டாம்
தக்கவிக் குணக் கபாலஞ் சாருங் செங் கரப்பன் தானே. 132

## 1. கையாந்தகரை யெண்ணெய்

கையாந் தகரை நீர்நாழி கனக மிளகுப் பொடியுழக்கு
மெய்யே யபினு மிருகழஞ்சு வெட்பா லரிசி விழாலரிசி
துய்ய மஞ்ச ளுல்வகையுஞ் சுக்குக் கருஞ்சீ ரகஞ்சிவதை
நையு மிந்து கெந்தகமு நாடுஞ் சூத மரிதாரம். 133

தாரம் மதுர முடன்கோட்டந் தகுமுப் பலையுங் கழஞ்சொன்று
சேர வரைத்து நல்லெண்ணெய் நாழி விட்டுத் திரள்பதம் பார்த்
தோர வொன்றை விட்டொருநா ளுள்ளுங் கொண்டு பூசிடுகில்
தீருஞ் சிரத்திற் செங்கரப்ப னென்று முன்னோர் செப்பினரே. 134

## 2. இயங்கமெண்ணெய்

ஏயநல் லெண்ணெய் நாழி யியங்கிலைச் சாறு நாழி
தூயவெற் றிலையின் சாறு துலங்கிய பூகச் சாறு
ஆய்பொடு தலையி னேடே யவுரிச்சா றதுவுங் கையான்
தீயெலு மிச்சஞ் சாறு நேர்விட்டு மருந்து கேண்மின். 135

செப்பிய விவற்றி னேடு தெரிகானுங் கள்ளி வேரும்
தப்பில்சா றடைவேர் புங்கு தலைச்சூடு வல்லிதானும்
கைப்புவேம் பாட லுள்ளி கருஞ்சீரம் வசம்பு கன்னார்
உப்புவெண் காரஞ் சூத முரோகணி கிருமி சத்ரு 136

உலுவாச்சுக் கரத்தை யேல மோமஞ் சிட்டி-மாஞ்சில்
எலிமருந் தோடு கோட்ட மிம்பூறல் மஞ்சட் டேறு
நலியாமற் கழஞ்சு கூட்டி நாளேழும் பூச நன்றுயப்
புலியாரைக் கண்ட புல்வாய் போலச்செங் கரப்பன் போமே. 137

## கெந்தகத் தயிலம்

நெல்லிக் கெந்தக முக்கழஞ்சு நீயுமான்பால் சுத்திபண்ணி
நல்ல வெள்ளைத் துகிலுள்ளே நன்று யுருட்டித் திரியாக்கிச்
சொல்லும் நறுநெய் யுழக்கிலெரி தோற்றூர் புள்ளிவெண் கரப்பன்
புல்லுமோரே மிக வருந்தி பொழுதே மிடவே புகன்றனரே. 138

## அரிதாரத் தைலம்

பொன்னரிதாரம் ஒருகழஞ்சு புகலும் வேலிப்பருத்தியிலை
மின்னே ஒருபாக் களவரைத்து வெடிசேங் கொட்டை யிருமூன்று
முன்னோர் மொழியா மணக் கெண்ணெய் யுழக்குவிட்டு முழங்க வெந்து
பின்னோர் பாண்ட நீருள்விட்டுப் பிசகா தெடுத்துப் பூசுவதே. 139

## கபாலவாத கரப்பானுக்கு ஏரண்டத்தைலம்

கருக்குவாய் முருக்கு கையான் கருதுவா யிசங்கு கூந்தல்
எருக்குட னேரமைத்து மிவையொன்று சாறு நாழி
பருத்த வாமணக்கி னெண்ணெய் ஓர் படி பரிவாய் விட்டுத்
தெரித்திடு சாள மஞ்சள் சேங்கொட்டை கருஞ்சீரகம் சுக்கு. 140

சுக்கொடு மிளகுதுத்தம் துரிசெலி மருந்து சூதம்
மிக்ககத் தூரி மஞ்சள் வெந்தயம் மதுரம் பாடல்
முக்கவோர் மருந்து தானும் முக்கழஞ் சுவந்து கூட்டித்
தக்கவே பொடித்து வெந்து தடவவே கரப்பன் போமே. 141

## நிம்ப கற்பம்

வெள்ளறுகோ டியங்கம்வேர் சிவனார்வேம்பு
வேருமிக்க புங்குநில வாகை வேரும்
வெள்ளவுரி வேர்நாணுங் கள்ளி வேரும்
வேலைவேர் திருமேனி வேர்பாற் சொன்றி
வெள்ளைக்காக் கணம்வேருங் கரிச்சை வேரும்
வேம்பின்வேர் பழங்காய்பூக் கொழுந்து பட்டை
வெள்ளைத்தூ துளைவேருஞ் சிறுகாஞ் சோறி
வேருமிவை தனித்தனியே வெயிலு லர்த்தே. 142

தேன்மருவுங் குழலாரே சீந்தில் வேரும்
சீரானவெள்ளைச்சா றடையின்வேரும்
ஆன்மருந்து வகைக் கொன்று பலமிரண்டு
மவை களுக்கு மேல்மருந்து திரிகடுகினோடு
கான்மருவு திரிபலையும் லவண மைந்து
காரமைந்து சாரமைந்து கடுகோ டோமம்
பூமருவும்சாதிக் காய்கிராமபு பத்திரி
புன்னைவிதை புங்குவிதை புரிசேங் கொட்டை 143.

கொட்டமொடு மாஞ் சரத்தை குந்திரிக்கம்
கொடிக் கழலின் பருப்புள்ளி குளவிந்தமஞ்சள்
எட்டிவிதை மகிழம்விதை யேலம் சீரம்
யிதில் சுத்தி கெந்தகமும் சிவதை ரோணி
மட்டவிழும் செண்பகப்பூ விளங்கம் காந்தம்
மருந்கொன்று முக்கழுஞ்சு மானே கூட்டி
இட்டதேனில் நெய்யி லுண்ணில் மேலே
யினியொருநாள் வாராது கரப்பான் தானே. 144

ஓங்குசென்னி மேலெழுங் கரப்ப னேயும் உகிர்ந்துவிடும்
தீங்குருது வாத பித்தம் சேற் பனங்களேகிவிடு
மாங்கரப்ப னீரை யுண்ணும் ஆறுமே கரப்ப னேய்தான்
பாங்கு நோக்கி யோடிடும் பரிந்து நிம்ப கற்பமே. 145

**கபால கரப்பானுக்குச் செங்கத்தாரி எண்ணெய்**

நல்லெண்ணெய் நாழி தன்னில் நலம்பெறுஞ் செங்கத் தாரி
சொல்சிறு குரோட்டை வீழி துத்தியோடவுரி கையான்
குல்லைகொம்மட்டி கம்பிளி கோட்டான் தூதுவளை கொன்றை
தில்லை முள்ளங்கி புங்கு திராய் மொசுமொ சுக்கையாமே. 146

ஆந்தலை சூடி வள்ளி அருஞ் சிறு குறிஞ்சா சூரை
ஓர்ந்தனல் லிசங்கொவ் வென்றோர்பலம் பொருந்தக் கூட்டி
மாந்தரை கேளு முள்ளி வசம்பு வேம்பாடல் துத்தம்
காந்துசேங் கொட்டை குக்கில் கடல்நுரை கடுக்காய் சுக்கு. 147

சுத்த கெந்தக மோமந் துரிசொடு சூடன் காந்தம்
வித்துறு கருஞ்சீர் சாளம் விளங்கமோ டுலுவாய் லிங்கம்
புத்தியாய்க் கழஞ்சொவ் வொன்று மருவிடக் கூட்டி நீயும்
சத்துறக் காய்ச்சிக்கொள்ள சார்சிர கரப்பான் போமே. 148

**அமுக்குரா நெய்**

ஆவின்நெய் படிநாலா மதனிற் கற்க
மசுவகந்தி மிளகினொடு வசும்பு சுக்கு
மேவுகருஞ் சூரைவேர் தான்றி யோடு வேலி
வேர்புங்கிசங்கு செங்கத்தாரி
யோவியமே திரிபலையும் காரமைந்தும்
ரோணியொடு சிவதை விழா லுப்போரைந்தும்
தாவிய விம்மருந் தொன்று கழஞ்சிரண்டு
தகர்த்தரைத்துப் பதத்தில்வடி சாற்றக்கேளே. 149

கேளாய்நெய் யுளுங் கொடுத்து மேலும் பூசிற்
கிருமிமுதல் மண் டையுறு கிரந்திதீரும்
வாளாரும் விழிமடவீர் மண்ட லங்கொள்
வரட்சியினல் வருங் கரப்பன் மாய்ந்துபோகும்

தாளாத சொறிகரப்பன் சாம்பல் வீழ்தல்
தக்கபு லால் நாற்றம்போம் தடவிமுழ்கில்
மீளாத கரப்பனெல்லாம் மீளு மென்ன
மின்னிடையாளுக் கீசனுரை விளம்புமாறே. 150

## கரப்பானுக்குக் கோமயக் குழம்பு (மேற்பூச்சு)

கோமயம் நாழி தன்னில் குறிஞ்சான்வேர் குருேட்டை வேரும்
ஓமமோ டழிசேங் கொட்டை உவாய் கருக்குவாயின் வேரும்
காமரு கருஞ்சீர் மஞ்சள் கரிதலை சூடு வள்ளி
தாமரும் வசம்பு மாஞ்சில் சாரகில் வேலி வேரே. 151

வேண்டு கெந் தகத்தி னேடு விழால் வெப்பால் மிகுகச்சோளம்
தீண்டிய காக்கை கொல்லி செவ்வள்ளிக் கொடியோ டிந்து
மீண்டுநீ சமன்கொண் டொக்க விடுத்திடு நீரில் வெந்து
கண்டவிக் குழம்பைப் பூசிக் குளித்திடக் கரப்பான் போமே. 152

## மண்டைக் கரப்பனுக்குப் பூச்சு மருந்து

மேதி வெண்ணெயில் மிளகைப் பொடித்துச்
சாதி வெண்கலத் திட்டுநற் சங்கினல்
பாதி நாழிகை தேய்த்துப் பதத்தினல்
ஏதுவாய்க் கரப்பானுக் கேழு நாளிடே. 153

சுழலு மாவரை வேரின் தோலி தனில்
இளகு பொன்னரி தாரமொரு கழஞ்
சுளது கூட்டியெலுமிச் சுறுபழக்
திளகு நீரி லிடச்சொறி யேகுமே. 154

கருக்கு வ ளியிலைச் சாற்றில் கனமிள
கெருக்கி னல்லியும் பாலுமிதிலிட் டிடு
தருக்கும் வெய்யிலில் வைத்துத் தடவிட
பொருக்கத் தீருங் கரப்பன் பொடிப் போமே. 155

தூய வாமணக் கெண்ணெயிற் ேரேகையே
மாய வூற னிலவாகையும் வள்ளியே
காயம் ஓமம் விளங்கம் கருஞ்சீரக
மேய சுக்கு மிளகிந்து மேலமே. 156

ஏல மிம்மருந் தெட்டுஞ் சமன்கொண்டு
கால வேயரை வெதுப்புசற் றேயுண்டு
காலம் கண்ட கவினு ருரைப்படி
மேலு மேயிடு மீளாக் கரபபனே 157

## முக்கூட்டெண்ணெய்

கல்முரிசு களப்பன்னை செங்கத் தாரி
கருது [1]மின்னி சிறுகுறிஞ்சி யப்பை நீலி
வல்லசிறு புள்ளடியுஞ் சிறுகி ளாவும்
வட்டுமிவை வேர்மஞ்ஞை யெருமை மேவும்

[1] மின்னி-கருத்தக் காக்கணம்.

முல்லையொடு குக்குடத்தி னவரை வில்வ
மொழி சங்கங் குப்பிசிறு நெருஞ்சி முள்ளி
சொல்லுகின்ற வவ்விலொட்டி வீழி யெல்லாந்
தோற்றுமிவை யிலையுடன் வேர் புங்கம் பட்டை. 158

பாதிரியின் பட்டைசெருப் படியி னோடு
பகர்கிரந்தி நாயகனுஞ் செம்ம ணத்தி
தூதுவளை யுடனிசங்கு கஞ்சாங் கோரை
சுகந்தருநற் கரிசாலை பெரும ருந்து
நீதிபயில் வெள்ளறுகு கான்றை நாரி
நீர்வள்ளி யின்பூறல் காட்டி லுற்ற
கோதகலு மல்லிகையிங் கிவைக ளெல்லாங்
கொள்ளொன்று பலம்பத்துக் குடிநீர் காய்ச்சே. 159

வடித்தெடுத்த குடிநீரிற் றேவதாரு
வசம்புசத குப்பையிலா மிச்சு வள்ளி
அடுத்துவரு மஞ்சிட்டி கணித பேதி
யருவெளுத்தற் பிசின்கோட்ட மதுரம் பாடல்
கடுத்தபெரு மரப்பட்டை நற்சீர் காவி
கருதியசெஞ் சந்தமிவை யெண்க ழஞ்சாய்
எடுத்திடுமெள் ளெண்ணெயொடு [1]கசந்த வெண்ணெ
யேரண்டத் தெண்ணெயிவை படியொவ் வொன்றே. 160

சொற்றிடு சரக்கி தெல்லாந் துகளுரு தரைத்துக் காய்ச்சி
உற்றிடு நற்பதத்தி லுறவடித் தறுமு கேசன்
பொற்றிரு வடிப ணிந்து பூசியே யுள்ளுங் கொண்டு
மற்றது சிரத்திற் றேய்க்க மண்டையிற் கரப்ப னோடு
செற்றிடு வாத பித்த சேற்பன மாதி போமே. 161

## முக்கூட்டு வெள்ளறுகு எண்ணெய்

வெள்ளறுகு பேய்த்தும்பை யெருமை முல்லை
விரும்புகரி சாலைமயி லடிககு ருந்து
விள்ளுசிறு குறிஞ்சியெலு மிச்சை புங்கு
வீறுகரு வேம்புகளப் பன்னை தானும்
கள்ளவிழும் பாதிரியின் பட்டை யோடு
கன் முரிசு சட்டுவத்தின் கருணை யல்லால்
எள்ளலறு மாதுளையுஞ் சிறுகி ளாவு
மியம்புசங்கங் குப்பியிவை யிலையும் வேரும். 162

தூயமுறை யாயெடுத்து நிழலு லர்த்திச்
சொல்ல வொரு பிடிவீதந் தூள தாக்கி
ஆய்வசம்பு திப்பிலியு மிளகு மல்லி
யதிமதுரம் பீநாறி கடுக்கா யுள்ளி

[1] கசந்தவெண்ணெய்-வேப்பெண்ணெய்.

மேயவிரு சீரகமுஞ் சிவந்த சந்தும்
    விழாலரிசி யப்பையின்றன் கிழங்கிந் துப்பு
நேயமுட னிவைவகைக்குக் கழஞ்சி ரண்டாய்
    நிறுத்திடித்துத் தூளாக்கி நிகழ்த்தக் கேளே. 163

சொல்லியதோ ரெள்ளெண்ணெ யேரண் டெண்ணெய்
    சுகந்தருநற் பசுவின்னெய் சமனாய்க் கூட்டி
வெல்லவரு மிரண்டுபடி [1]யப்பை தன்னில்
    விளம்புகின்ற சமூலமுடன் முன்னே சொன்ன
நல்லதொரு சரக்குடன்வே ரிலைத்தூ ளொன்றாய்
    நயந்தரைத்துக் கரைத்துவடி பருவம் பார்த்து
வெல்லுமிது பலகரப்ப னுள்ளுங் கொண்டு
    மீதுசிரத் திலும்வைத்து முழுக கன்றே. 164

## பறங்கிப்பட்டைக் குடிநீர்

சிவனார் வேம்பு வெள்ளறுகு சேரு மியங்கு நிலவாகை
தவரு திவைகள் பலமொன்று தகுவாய் விளங்கந் திரிகடுகு
நவமாய் வகைக்குப் பலம்பாதி நவில்சா திக்காய் வசுவாசி
குவைசேர் கிராம்பு தன்னோடு குராசா னியுமே பலங்காலே. 165

ஏய சீனப் பாகதுவு மிசையப் பல நா லதுகூட்டித்
தூய தண்ணீ ரைந்தொன்றாய்ச் சொல்லுங் குடிநீர் வற்றியபின்
ஆய வுப்புப் புளிநீக்கி யார்வினுறு பால் பத்தியமாய்
நீயே கொள்ள [2]வடைகுடிநீர் நீங்குஞ் சிரத்திற் கரப்பனுமே. 166

குறிப்பு : குடித்த அவ்வளவு நாள் மறுபத்தியம் அரையுப்பு வறுத்துக் கூட்டுக.

## பறங்கிப்பட்டைச் சூரணம்

திற்பிலி மூல மோமந் திப்பிலி யரத்தை சுக்கு
மற்றுவாய் விளங்க மெல்லாம் வகைக்கொரு பலங்கி ராம்பு
நற்குரு சானி சாதி நயந்தபூக் காய்வ கைக்குச்
சொற்றரு பலங்கா லாகுஞ் சுகந்தரு பறங்கிப் பட்டை. 167

நாற்பலங் கூட்டி யொன்றாய் நயப்புடன் சூர ணித்து
வேற்றுமை யிலாது வெந்நீர் வெருகடி யனுபா னித்துச்
சாற்றுபத் தியத்தி னோடு மண்டல முண்ணச் சாரும்
ஏற்றமாஞ் சிரத்தி லுள்ள கரப்பனோ யாவும் போமே. 168

---

[1] அப்பை இடித்துப் பிழிந்த சாற்றினால் மேற்படி சரக்கு முதலியவற்றை அரைத்து எண்ணெயிற் கலந்து காய்ச்சுக. பசுநெய் முதலிய மூன்றும் சமன் கலந்து படி 2 கொள்க. அப்பைச் சாறு படி 2 என்று கருத்துக் கொள்வாருமுளர்.

[2] அடைகுடிநீர் என்றமையால் காற்று வெயில் முதலிய படுதல் ஆகாது என்பது கருத்து.

## மண்டையின் உதிர்கரப்பன் குணமும் மருத்துவமும்

மண்டைக் கரப்ப னுதிர்வர்க்க நிணநீ ராகி வழிந்தோடும்
துண்டித் திருக்குந் திமிருண்டாய்ச் சொறிந்து புண்ணுய்ச் சொறியுநீர்
மண்டி போலு மிரத்தமுமாய் வருத்தஞ் செய்யு மருந்தெருக்குப்
பண்டே யுரைத்த கழல்வேலிப் பருத்தி முசுக்கை நாரத்தை. 169

கள்ளி யிலையுஞ் செருப்படியுங் கையாந் தகரை மூக்கறைச்சி
முள்ளு முருக்கி னிலைநொச்சி முடக்கொற் றுனுஞ் சாரணையும்
எள்ளற் கரிய மேனியிலை யியம்புங் கொட்டக் கரந்தையிலை
[1]பள்ளை விரும்பித் தொடாமூலி பகருஞ் சிறிய கல்லுருவி. 170

இவையோ ரொன்று பிழிந்தசா றேரண் டெண்ணெ யெள்ளெண்ணெய்
நவைசே ராது படியொன்று நற்சீர் கிராம்பு விழாலரிசி
சுவைசேர் காயம் வெட்பாலை சொல்லுங் கிராம்பு சாதிக்காய்
தவறு தின்னும் வாலுளுவை சரியாய் வகைக்கு நாற்கழஞ்சே. 171

சுக்குக்கடுக்காய்வெள்ளுள்ளி தொகையாய்வகைக்குப்பலமைந்து
மிக்க மிளகு வான்மிளகு மிகாமற் பலமொன் றிடைகூட்டி
ஒக்க வரைத்துக் கரைத்துவெந்தே யுறுநற் பதத்தில் வடிபூசி
நக்கித் தலையிற் றேய்த்திடுகி லுதிருங் கரப்ப னுடாதே. 172

### புகை

சொல்லு மிலிங்க மரிதாரந் துத்தந் துரிசு சமன்கூட்டி
வெல்லும்படிக்கிக்கலுவத்தில் வேம்பினெண்ணெய்விட்டரைத்து
வல்ல வாறே புகைகொள்ள மண்டை யுதிருங் கரப்பன்போம்
நல்ல பசுவின் மோரயின்று நாண் முன் றிடவே நவின்றனரே. 173

1. தலை கனத்தலும், முகம் வீங்குதலும், தடித்த நீர் பாய்தலும் போல்வன கபாலவாத கரப்பனின் தனிக்குணங்கள்.

2. தலை கண் நாசி முதலிய இடங்களில் நெருப்பாற் சுடுவது போன்ற வெப்ப முண்டாதலும், கண்ணீர் சுட்டுக் கொண்டு விழுதலும் போல்வன கபாலபித்தகரப்பனின் தனிக்குணங்கள்.

3. தலையில் வேர்வை யுண்டாதலும், நிணநீர் போலச் சொரிதலும், நரம்புத் தானங்களில் நெறி கட்டுதலும் போல்வன கபாலசேற்பன கரப்பனின் தனிக்குணங்கள்.

4. சேற்பன கரப்பன் குணங்களைப் பெரும்பாலும் ஒத்து வெண்புள்ளித் தோன்றுதலும், உடல் வரளுதலும் போல்வன கபாலவெண் கரப்பனின் தனிக்குணங்கள்.

---

[1] ஆடு தீண்டாப்பாலை.

5. பித்த கரப்பன் குணங்களைப் பெரும்பாலும் ஒத்துச் சிவந்த புள்ளி தோன்றுதலும், வாந்தி விக்கல் முதலியவற்றை உண்டாக்குதலும் போல்வன கபால செங்கரப்பனின் தனிக் குணங்கள்.

6. வாதகரப்பன் குணங்களைப் பெரும்பாலும் ஒத்துக்கரும் புள்ளி தோன்றுதலும், உடம்பு முழுவதும் ஊருவது போன்ற உணர்ச்சி உண்டாய்த் தடித்தலும் போல்வன கபால கருங் கரப்பனின் தனிக்குணங்கள்.

இவ்வாறு இவற்றின் முக்கிய வேறுபாடுகளை ஓர்ந்துணர்க. தனிக்குணங்கள் என்றமையினல் ஏனையவற்றிற்கு அக்குணங்கள் தோன்றுவதில்லையென்பது கருத்தாகும். வாதம் முதலிய முப்பிணி களின் தொந்திப்பினுல் இம்முறைபிறழ்ந்தும் தோன்றும்.

கபாலகரப்பன் முற்றிற்று.

——

## IV. கபாலகுட்டம் 5

ஓதிய கபால குட்ட மோரைந்திற் குறிகு ணங்கள்
தீதிலாச் சாத்தி யங்க ளசாத்தியஞ் செய்ம ருந்தும்
ஆதியா னுரைத்த வுண்மை அருஞ் சித்த வேதந் தன்னை
நீதியா யுரைக்கக் கேளீர் தமிழினுல் நிகழத் தானே. 174

### கபாலகுட்ட வரலாறு

ஆனதோர் வாத பித்த சேற்பன மவற்றிற் ரேன்றும்
மானனுய் விடநீர்க் காற்ருன் மங்கையர் வருத்தத் தாலும்
ஈனமாங் கிரந்தி யாலு மிழிவுறு குட்ட நோயகள்
தானமில் லாதே சாரு மென்றுதான் சாற்ற லாமே. 175

### கபாலகுட்டம் ஐந்தின் பெயர்

சாற்றுவெண் குட்ட மொன்று சார்கருங் குட்ட மொன்று
தோற்றுசெங் குட்ட மொன்று சொரியழு கண்ணி யொன்று
மாற்றரும் விடத்தி னென்று மங்கையே யைந்துஞ் செய்யும்
ஏற்றமாங் குணங்க ளெல்லா மியம்பினர் முனிவர் தாமே. 176

### அசாத்தியம் 2. சாத்தியம் 3

மேதினி யுள்ளோர் கேண்மின் வெண்கருங் குட்டம் ரண்டும்
ஓதசாத் தியம தென்றே யுரைத்தனர் மற்றை மூன்றும்
வேதனை தீரு மென்றே விளம்பினர் பெரியோர் முன்னம்
தீதிலாச்சித்தர் வேதச் செய்கையை யறிந்து பாரே. 177

## அசாத்தியம் இரண்டில்

### 1. கபாலவெண்குட்டத்தின் குணம்

தோற்று வெண் குட்டஞ்செய்யும் குணத்தினைச் சொல்லக்கேளாய்
நீற்றிடுங் கலம்போ லாகிச் சொறிந்திடு நீரும் பாயும்
ஏற்றமாய்ச் சாம்பல் வீழு மிழிபுலான் மிகவே நாறும்
மாற்றமாய்க் கபால மென்மேல் வரண்டுகா திரைச்ச லாமே. 178

### 2. கபால கருங்குட்டத்தின் குணம்

கிட்டம்போல் வரண்டு மண்டை மீதின்மீன் கிளர்சி னைபோல்
தொட்டகை நீங்கா தென்றுஞ் சொறிந்திடு மசறு நாறும்
மட்டார் குழலி னாளே மணலேபோல் வங்து வீழும்
திட்டமாங் கருங்குட் டந்தான் செய்குறி யென்று தேரே. 179

## சாத்தியம் மூன்றில்

### 1. கபால செங்குட்டத்தின் குணம்

நொங்கின்றேல் போற்சி வந்து நோவுண்டாய் நீரும் பாயும்
அங்கமே வற்றிக் காட்டி யனலெனக் காந்த லுண்டாம்
பொங்கியே கனத்து மென்மேற் பொருக்கெழும் புலாலு நாறும்
கொங்குறு குழலி னாய்செங் குட்டஞ்செய் குணங்க ளாமே. 180

### 2. கபால அழுகண்ணிக்குட்டத்தின் குணம்

நறுவிலிக் காய்போ லாகி நாளுநீர் சலமு மோடும்
மறுகுர லரிந்து காட்டும் வார்சிர முழுதுங் குத்தும்
தறுகிடாக் காந்த லுண்டாந் தழல்விழுந் ததுபோற் பொங்கும்
பூறுகியே கசிவு முண்டா மழுகண்ணி முறையி தன்றே. 181

### 3. கபாலவிடகுட்டத்தின் குணம்

தீதுறு விடத்தி னாலே சிரத்திலே புள்ளி தோன்றிக்
கார்குழ லுதிரு மென்மேற் காசுபோற் றடிப்பு முண்டாம்
சோதினை யுடம்பு வற்றிச் சொறிந்திடுங் குணங்கள் கண்டால்
ஆதியா னுரைத்த வுண்மை சிரவிடக் குட்ட மாமே. 182

## மருத்துவம்

### கபால குட்டம் பலவுக்கும்

### 1. கையாந்தகரை எண்ணெய்

கையாந் தகரை தூதுவளை கருது நத்தைச் சூரியுடன்
மெய்யா விரையும் புளியிலையு மிகுபேய்ப் பீர்க்கோ டேரண்டம்
வெய்ய இசங்கு சீந்தில்பசு மஞ்சள் மின்னி தழுதாழை
துய்ய மருந்து சாறுரிகொள் சொன்ன வெண்ணெய் நாழிவிடே.

விட்டே கடுக்காய் விழாலரிசி வெண்சிறு கடுகோ டதாவரிசி
ஒட்டுங் கார்பு காவரிசி யுற்ற தகரை விதையொன்று
மட்டா யிருசழஞ் சாவரைத்து மானே பதததில் வடிதேய்க்கில்
எட்டா தோடுங் குட்டமெலா மினை விடமென் றறியாதே. 184

## 2. அழிஞ்சில் தைலம்

அழிசம் பருப்புச் சாரடைச்சா றதிலும் வேலிப் பருத்தியிலும்
வழியொவ் வொருநா ளூறவைத்தே யரைத்து வட்டிற் புறந்தப்பி
வெளியே வெய்யி றனில வைதது வீழுந் தைலம் விரைந்தெடுத்து
மொழியும் படியே மண்டலங்கொள் முறையிட் டோடும் கபாலகுட்டம்.

## 3. உத்த மாகாணியெண்ணெய்

உத்தமா காணி பேய்ப்பீர்க் கோரொன்று பலமஞ் சாகச்
சுத்தநீர் பதக்கு விட்டுத் துளங்கெரி நாலொன் றுனல்
அத்திலே சிலவ சம்போ டடவ்கச் சோலங் கோட்டம்
சுததகெந் தகத்தி னேடு சொற்றிரி சடுவி ழாலே 186

வெண்சிறு கடுகு மஞ்சள் வேளிவேர் குரேட்டை கான்றை
பண்புறு நகரங் கார்கோல் பகர்கடு சரளம் [1] பாரி
வெண்புன்னை யுடனே புங்கம் வித்தொன்று கழஞ்சு கூட்டி
நண்புட னெண்ணெய் நாழி விடுவது நன்று காணே. 187

காணீர் மருந்தெல் லாமரைத்துக் கரைத்து மெழுகு பதத்தில்வடி
வீணே சொறிந்து திரியாதே மேலுந் தடவி யுள்ளி லுங்கொள்
வாணு ளுண்டாம் பொன்னிறமாய வளரு மேனி வரட்சியும்போம்
மாளுய்ப்பிறப்பையறுத்திடுவோன்வகுத்தசித்தர் நன் மொழியே.

## குட்டம் பதினெட்டுக்கும்
## 4. சடைச்சி யெண்ணெய்

சடைச்சிகொடு வேலிவேர் புன்னைக் கொட்டை
தகரைவிதை வசம்புதிரி பலையோ டிந்து
அடுத்தகார் கோலரிசி கரிய சீர
மாதளை யின் வேர்வெள்ளை யறுகின் வேரும்
மடப்பிடியே யதாவரிசி யிருகச் சோல
மபின்கஞ்சாப் புங்குவிதை யழிசேங் கொட்டை
கொடிக்கழலின் விரைகுன்றி மணியோ ரொன்று
கூறுங்கான் முக்கழஞ்சு கோமயநாற் படியே. 189

படியே [2] நாலெண்ணெய்நாற் படியே விட்டுப்
பகரககேள் கருக்குவாய முருக்கெ ருக்கும்
ஓடுவடக்கி சம்பீரப் பழத்தின் சாறு
மோரொன்ருேர் நாழியத னுடனே விட்டுத்

---

[1] பாரிவெண்புன்னை-புன்னைப் பூந்தாது.

[2] நாலெண்ணெய் - எள்ளெண்ணெய், புங்கெண்ணெய் - புன்னையெண்ணெய், ஆமணக்கெண்ணெய்.

துடியிடையே பதத்தில் வெந்து வடித்துப் பூசிச்
சோம்பாதே குளித்தீராற் சொல்லக் கேண்மின்
குடவயிறன் றணையீன்றோ னருளி னாலே
குட்டநோய் பதினெட்டுங் குலைந்து போமே. 190

## 5. திரிவிதசிந்தாமணித் தைலம்

ஆவினீர் குறுணி விட்டே யதிற்கற்கம் சித்ர மூலி
மேவுசெவ் வலரி வேரும் வெந்தோன்றிக் கிழங்கு மின்னி
காவின லகத்தி குத்துக் கள்ளிபேய்த் திமிட்டியோடு
தாவிய நொச்சி வேரு மெருக்கம்வேர் தகர மாமே. 191

ஓட்டறை தகரை வித்தோ டுறுநில வாகை சேம்பு
மட்டவிழ் குப்பி னுளே திரிபலை வளர்வெட் பாலை
இட்டமுக் கடுகு துத்தந் துவர்ச்சிகை யிவையோ ரொன்று
மட்டது சமனாய்க் கூட்டி மறுபடி யுரைக்கக் கேளே. 192

மஞ்சள் குறுணியரைகரைத்துமாவேப்பெண்ணெய்புங்கெண்ணெய்
செஞ்சொற்கரியபுன்னையெண்ணெய்சேரமூன்றுபடிவிட்டுத்
தஞ்சப் பேய்ப்பீர்க் கிலைச்சாறு சதுரக் கள்ளிப் பாலெருக்குந்
துஞ்சும் பாலுங் கடுகெண்ணெய்சொல்வீரோரொன்றுரியும்விடே.

விரவியெரித்துப் பதத்தில்வடி மின்னே தேய்த்துக்குளித்தக்கால்
உரைசெய் குட்டம் பதினெட்டு மோடி யொழிக்குஞ் சொறிதேமல்
பொரியுங் கரப்ப னுள்ளதுவும் பொன்றுங் கிரந்தி யழுகண்ணி
தரியா தோடு மிதுவென்று சாகா முனிவ னுரைத்ததுவே. 194

## 6. சிந்தாமணித் தைலம்

வெய்ய குட்ட நோய்க டீர வேறுமோர் மருந்துகேள்
துய்ய நற்ச டைச்சி வாகை மாவிலங்கை தூதுளை
செய்ய கள்ளி யலரி மத்து வேலிபேய்த்தி மிட்டியும்
உய்ய சித்ர மூலி நாரி யொன்றுமுப் பலங்கொளே. 195

எய்து சாற டைக்கொடீயெழிற் புனுக வித்துமே
துய்ய நற்க ரீயகாலி நிம்பம் வெண் கடம்புடன்
அய்ய மற்ற கார்கோ ரிசிசுக் கரத்தையும்
பைய வொன்று முப்ப லஞ்ச டைச்சிநீர் பதக்கிடே. 196

இட்ட மாயிரு தூணி நீர்விடு மிம்மருந்தை யவித்துநீ
யீதொ டொக்க வளாவு கோமய மீரி ரண்டிரு நாழியே
தட்டி டாது திமிட்டி பீர்க்கிலை பிரமி சாறுரி பேயச்சுரைச்
சாறு கொன்றை யெருக்கு வீழி யியங்கு சாறுரி சாரவே

[1]கட்ட தாகிய மூலி வேருறு தோலு முப்பல மாகவே
[2]கார் விழாலரிசி யெண்ணெய்வா லுளுவைகார்கோலரிசி நெய்யுமே
துட்ட மேவிய பீர்க்கு நெய்யொடு புன்னை நெய்விடு தோகையே
தூய வெண்கடுகு நெய்யொ டெள்ளின் நெய் தொகுத்து நீ குறுணி விடுவதே.

தேரு கற்க வகைக்குலங்கள் சிறந்த முக்கடு முப்பலை
செய்ய வெண்கடுகு மஞ்சள் கோட்டம் விளங்க மோடிருசீரகம்
பாரின் மிக்க வசம்பு காரகில் வெந்த யம்பகர் சந்துடன்
பச்சை வெட்டில வங்க பத்திரி பாள மோடரி தாரமும்
நீர்தெ ளித்திடு தேறு துத்தமு நெல்லி கெந்தக மத்துடன்
நிச்ச யஞ்சம னுக வேயிடு நீயெரித்து வடித்திடு
வேரொ டற்று விழுங்க ரப்பனு மிக்க குட்டமு மென்னவே
வெண்ணெயுண்டரு ளண்ணலாணை விரித்துரைத்து வேதமே. 198

## 7. மஞ்சவெண்ணெய்

சொல்லும் பச்சை மஞ்சடனைத் துவைத்துச் சாறு குறுணிவிட்டு
நல்ல திரிகடு கிருசீர நாட்டு மனோசிலை யரி தாரம்
புல்லும் வசம்பு கெந்தகங்கார் போக வரிசி பொன் மெழுகு
முல்லை நகையீர் நற்செங்கண் மொழியுங் குன்றி புங்கம்விதை. 199

விரைசேர் கோட்ட மதாவரிசி விழாலி னரிசி கச்சோலம்
உரைசேர் சுக்கி லிவையோரொன் றெருமுக்கழஞ்சுதான்கூட்டிப்
புரைதீ ரெண்ணெய்நாலுபடி பொருந்துங்கற்கமரைத்துலர்த்திக்
கரிய மெழுகு பதமானுற் கடுகி யோடுங் குட்டமுமே. 200

## 8. பெரிய மஞ்சவெண்ணெய்

குமரி யலரி தூதுவளை கூறு மவுரி யியங்குகையான்
நமது துளசி தகரையுட னற்கம் பிளிக்கொட் டான்பீர்க்கு
நமைதி ராடு தொடாமூலி நாடுங் கரிச்சை செருப்படியும்
அமைய வொன்று சாறுரிகொ ளதிலே மஞ்சட் சாறு விடே. 201

விரவி யெண்ணெய் நாழுழி விட்டுக் கற்கந் திரிகடுகோ
டிரநன் னரி நிலவாகை யுற்ற திரிபலை புங்கம்விதை
வரைசேர் சந்து கச்சோல மடவி கச்சோ லங்கடு ந
விரைசேர் கருஞ்சீர் விழாலரிசி வெட்பா லரிசி [3]நீல கண்டர் 202

ஏலக் குழலீர் கார்கோலு மிவைபோ ரொன்று முக்கழஞ்சு
சால வரைத்து வெந்துவடி தயில மாகு மதுதனிலே
மூல மருந்து பாஷாண முன்னே கழஞ்சு மேற்பொடிசேர்
காலம் பெறவே தடவிவிடி லோடுங் கபால குட்டமுமே. 203

---

[1] கட்டதாகிய மூலி-கட்டுக் கொடி

[2] விழாலரிசி யெண்ணெய் முதலிய ஏழுகை எண்ணெய்களையும் சமன் கலந்து குறுணி விடுக என்பது கருத்து.

[3] நீலகண்டர்-துருசி.

விழாலரிசி, வாலுளுவையரிசி, கார்போகவரிசி, பீர்க்குவிதை புன்னை விதை வெண்கடுகு என்னுமிவற்றைத் தனித்தனியே யவித்துலர்த்தி நன்கு புலர்ந்த பின் தூள்பண்ணித் தண்ணீரிற் கரைத்துக் காய்ச்சத் தயிலம் இறங்கும். ஒவ்வொன்றையும் இவ்வண்ணம் வெவ்வேறாகத தயிலம் எடுத்துக் கலக்க.

## 9. பிரசண்ட சிந்தாமணித் தைலம்

நிம்பவேர் நீலிவேர் நீள்புன்னை புங்குவிதை
கொம்[1] பலகு மெட்டி குறிஞ்சாவேர்—பம்பு
தலைசூடு வல்லி சமூல மியங்கு
நிலவாகை [2]நிர்க்குண்டி நாரி—மலையில்
அழிசப்வேர் வித்து மமுக்குரா வேரும்
மொழியுங் குரேட்டைவேர் முல்லை—புளிசேர்
நடலை கருக்குவாய் நீர்வஞ்சி தானும்
அடைவே கருங்காலி வேரும்—திடமார்
கொடுவேலி யாதண்டை கூறுந் திமிட்டி
உடைவேரு மாதளை யின் வேரும்—அடைவாய்ப்
பதின் பலங்கூட்டிப் பரிவா யுலர்த்தி
அதின்கூட மஞ்ச ளரத்தை—விதம்பெறு
சேங்கொட்டை நீர்வெட்டி சேருந் திரிபலையும்
ஆங்கு விழாலு மதாவரிசி—ஓங்கும்
கடுகுகார் கோல்விளங்கங் கஸ்தூரி மஞ்சள்
முடுகுவெட் பாலை மொழியும்—கொடியே
வயம்பொடு குக்கில் வருமுக் கடுகு
நயம்பெறு வேளைவித்து நன்ரும்—இயங்குமருள்
ஊமத்தின் வித்து முடன்புன்னை வித்துஞ்சிற்
ருமணக்கின் வித்து மலரிவேர்—பூமருவு
குன்றிமணி வள்ளியொடு கூறுகருஞ் சீரிவைகள்
ஒன்றுபல மாக வுறவெடுத்து—நன்ருன
பாண்டமதி லிட்டுப் பரிவாக மேன்மூடி
வேண்டுமண் சீலை மிகநன்ருய்—ஈண்டவே
ஏழுமுறை செய்துலர்த்தி யேற்றமேன் மூடிதன்னில்
வாழி துளைபுரிந்து மாண்பாகத்—தாழ்வுமண்ணிற்
கச்சளவு கெல்லிக் கவசகலங் கொள்ளவதில்
உச்சமா யோர்கலச முள்வைத்து—முச்சித்
துவார முறக்கவிழ்த்துச் சொல்லு மெருவாற்
குலாவுபுடம் போடாய் கூறி—இலகு
தயில மெடுத்துச் சாரியாய் பின்னும்
மயிலே யிதர மரிதாரம்—பயில்சாரம்
மேலுந் துரிசு மிலிங்க முடிதாரம்
சால நெல்லிக் கெந்தகமுந் தான்கழஞ்சு—மேலாய்
அரைத்ததிற் றூவியரை மண்டலந் தேய்க்கப்
பொருக்கெழுங் குட்டம் பொடியும்—எரிக்கும்

---

[1] அலகு-மகிழம் விதை.

[2] நிர்க்குண்டி- வெண்ணொச்சி- நர் முள்ளியென்றும் பாடம்.

அழுகண்ணி தேமலனற்கருங் குட்டம்
பழுதாங் கரப்பன் பறங்கி—கெழுமும்
புடைசரப்பன் வெண்குட்டம் போக்குசெங் குட்டம்
கடியதொரு சூலைக் கரப்பன்—படிமீதில்
தீருமது திண்ணமெனச் செப்பினர் முன்னோர்கள்
பாரிலுள்ளோர் செய்வீர் பரிந்து. 204

இது குழித் தைலம் அல்லது பூப்புடத்தைலம் என்று கூறப் படும். வேர்வகை வித்துவகை முதலியவற்றை எல்லாம் சிறிதும் ஈரப்பசையின்றி யுலர்த்திப் பின் ஒரு பெரிய பாண்டத்திலிட்டு ஐந்து அல்லது ஏழு துவாரங்களிட்ட சட்டியினால் மூடிச் சீலைமண் செய்துலர்த்துக. பாண்டத்தின் அளவுக்குச் சரியான ஆழமுள்ள தாயும், அதைச் சுற்றி எரு அடுக்குதற்கு வேண்டிய இடைவெளி யுள்ளதாயும் ஓர் குழிதோண்டி, அதன் நடுவில் வேறோர் சிறிய குழிதோண்டிக் கொண்டு அச்சிறிய குழியில் உயரமான பீங்கான் பாத்திரமாவது சாடியாவது வைத்து, மேற் சட்டியிலுள்ள துவாரங்கள் அதனுட் பொருந்தும்படி பாண்டத்தைக் கவிழ்த்து வைத்துச் சந்து வாய்க்குச் சீலை மண் செய்து, அச்சீலை மண் மறைய மண்ணினால் மூடி எருவடுக்கிப் புடம் போடுக. நன்றாய்க் குளிர ஆறிய பின் மேலுள்ள சாம்பர் மண் முதலியவற்றைக் கவனமாய் நீக்கிவிட்டு, கீழ் விழுந்திருக்கும் தயிலத்தை எடுத்து அதில் சுத்தி செய்த இரசம் முதலிய மற்றைச் சரக்குகளைப் பொடி பண்ணிக் கலந்து உபயோகிக்க; இவை சேராதும் உபயோகிக்கலாம்.

வேப்பம் வேர் முதலியவற்றின் வயிரத்தைச் சிதறிப் போகாத படி சிறு சிறு துண்டுகளாக்கியே சேர்த்தல் வேண்டும். முது மரத்தின் முதிர்ந்த வேரே பயன்படுவதாம். இத்தைலம் உள்ளே கொள்ளுதல் ஆகாது.

இதன் கீழ்க் கூறப்படும் நிம்பாதித் தைலமும் இவ்வாறே இறக்கப்படுவதாகும். அது உள் வெளி இரண்டுக்கும் உபயோகப் படுவது.

மேன்மூடியில் துவாரமிட்டுக் கவிழ்த்து வைக்கும்படி கூறியிருப் பினும் பானையின் அடியில் துவாரமிட்டுச் சிறு குழியில் வைத்த பாத்திரத்தில் அவை பொருந்தும்படி நிமிர்த்தி வைத்தும் இறக்க லாகும்.

## 10. நிம்பாதித் தைலம்

வெட்டுப் பட்ட விலுப்பையின்வேர் வேம்பி னதுவேர் தேற்றுவேர்
கட்டுக் கொடிச்சி சிவன்வேம்பு கருடக் கொடியோ டழிசமணிக்
கொட்டை நொச்சி விரிபூடு கூறு மாயில் குறிஞ்சாவேர்
இட்ட மாக வோரொன்று சயஞக் கூட்டி யிதிற் றயிலம். 205

தயிலத் துடனே சாதிலிங்கந் [1]தாளங்கெந்திசரிகூட்டி
வெயிலே வைத்து மேற்பொடிசேர் மின்னை பணவெடை மண்ட
பயிலுங் குட்டம் பதினெட்டும் பறங்கி சூலை கடிவிடமும் [லங்கொள்
கயிலைக் குரியோன் றன்னருளாற் கலங்கி யோடுங் கரப்பனுமே.

கபால குட்டம் முற்றிற்று.

---

## 5. கபாலப்பிளவை 10

### அவற்றின் பெயர்—அசாத்தியம் 4.

சென்னிற்மேற் பிளவை பத்துஞ் செய்தறி யியம்பக் கேளாய்
முன்னமே யுற்ற மேகன் மொழிந்திடு குருதிக் கண்ணன்
மின்னனாய் சுரியன் பகன் மேவிய பொன்னி மிக்க
உன்னித மான வுச்சி யுறவெழும் விரண வேகன். 207

வேகுற்ற குன்றிக் கண்ணன் வரணஞ்செய் குருவி னேடு
பாகுற்ற மொழிநல் லார்ர யழுக ணணி பொக்கி பந்தில்
மேகதா லெழுந்த நோயுஞ சுரியனும் விரணன் றனும்
சேகுற்ற குருதிக கண்ண னலசாத தியமாந் தேரே. 208

### சாத்தியம் 6.

பக்கத் தெழுந்த வியாதியொடு பருங் குன்றி விழியோனும்
பொக்க குருவோ டழுகணணி பொன்னிப் பிளவை யிவ்வாறும்
மிக்க நல்லா யசாத்தியமா மறறு மிதறகுச் செயம நந்து
தக்க கருவி காரவிதஞ் சாற்று மியல்பைத் தானறியே. 219

### அசாத்தியம் நாலில்

### 1. மேகப் பிளவையின் குணம்

மேகநோய்ப் பிளவை செய்யுங் குணத்தினை விளமபக் கேளாய்
தாகமு மோக முணடாய்த தறுகிடாச் சுரமே யாகும்
வேகமாபக் குத்துஞ் சூடு மிகுந்திடு நீரும் பாயும
போகவே தசைக ழன்று பொருக்கெழக் கரையுண்டாமே. 210

### 2. சுரிப்பிளவையின் குணம்

சுரிப்பிடர் மேல தாகும பிளவை செய் குணததைச் சொல்லில்
நெருப்பெனக் காந்துங் குத்தும் வெடித்திடு னீரும் பாயும்
தரித்திடு முதுகந் தண்டுற றடியுப படாப் பெபல நோம்
அரித்திடு மிகுந்து கண்ணும் வரணமா மசாத்தி யம்மே. 211

### 3. விரணப் பிளவையின் குணம்

விரணமாம் பிளவை செய்யுங் குணத்தினை விளம்பக் கேளாய்
உரமுடன் கனபபு மண்டா யுடலெலலாங் கடுத்துக குத்துய
தருமது வுழலை தாகந் த கமு மேலமூச சுண்டாம
மருவுறு மெண்ணெய் நெய் பால் மாமிச மருந்திற சாவ. 212

---

[1] தாளம்-தாளகம்.

### 3. குருதிக்கண்ணன் எனும் பிளவையின் குணம்

குருதியின் கண் ணன் செய்யுங் குணத்தினைக் குறித்துக் கேளாய்
கருதிடு முகஞ்சி வந்து கனத்திடுங் குருதி காலும்
பொருவரு முச்சி யெங்கும் புண்படக் குத்தி நோகும்
திருகிட வலிக்குந் தேகஞ் செயலசாத் தியமா மன்றே. 213

### சாத்தியம் ஆறில்

### 1. பக்கப் பிளவையின் குணம்

ஆனசாத் தியமோ ராறி லருகினிற் பிளவை செய்யும்
ஊனமாங் குணத்தைக் கேளாய் வலித்துறு சலமுண் டாகும்
ஈனமாஞ் சுரமேன் மூச்சு விக்கன்மே லிளைப்பு மில்லைத்
தானவை மீளு மென்று தவமுனி யுரைத்த தாமே. 214

பக்கப் பிளவையில் சுரம் முதலிய இக் குணங்கள் காணுமாயின் தீராதெனபது கருத்து.

### 2. குன்றிப் பிளவையின் குணம்

குன்றிப் பிளவைக் குணங்கேளாய் கொதித்து வீங்கிக் கொம்புளமாம்
அன்றிக் கனப்பு மிகவுண்டா முகமும் வீங்கி யனலாகும்
துன்றும் பாணி பலாச்சுளைபோற் சுரமும் வலியுங் காந்த லுமாம்
வென்றி பெறவே மீளுமிது வேக மறிந்து மருந்து செய்யே. 215

### 3. பொக்கிப் பிளவையின் குணம்

பொக்கிப் பிளவைக் குணங்கேளாய் புடைத்துவீங்கு முகந்தோயத்
தத்க சலங்கீ ழாய்க்கட்டுந் தண்ணீர் முகத்தில் வெடித்துவரும்
அக்கி மிகுந்து குத்துண்டா மடியிற் கனப்பு மாருது
மிக்க குணத்தை நீயறிந்து விரைந்தே மருந்து செயநன்றே. 216

### 4. குருப் பிளவையின் குணம்

குருவார் செய்யுங் குணங்கேளாய் புடைத்து வீங்கிக்குத்துண்டாம்
ஒருகால் வலியு மாருதே யுழலை மிகுந்து விரணமுமாம்
இருகா திருகண் ணுடன் காந்து மெரியு மழற்று மிடிக்குமிகக்
கருகாமுகமுமுன்னி தமாய்க் கனக்குங்குணத்தைக்கண்டறியே.

### 5. அழுகண்ணிப் பிளவையின் குணம்

அழுகண்ணிப் பிளவை செய்யுங் குணத்தினை யறிய வேண்டில்
பழுதிலா வனசக் காய்போற் கண்ணது பலவு மாகிக்
கொழகொழத் தண்ணீர் பாயுங் கொதித்துற வலியு முண்டாம்
வழுவறக் குணங்க டேர்ந்து மருந்துமெய் மாறு மன்றே. 218

### 6. பொன்னிப் பிளவையின் குணம்

பொன்னியாம் பிளவை செய்யுங் குணத்தினைப் புகலக் கேளாய்
உன்னித மாகத் தானே யுருண்டெழுங் குருதி கட்டும்

மன்னியே நொங்கு போல வெடித்திடுங் கனப்பு முண்டாம்.
இன்னவாங் குணங்க டேர்ந்தே யிபல்பிறன் மருந்து செய்யே. 219

## மருத்துவம்

### பூச்சு

சோவை பசலி பழம்பாசி கூறும் பூலா நீர்வள்ளி
மேவுங் கிழங்கு மதனிலையு மரைத்தவ் வளவே யாவெண்ணெய்
தாவும் வட்டி லதில்வைத்துச் சங்காற் றேய்த்து வழிபூசில்
யாவும் பிளவை தனில்வீகக மிதனல் வற்றி யாறிடுமே. 220

பூலா வேரு நெல்லிமுளி புகலு மாவரைப் பூவல்லி
மாலார் திருநா மத்தாளி வள்ளிக் கிழங்கோ டாவெண்ணெய்
மேலா மருந்து சரிகூட்டி யரைத்துப் பிளவை மேற்பூசில்
நாலா விதமாம் வலிகாந்த னண்ணு தென்று நவின்றனரே. 221

சிற்று மணக்கி னெண்ணெயுடன் றேனே முலைப்பா லாவெண்ணெய்
உற்ற மூன்று மோரளவா யுடனே விட்டங் குறவுசெய்து
சற்றே நீர்வள் ளிக்கிழங்கு மரைத்துக் கூட்டிச் சாரித்து
மற்ற திலவம் சஞ்சூட்டிப் பூசப் பிளவை மாறிடுமே 222

சிற்று மணக்கின் வித்தவுஞ் [1]சிந்தூ ரத்தின் புறந்தோலும்
பற்ற வோட்டில் வறுநன்ருய்ப் பரிந்தா வெண்ணெய் சமன்கூட்டி
சற்றே யிந்துப் பதில்விட்டுச் சங்காற் றேய்த்து வழிபூசில்
அற்றே யோடும் பிளவையெலா மறிந்தே செய்ய வல்லீரே. 223

### பிளவையில் உண்டாகும் தாகம் முதலியவற்றிற்கு குடிமருந்து

சொல்லுமா வரங்கோ முந்து சுகம்பெற வரைத்து மேதி
புல்லிய தயிரிற் கொள்ளப் பொருந்திய பிளவை தாகம்
ஒல்லையி லெரிப்புக் காந்த லோடியே போகு மென்று
நல்லவ ருரைத்த வுண்மை நாடிநீ யறிந்து கொள்ளே. 224

கொள்ளா யவுரி வேர்ப்புறந்தோல் கூறு மான்பால் விட்டரைந்து
தள்ளா தெடுத்துப் பாக்களவு தானே மூன்று பொழுதருந்தக்
கள்ளார் கூந்த மடமானே கரப்பன் குட்டம் பருப்படுவன்
துள்ளும் விஷங்களி வையனைத்துந் துணுக்கிட டோடுஞ் சொன்னேமே. 225

மேவு நிலவா கையின்வேரும் வேலிப் பருத்தி யன்வேரும்
பாவுங் கருடக் கொடித்தோலும் பங்கம பாழை யன்வேரும்
கூவு மருந்து சமன் கொண்டு கோவின பாலிற் கொள்வீரேல்
தாவும் பிளவை பருப்படுவன் றக்க கரப்ப னேடிடுமே. 226

கருஞ்சீ ரகத்தை வறுத்தரைத்துக் காயங் கழஞ்சு கால்கூட்டி
அரம்பைக் கனியி னுள்ளிட்டே யடைவாய் மூன்று பொழுதருந்த
வருந்தும் பிளவை பருவீக்க மாற விடுமென் றுயுண்மறை
தெரிநத பெரியோ ருரைசெய்தார் தேடிச் செய்ய வல்லோர்க்கே.

---

[1] சிந்தூரம்-புளியமாம்

### துளம்

வீரஞ் செய்யும் பிளவையெலாம் வேரோடற்று விழுந்தேபோம்
ஆருஞ் செய்வீர் வசம்புடனே யமுக்கி ராவேர் நாரியின்வேர்
சேரு மொன்று பாக்களவு சீரான் பால்விட் டரைத்தப்ப
நீரும பிளவை கரப்பனுட னிலையார் படுவ னீங்கிடுமே. 228

### உவநாயம்—அமைய 1, 2.

குமரி மடலிற்சோறு தள்ளிக் குறுக நறுக்கிப் பிழிந்தெடுத்து
நமைதீர் [1]மணக்கினெண்ணெயின னன்ருய் வறுத்தேவ்யாதியினி
அமைய வனையாய் நாண் மூன்று மளவும் வீக்கம் போமென்று
நமையா ளீச னுரைசெய்தா ஞடிச் செய்ய வல்லோர்க்கே. 229

உத்த மதாளி யூமத்து முறுமா தளையி னிலை பசளி
அத்த ளவாகச் சரிகூட்டி யவியா மணக்க மெண்ணெயினில்
ஒத்துச் சூழ மேல்வைத்தே யுவநா யஞ்செய் நாண் மூன்று
குத்துஞ் சூடும் வலிகாந்தல் குலைந்தே யோடு மிதுமெய்யே. 230

### சந்தப்பாணம்—உடைக்க

தலையி லுரோமம் புளிப்பொருக்குத் தாவு [2]மரவி னதிற்றோலும்
தலவும் மாட்டுப் பல்லாமைக் கூடுங் கருங்கல் லாமணக்கின்
இலையம் வித்து மிவையெல்லாஞ் சுடடாமணக்கி னெண்ணெயினுல்
இலக வரைத்து வியாதியினி லிட வே யிளகி யுடைந்திடுமே. 231

### காரம்

செம்மியே யடிக னத்துச் சேர்சன மிகவு மாகி
அம்மியுட் சியனின் றக்கா லறுத்ததிற் காரங் கேளாய்
தும்மெலி மருந்தி ஞேடு துரிசிடை கூட்டிப் பண்பாய்
வெம்மையா மனலிற் சுட்டு நுணுக்கிவெண் சீலையூட்டே. 232

ஊட்டிப்பின் புண்ணிற் போட வுருகவே வெந்த போது
வாட்டடங் கண்ணி ஞளே மறுபடி தயிருஞ் சோறும்
கூட்டி வைத் தம்ம கட்டிக் குலவுறு தசைநீர் மாற்றி
நாட்டமா யெண்ணெய் வைக்கு மருந்தினை நவிலக் கேண்மோ.

### துவரெண்ணெய்

[4]நாற்பான் மரத்திற் பட்டையொடு நல்லா வரையில் வேர்ப்புறந் தோல்
[5]காற்பா சத்தி னிலைச்சாறு கருது [3]மலரி னரசந்தோல்
தாற்கா லத்தே யாடருந்தா மூலி சாரு மொடுவடக்கி
கூர்ப்பா யெலுமிச் சங்காயி னளவா யரைத்துக்கொள்ளுவதே. 234

---

[1] மணக்கு-ஆமணக்கு.

[2] அரம்பைக்கனித்தோலும் என்றும் பாடம்.

[3] மலரினரசு-பூவரசு.

[4] நாற்பால்மரம்: அத்தி இத்தி ஆல் அரசு என்பர்; சதுரக்கள்ளி என்பாருமுளர்.

[5] காற்பாசம்-பருத்தி.

வேறு மருந்து புங்கந் தோல் வேம்பா டலிசேறு டதிமதுரம்
நாறு மிருசீ ரகந்துத்த நறிய துரிசு கைப்புடனே
கூறு மவின்கஸ் தூரிமஞ்சள் வெண்குந் திருக்கங் குளவிந்தம்
ஊறு [1]பசுவின் மணக்கெண்ணெ யுறவாய் வெந்து வடிப்பதுவே.

வடித்த வெண்ணெய் புண்ணிலிட்டு வராலி மாதளை தெங்கினிலை
அடுத்தா வரையி னிலையிவையோ டவித்துவைத்தங்கணைப்பீராய்
மிடுக்கே செய்யும் பிளவையெல்லாம் வேறு நகரம் விரைந்தோடிக்
கெடுத்தார் நம்மை யெனக்கதறிக் கலங்கிக் கெடியில் விழுந்திடுமே.

### மெழுகெண்ணெய்

மஞ்சணன் மெழுகி னேடு வளரும்வெண் குந்தி ருக்கம்
அஞ்சனக் கல்லுத் துத்த மதிமது ரங்கன் னுரும்
மிஞ்சிய காசுக் கட்டி கைப்புவேம் பாட றுத்தம்
வஞ்சியே கழஞ்சொவ்வொன் றுவளருமெள்ளெண்ணெய் தன்னில்
தஞ்சமாய் வெந்து போடச் சாத்திய மாகும் புண்ணே. 237

### பிளவையில் மரணக்குறி

தாகமு மோக முண்டாய் மலமொடு சலமுங் கட்டி
ஏகுமே லிளைப்பு விக்க லெடுபிடி யெனவு முற்றி
மோகவுண் மூச்சி னேடு முழலைகண் மூரி கண்டால்
ஆகுவ தொன்று மில்லை மரணமென் றறிந்து கொள்ளே. 238

அறிந்திடு செவிகண் ணுசி யாகமோ டுச்சி கைகால்
செறிந்திடு வெச்சாப் பின்றிக் குளிர்ந்துச்சி சிறிது சூடாய்
மறிந்துகண் குளிர்ந்து காட்டி வாயுமே னேக்கு மானல்
பறிந்திடு மரண மென்றே முனியுரை பகர்ந்த தாமே. 239

கபாலப் பிளவை முற்றிற்று

---

## VI. கபாலத்திமிர் 2 வரலாறு

### அசாத்தியம் 1 சாத்தியம் 1

செய்ய கபாலத் திமிர்க் தணங்க டேனே சுரத்தால் வாதத்தால்
கையுஞ் சன்னி விடமதன ஞளுஞ் சிரத்தி லடங்குமது
உய்யும் படிக்கு வழிகாண தொருபா ரிசத்தி லுண்டென்னில்
மெய்யே மீளுஞ் சிரமுழுது மேருங் கபாலத் திமிரதுவே. 240

### 1. கபாலத் திமிர்க் குணம். இது சாத்தியம்

சென்னி மீது மேவிய திமிர்த்தி றங்கள் செப்புகேன்
மன்னும்நீர் மிகப்பரு ருத்துமாறி டாம லூர்ந்திடும்
பின்னு ரோம மானதும் பிதிர்ந்து திர்ந்து போய்விடும்
முன்னமே யுணர்ச்சி யின்றி மூரி வெள்ளை யாகுமே. 241

---

[1] பசுவின் மணக்கு-ஆமணக்கு.

## 2. கபால பாரிசத்திமிர்க்குணம்

### இஃது அசாத்தியம்

செல்லுமோர் புறத்தில் வந்து சென்னி மீது தோன்றிய
புல்லு பாரி சத்திமிர்ப் புறுங்கு ணங்கள் மின்னனுய்
வல்ல வாறு கேண்ம ரத்தின் மேலதாய் மதர்த்திடும்
ஒல்லேயில் லுணர்ச்சி யின்றி வேர்வை யாகி யோடுமே. 242

பருதி மேவு போதினும் பனிகொள் போது மனனுர்
அருகு மேவு போதினு மறப்ப சித்த போதினும்
உருகி வேர்வை யாகியே யுணர்ச்சி நீங்கு மிக்குணம்
அரிய பாரி சத்தி மிர்ப்ப சாத்தியம் மறிந்திடே. 243

## மருந்துவம்

### 1 சம்பீரத் தைலம்

திட்டம்பட வறிந்து கொண்டு செய்மருந் ததனைக் கேண்மின்
மட்ந்தையே யெண்ணெய் நாழி வளரான்பால் குறுணி விட்டுத்
தடம்பெருந் திடுஞ்சம் பீரப் பழத்தினிற் சாறுநாழி
உடன்கன மிளகு நாழி யொக்கவெட் டொன்ருய்க் காய்ச்சே. 244

காய்ச்சியே கையான் சாறு கமுகிலேச் சாறு நாழி
வாய்ச்சவெற் றிலேபா வட்டை வள்ளியின் சாறு நாழி
பேய்ச்சரை பீர்க்குச் சாறு பேணியோர் நாழி விட்டுக்
கூச்சமில் சரக்குக் கோட்டங் குக்கில்செண் பகப்பூ மாஞ்சில். 245

சித்திர மூலந் தேவ தாரந்திப் பிலியின் மூலம்
சுத்தநற் கடுக்காய் மஞ்சள் துரிசவின் கிராம்பு சாதி
பத்திரி கடுவ சம்பு குளவிந்தம் பகர்வெட் பாலே
ஒத்திடு விழால்கார் கோல முரோகணி கழஞ்சொவ் வொன்றே.

ஒன்றதா யரைத்து வெந்து வடித்துடன் முழுகு வோற்குக்
கன்றிய திமிர்வா தங்கள் கனப்புடைக் கபால சூலே
துன்றுகா திரைச்சல் பக்கந் தோன்றிய திமிர்ப்புச் சூடும்
அன்றியுஞ் சிரத்திற் சேரும் வியாதிக ளனேகம் போமே. 247

### 2. நாணுங்கள்ளி யெண்ணெய்

நாணுங் கள்ளி வடக்குவேர் நன்ரு யுலர்த்திப் பொடியாக்கித்
தேனே யெண்ணெய் தனிற்றூவித் திரள வெந்து தினந்தேய்க்கப்
போனுர் சிரத்திற் றிமிருடனோர் புறத்துத் திமிரும் பொசிவேர்வும்
ஊனே செய்யுங் கரப்பனிவை யுடனே தீரு முண்மையீதே. 248

கபாலத் திமிர் முற்றிற்று.

———

## கபாலக் கிருமி 2

### சாத்தியம் 1 அசாத்தியம் 1

உண்மையாய் முன்னே ரோது முச்சியின் கிருமித் தோடம்
வண்மையாய்ப் புறத்தி லொன்று மண்டையு ளொன்று மாகும்
திண்ணமா யுள்ளே சேருங் குணத்தினைச் செப்புங் காலை
மண்ணுளோ ரறியச் சென்னேஞ் சாத்திய மாகுந் தானே. 249

காரண மறிந்தோர் பேசுங் கபாலத்தின் கிருமி தன்னில்
தாரணை யறிந்து கொள்ளீர் புறத்திலே சாரு மென்னில்
வாரணி முலையி னுளே யாசாத்திய மாகு மென்று
பூரண மாகச் சொன்னே மக்குணம் புகலக் கேளே. 250

### 1. உட் கிருமிக் குணம் இது சாத்தியம்

ஏயநற் கபாலத் துள்ளே யெய்திய கிருமித் தோடம்
தீயவக் குணமே தொன்னிச் சிரத்திலே தினவுண்டாகும்
[1] தூய்மையில் சியனீர் கொண்டு தும்மலோ டிரும ரேன்றும்
ஆயகண் துடித்து வீங்கி யதன்மயிர் கழியுந் தானே. 251

### 2. புறக்கிருமிக் குணம் இது அசாத்தியம்

தானே கபாலப் புறக்கிருமி தக்க குணத்தைச் சாற்றக்கேள்
மானே தலையி லூரோம மெலாம் வடுவா யுதிர்ந்து தழும்பாகும்
பேனே யூரும் போலூரும் பின்னுஞ் சாம்பல் பொருக்குவிழும்
தேனே யிந்தக் குணமறிந்தாற் செய்யு மருந்தைத் தேர்ந்தறியே.

### நசியம்

வேலிப் பருத்தி யீருள்ளி மேனி யிவைமூன் றுடன்கொண்டு
சாலத் தண்ணீர் விடுகசக்கித் தப்பா திரண்டு நாசிவிட
மேலுங் கிருமி கூட்டோடே விழுந்தேபோகு முட்புண்ணும்
சீலு நீரு மிடியொடுவுந் தினவுந் தீருந் திண்ணமிதே. 253

பாக லிலையின் சாறதனிற் பகருங் கிருமி சத்துருவை
நோக [2]வருதே பொடிகொண்டு துங்கா தலசி வாயிலிட்டுத்
தோகை யனையாய் நாசிவிடு துடிக்குங் கிருமி சீழிரத்தம்
ஏகு மிதுவே யுண்மையென விமையோர்க் கருளிச் செய்ததுவே.

ஆதனைக் கிழங்கி னேடே யாடுதீண் டாத மூலி
கோதையே சிறுதக் காளிச் சாறெலாங் கூட விட்டே
ஓதிய சூடன் றன்னை மேற்பொடி யுடனே கூட்டி
தீதிலா நாசி யூடே விடுவைநீ கிருமி தீரும். 255

---

[1] தூப நாசியினீர் கொண்டு துமமலு மிகவுண்டாகும் என்று பாளம்.
[2] வறுத்தே என்றும் பாடம்.

### 4. பேய்ப்பீர்க்குத் தைலம்

பேயின் பீர்க்கிற் சாறுழக்குப் பேசு மதின்வித் தொருகழஞ்சு
தூய வெண்ணெய் தானுழக்குந் துரிசு மவினு மரைக்கழஞ்சு
சேய கிருமி சத்துருவுஞ் சீனக் கார மொரு கழஞ்சு
தோய வெந்து மூக்கில்விடு சுழலுங் கிருமி தொலைந்திடுமே. 256

### 5. நீலி வெண்ணெய்

வெள்ளை யவுரி வேர்ப்புறந்தோல் விரையவரைந்து நல்லெண்ணெய்
உள்ளே கொண்டு துரிசுமொரு கழஞ்சி னிடையாவுடன் கூட்டி
வெள்ள வெரித்தே மெழுகுபத மானல் விரும்பி மூக்கில்விடுத்
துள்ளுங் கொடுநீ சிரகிருமி யோடி யொழிக்கு முண்மையிதே. 257

### உ. ரோமக் கிருமி வெட்டுக்கு

கேச முதிர்ந்த தழும்பதனிச் கேளீர் சங்கு முட்கொண்டு
கூசச் சிலுப்பிக் குருதிவரக் கூறுங் கெவுரி மஞ்சாடி
பேசுங் கையான் சாற்றரைத்துப் பிரதித் தேய்த்துப் பின்னுங்கேள்
தூசைச் சுட்ட கரிகையான் சாற்றிற் சூடன் கலந்திடுமே. 258

ஆலம் பாலி லரிதார மரைக்கா சளவு பொடியிட்டு
மேலும் வெய்யி றனில்வைத்து விரைந்து பூசாய் நாட்பத்துச்
சாலவுதிர்ந்த ரோம முண்டாந் தக்க கிருமி சீயொடுவும்
ஏலக் குழலாய் தீருமென விறையோ னருளிச் செய்ததுவே. 259

கபாலக் கிருமி முற்றிற்று.

---

### 8. கபாலக் கனப்பு 3.

#### அசாத்தியம் 1 சாத்தியம் 1

திய்ய கபாலக் கனப்பதுவுந் தீருந் தீரா ததுகேணேய்
செய்யும் வாயு நீரிரத்தஞ் சேரு மூன்று வாயுவுமே
ஐயந் தீரத் தீர்ந்திடா தாயுள் வேதத் தவருரைத்தார்
உய்யு மிரத்த நீர்க்கனப்பு ரண்டுந் தீரு முண்மையிதே. 260

#### க-வாயுக் கனப்பின் குணம் இஃது அசாத்தியம்

வாயு மிகுந்து மண்டையினில் வந்தே கனக்குங் குணங்கேளாய்
தூய விழியும் புகைந்துவருந் துண்டமடைக்குஞ்செவியிரைக்கும்
ஆய பிடரி வலியுண்டா மலகு கடுக்கு முகமதைக்கும்
சேய சிரத்தி லுணர்வுகெடுஞ் சேருங் குணத்தைச் செப்பிடிலே 261

#### சாத்தியம் இரண்டில்

#### 1 இரத்தக் கனப்பின் குணம்

செம்மிடு மிரத்தத் தாலே சிரக்கனப் பாகுஞ் செய்கை
அம்முகஞ் கனப்பு முண்டா மடிக்கடி சுரமே யாகும்
விம்மிடும் விழியி ரண்டும் வெதும்பிடு முச்சி மீது
வெம்மைசேர் விழியி னுய்கேள் புருவமும் பிடரு நோயே. 262

### 2. நீர்க் கனப்பின் குணம்

நீரினற் சிரங்க னக்குஞ் செய்கையை நிகழ்த்தக் கேளாய்
ஊருமே பரப ரத்து ரோமமு முதிருங் கண்டாய்
கார்குழன் மானே சென்னி கசிந்துமென் மேலுநோவாம்
பாருமிக் குணங்க ளோர்பா லுண்டெனிற் பக்க நோயே. 263

### மருத்துவம்

### 1. மாவிலங்கம் வேர்த் தைலம்

நோக்குமிக் குணங்க ளெல்லா நுண்ணிதா யறிந்து கொண்டு
போக்கிடு மருந்து கேளாய் புகன்றமா விலங்கை வேரும்
காக்கணந் தில்லை நாறுங் கள்ளியின் வேரு மாயில்
ஊக்கமா முவாயின் வேரு [1]நரியுடை வேரு மாமே. 264

சித்திர மூலி வேருந் தேட்கொடுக் கிலந்தை வேரும்
உத்தமா காணி வேரு மோரொன்று பலம்பத் தாக
அத்தைநீ தறித்துத் தூணி யமிர்திட்டுக் குறுணி யானல்
மத்தெருக் குவாயே சங்கு வளர்முருக் கிலையின் சாறே. 265

சாறொன்று நாழி விட்டுச் சாற்றெண்ணெய் குறுணி கூட்டி
ஊறினன் மிளகு சுக்கோ டோமமாஞ் சரத்தைக் கொட்டி
வேறுள விழால்வெட் பாலை வெந்தயம் விளங்க மிந்து
கூறிய தேவ தார மதுரமுங் கூறக் கேளே. 266

ஏல நாகம் பூக்கோட்ட மிருசீர் வசம்பு முந்திரிகை
சீலச் சந்தன மதிவிடயந் தேற்றுக் கொட்டை மஞ்சளுடன்
கோலச் சாதி கிராம்புபத்ரி வெண்குந் திருக்க மரமஞ்சன்
சால வொன்று முக்கழஞ்சு தப்பா திடித்துத் தூவுவதே. 267

தூவிப் பதத்தில் வடியிட்டுச் சொன்ன வெந்நீர் முழுகிவர
மேவுஞ் சிரத்திற் றிமிர்கனப்பு மின்னே யிரத்த நீர்வாயு
கோவிந் திடிக்குஞ் சூலையுச்சிக் குத்துப் பிடரி வலியிவைகள்
தாவிப் பதறி யோடுவது தப்பா தீதனைச் செய்வீரே. 268

### 2. நிம்பாதித் தைலம்

நிம்ப மட்டி யாயி ஞெச்சி நீலி புங்கு வாகையு
நேய பேய்த்தி மிட்டி வீழி நீணி லத்தி யங்குவாய்
பம்பு வெண்க டம்பு வேலி வேளை குப்பை மேனியும்
பற்ப டாக மோடு சீந்தில் பாலை சித்ர மூலிவேர்
விம்ப வாயி ஞய்ப தின்ப லங்கொள் தூணி நீரில்
வெந்து மீள வேயி றுத்து விட்டு நீவி ரைந்துகேள்
தம்ப மான வெண்ணெய் நாழி நிம்ப வெண்ணெய் நாழியுஞ்
சாரி சுக்க ரத்தை மஞ்சள் சன்னி நாய ஞேமமே. 269

[1] நரியுடை-முசுமுசுக்கை.

ஓது தேவ தார மாஞ்சில் ரோணி மேதை சீவக
முள்ளி காரு கோல்வி ளங்க மூறு கண்டில் வெண்ணெயும்
சீத முற்ற முப்ப லைசி றந்த பஞ்ச வர்க்கமுஞ்
செம்பு கெந்த ராசி குக்கில் சேர முக்க ழஞ்சதாய்த்
தாதெ ழப்பொ டித்திடித்து வெந்து நற்ப தத்திலே
தைல மிட்ட போது சென்னி தங்கு சன்னி குத்துடன்
காதி ரைப்ப டைப்பு டன்க னப்பு வெப்ப பித்த மூங்
காத தூர மோடு மோடு முண்மை யுண்மை காணுமே. 270

### 3. அமுக்கிராய்த் தைலம்

ஓது மமுக்கிரா வெண்ணெய் தனையுலகில்
ஏதமற வைக்கு மியல்புகேள்—மாதே
கருங்காலி வெண்கடம்பு காரகில் வேங்கை
பொருந்துமகில் [1] பூதவர்க்கங் கோட்டம்—விரும்பும்
அழிஞ்சில் குருந்தோ டடமபுன் னாகம்
கொழுஞ்சியிரு வேலிகொட்டி நாரி —தெளிந்த
நீர்த்தெற்றி யோரொன்று நேராய்ப் பதின்பலங்கொள்
பார்த்து நிறுத்துப் படியாகக்—கூர்த்த
அமுக்கிரா வேரு மளவுசமன் கூட்டி
அமுக்குநீ ரெண்மரக்கா லாக—அமைத்தபடி
எட்டொன்ருய்க் காயச்சி யிறுத்திள நீ ராவின்பால்
கட்டாக வெண்ணெய் கலந்துவிட்டுத்—தட்டாதே
கையா னவுரி கமலவேர் பூவல்லி
செய்ய கொடுப்பை சிறுகீரை—உய்யும்
பிரமி யவுரி பெருந்தும்பை நொச்சி
அரிய கொழுஞ்சி யவரை— உரியதொரு
சாறடை வீழியின்னுந் தக்க முசுமுசுக்கை
கூறிய வேம்பு குளப்பாலை—வேருென்று
சாறுரி விட்டுத் தகர மிலவங்கம்
கூறிய முக்கடுகு கொத்தமல்லி —தேறு
கருஞ்சீர் விடயங் கிராம்பு பலைமூன்
றரும்பஞ்ச வாச மதுவும்—திருந்திய
ஏல மரத்தை யிலவங்கம் பச்சைவெட்டி
சாலத் தகர மதாவரிசி—கோலமுடன்
கஸ்தூரி மஞ்சள் கருதுகார் கோலுலுவாப்
பற்றிய சந்தம் பசுமஞ்சள்—உற்றதொரு
சாதிக்காய் மாஞ்சி றகைய நெரியரிசி
பேதித்த முந்திரிகை பேரீஞ்சு—சாதியின்

---

[1] பூதவர்க்கம்- பீநாறி.

[2] நீர்த் தெற்றி- தேற்ருவேர்.

பத்திரி யோரொன்று பக்குவமாய் முக்கழஞ்சு
சித்தமுறக் கூட்டிச் செயுமுறைகேள்—புததியுடன்
சேர வரைத்துத் திருபபக் கரைத்து வெந்து
பாருமெழுகு பதமானல்—சார
வடித்துவைத்து வெந்நீர் தனில்முழுகு வாருக்
கிடித்த சிரக்கனப் பகும்—தொடுத்த
இருகா திரைச்ச லிடிகன்ன நோவு
பெருகு மிருமல் பிடரோ—டரிய
சிரத்துவலி குத்துத் திமிர்ப்புக கரப்பன்
பொருக்கெழூங் குட்டம் பொடிப்புத்—திருக்கு
முகவாத சன்னி முதலையகள் போகும்
பகருமுறை செய்வீர் பரிநது. 271

### 4. சிவனுர் வேம்புக் கற்பம்

செய்யசிவ வேம்பினெடு திப்பிலி யரத்தை
துய்யவறு கோடுகடு சுக்கினெடு மஞ்சள்
பையவறுத் துப்பொடி பரிந்துநறு செய்தேன்
ஐயமற வுண்டிட வறுஞ்சிர கனப்பே. 272

சிரக்கனப்பு முற்றிற்று.

---

## 9. கபாலவலி 1

### கபால வலி வரலாறு

நீரினற் குருதி சீயா னெருக்கிய வாயு தன்னல்
சீரிய சுவையால் வெப்பாற் சிரத்தினில் வலியுண்டாகும்
ஆரிய னுரைத்த வுண்மை யாயுரு வேதந் தன்னில்
கூருமிக் குணங்க ளெல்லாங் குறித்துநீ யறிந்து கொள்ளே. 273

### கபால வலியின் குணம்

கண்டந் தன்னின் மேன் [1]மூன்று கதிக்க மண்டை வரட்சியினல்
துண்டம் புருவங் கூடுதலிற் சுழியிற் கண்ணிற் குத்துண்டாம்
மண்டு நீரு மிடியுண்டாய் வலிக்கு மலகு கடுக்குமிக
மண்டை முழுதும் பரந்து குத்தி வருத்துங் கபால வலியாமே. 274

ஓடியே சிரத்திற் குத்து முளைந்திடுங் கனன நெற்றி
நீடிய புருவத் துள்ளே நெரித்திட வலிப்பு முண்டாம்
கூடிய புணர்ச்சி தன்னிற் குலவுநீர் சிவந்து வீழும்
நாடிய குணங்க பால வலியென நாட்டலாமே. 275

கருதிய கபாலத் துள்ளே கனலெழ வெரிப்பு முண்டாம்
இருசெவி யிறைச்ச லோடு மிருமிடுங் கோழை வீழும்
திருகவே முகம்வ லிக்குந் தேருநா வரட்சி யாகும்
பெருகுமிக் குணங்க பால வலியெனப் பேச லாமே. 276

---

1 மூன்று- வாத பித்த சிலேற்பனங்கள்.

## மருத்துவம்

### 1. கருங்காலித் தைலம்

வகைசேர் கருங்காலி தழுதாழை நொச்சி
வாகான நிலவாகை தலைசூடு வல்லி
புரைதீ ரமுக்கிரா நன்னாரி சீந்தில்
புங்கவேர் [1]மிளகுசா ரணைவேர் புடோலும்
விரைமேவு லாமிச்சு வெட்டியிரு வேலி
மிகுசிற்ற மட்டிபேர் மட்டியதில் வேரும்
சரியாக வேபதின் பலமது நிறுத்துத்
தக்கநீர் முக்குறுணி விட்டெரி சரக்கே. 277

சந்திஞெடு கொத்தமலி யேலமில வங்கஞ்
சாதயின் காயிமிகு பத்திரி கிராம்பு
முந்துமதி மதுரமொடு ரோகணி கடுக்காய்
முத்தமொடு திரிகடுகு மொத்ததிரி பலையும்
இந்துவொ டரத்தைகன் ஞர்பச்சை வெட்டி
யிருசீர் வசம்புள்ளி யிருதேவ தாரம்
அந்தமுற முக்கழஞ் சொக்கநிறு மின்னே
யளவான பாலெண்ணெ யிளநீ ரளாவே. 278

வேகா பதத்தே வடித்தே குளிக்கில்
மிக்கான சிரரோக மெப்போது மேவாப்
பாகான மொழியாய் வரட்காச சூலை
பக்கபீ னிசரோக நாசியா பீடம்
ஏகாத ரத்தநோ விடவாயு நெஞ்சி
லெரிவோடு வெயர்விக்க லெய்ப்போ டிளைப்புப்
போகாத கசநோவு பரதாக மீழை
பொடிப்போடு குட்டம் பெருக்காகி விடுமே. 279

### 2. திப்பிலிச் சூரணம்

திப்பிலி யரத்தைகடு கற்கடக சிங்கி
சிவதைமுப் பலைபாரு சீரகமொ டேலம்
கொத்தமலி முக்கடுகு கோட்டமில வங்கங்
குக்கிலு விளங்கமவின் மிக்குளகன் ஞரும்
தக்கரோ கணிசாதி பத்திரிகி ராம்பு
சாதியின் காயொன்று சார்முக் கழஞ்சாய்
முற்பட வறுத்திடி பொடித்துமது வுண்ணின்
முடுகாது சிரவாத வலிபேகி விடுமே. 280

---

[1] மிளகு-சாரணை மிளசரணை. இதைக் காஞ்றை என்பர் சிலர்.

### 3. அஞ்சனம்

உள்ளிகடு திப்பிலி மரீசமுட னேலம்
தள்ளரிய சுக்கினொடு தானிவை கழஞ்சாய்
விள்ளரிய வெற்றிலையி னீர்விட் டரைத்தே
எள்ளளவு கண்ணிலிடு வாய்சிர வலிக்கே. 281

மேற்கூறிய சரக்குகளை வெற்றிலைச் சாற்றில் அரைத்து மாத்திரை செய்து வைத்துக் கொண்டு வேண்டும்போது பொடி பண்ணிக கண்ணிற் றூவுக. முலைப்பாலில் உரைத்து மிடலாம். கடு-எ-து கடுக்காய்-மரிசம் எ-து-மிளகு.

### 4. நசியம்

[1]பூவம் பழமும் பழவரப்பும் புதிய மிளகோ டிந்துப்பும்
யாவு மடங்க வத்திப்பா லதுவே டொக்கப் பொடிகொண்டு
தாவு முலைப்பா றனிற்கலக்கித் தப்பா திரண்டு நாசிவிடப்
பாவுங்கபால வலிதானும் பசாசுங் கணமும் பறந்திடுமே. 282

கபால வலி முற்றிற்று.

---

## X. கபாலக் குத்துக் குணம் 1

புருவச் சுழியிற் குத்தி நின்று போகப் பிரியு மல்லாமல்
உருவவிடித்துத் திமிர்ப்புண்டாமுட னேயடங்குஞ் சிரந்தன்னில்
திருகப் பிடரி மிகவலிக்குஞ் சில்லென் றடைக்கு மிருதுகாதும்
பெருகக் கபாலக் குத்திதென்று பேசி யிருப்பர் பெரியோரே. 283

## மருந்துவம்

### 1. திருமேனி யெண்ணெய்

குப்பை மேனிச் சாறுழக்குக் கொடிய வேலி முக்கழஞ்சு
செப்பு மெண்ணெய் நாழிவிட்டுத் தேவ தார மதிமதுரம்
கைப்புப் பத்ரி கனமிளகு கடுக்காய் கடுகு மிருகழஞ்சு
தப்பி டாம லிவைவெந்து தேய்க்கத் தலையிற் குத்தறுமே. 284

### 2. அஞ்சனம்

வேர்க்கொம்பி பதனைத் தோல்சீவி வேலிப் பருத்தி யிலைச்சாற்றை
ஊற்றி வெய்யி றனில்வைத்தே யூறற் றுற லெடுத்துலர்த்தி
நீர்க்க முலைப்பா றனிற்கரைத்து நெய்யிற் றிரியை யுலர்த்தியபின்
ஆர்க்கும் விழியி லெழுதிவர வலறியோடுஞ் சிரக்குத்தே. 285

தோல் சீவிய சுக்கை வேலிப் பருத்தியிலைச்சாறு விட்டு இரண்டு மூன்று நாள் வெய்யிலில் வைத்துப் பின் உலர்த்திப் பொடி செய்து முலைப்பாலில் நீர்க்கக் கரைத்து வெள்ளைச்

---

[1] பூவம்பழம்-பழப்பாக்கு.

ழிலையிலூட்டி யுலர்த்துசஉலர்ந்த பின் திரித்துப் பசு நெய்யிற் ரோய்த்து எரித்து விழுதைலத்தைச் சிமிழிலடைத்து வைத்துக் கண்ணிற் றீட்டுக.

மேலே கூறிய கருங்காலித் தைலம் இதற்குமாம்.

கபாலக் குத்தி முற்றிற்று.

---

## 10. கபால வரட்சி 1

### குணம்

இயம்பிய சிரத்தின் மீது கனலென வெரிக்குங் கண்ணுங்
தயங்கிய செவியுண் ணுக்கு நாசியுஞ் சாலச் சூடாம்
நயம்பெறு சிறுநீர் தானு நாளுமே கலங்கிக் காட்டும்
வயங்கிழை மானே மண்டை வரட்சியின் குணங்க ளாமே. 286

ஏயநா வுலருங் கைகா லெரித்திடு மிருகண் பொங்கும்
சாயவே யிரும லுண்டாஞ் சலமொடு மலமுந் தீயும்
தூயகண் மருண்டி ருண்டு சுழன்றிடுங் கிறுகி றென்னும்
ஆயமா முனிவர் சொன்ன மண்டையின் வரட்சி யாமே. 287

### சிரபாரிச வரட்சி

மேவிய சிரத்தி லோர்பா லிக்குண மிகுந்து தென்னில்
பாவையே யறிவை நீயும் பாரிச வரட்சி யென்றே
தாவிய ரோக மாற்றத் தக்கதோர் தைல நையம்
மேவுகண் டுஷஞ் செய்யும் விதியினை விளம்பு வேனே. 288

### மருந்துவம்

#### 1. சந்தனாதித் தைலம்

ஆயுண் மறையி னரியசந்த னாதிணெண்ணெய்
நேயமுற வைப்பதற்கு நேரிழையே—தூய்தான
சந்தனந்தா னூறுபலஞ் சாற்றுகின்ற முக்கலநீர்
வெந்து பதக்காக வேயிறுத்தே—அந்தமுறும்
லாமிச்சு வெட்டி யிருவேலி நன்னாரி
போமுத்தற் காசு புகலக்கேள்—பாயும்
[1]வனச வளைய மதினல்லி பூவும்
வினவிய செங்கழுநீர் வேரும்—வனமுலையீர்
கோவையின் தண்டுங் குமரி யதின்வேரும்
தாவு மிருப்பை தரும்பூவும்—மேவிய
பேய்ப்புடோல் சீந்தில் பெருகு திரிபலையும்
காய்ப்புறு மேலங் கருதுநற்சீர்—வாய்ப்புறு
கொட்ட மிலவங்கங் கூறுந் திரிகடுகு
தட்டாம லொவ்வொன்று சாற்றக்கேள்—கட்டாய்ப்

---

[1] வனச வளையந் தாமரை வளையம்.

பதின்பல மொன்று பரிவாகக் கூட்டி
விதம்பெற வெண்மரக்கா னீர்விட்டுச்—சதம் பெற
வேகுறுணி யாக்கி விரவு கஷாயமதில்
ஆக நறுநெய் யறுநாழி—வாகுபெறு
நல்லெண்ணெ யோர்குறுணி நல்லாவின் பால்குறுணி
புல்லு மிளநீர் புகல்குறுணி—நெல்லிக்காய்
நீர்குறுணி விட்டு நிகழ்த்துகேன் பொன்மெழுகு
கூரவே யெண்பலங்கொ ணீர்குறுணி—சேரவே
தோளாந் திரமாய்த் துளங்கவெரி நாழியதாய்
மீளவடி முன்மருந்தில் விட்டதற்பின்—கேளின்னும்
சீதேவி வல்லாரை செங்கழுநீ ரப்பையிலை
மாதே சதாவேரி வண்கமலம்—ஓதிய
சீந்தில்புடோல் தென்னைமடல் சீர்கங்கை சேர்கையான்
[1]போந்தைமடல் முன்னை பொருமுசுட்டை—ஆய்ந்தெடுத்த
நற்கோவை யாடருந்தாப் பாலை நவில்கொற்றுன்
கர்ப்பூர வள்ளி கமுகினிலை—பொற்பாய்
வளர்நெய்தல் கொட்டி மலைதாங்கி வள்ளி
உளசா றுரியொன்று கொண்டே—அளவாக
ஒன்றித்துக் கற்க முரைப்பேன் றெசமூலம்
அன்றியட்ட வர்க்க மதிவிடயம்—துன்றும்
நெரியரிசி கோட்டமுட னேரியசி ரேலம்
வருதேவ தார மதுரம்—தருசாதிக்
காயி லவங்கந் தகரநற்சீர் செண்பகப்பூ
ஏய விலாமிச் சிருவேலி—தூய
புழுகுசட்டங் குங்குமப்பூப் புல்லிய பச்சை
உளுவை விழாலரிசி யோமம்—பழுதில்லா
மாஞ்சிமஞ் சிட்டி மகிழம்பூ முந்திரிபேர்
ஈஞ்சுநில வுப்போ டியம்பக்கேள்—வாஞ்சையுறு
தாளிச பத்திரியுந் தக்க கிராம்புடனே
கேள்சத குப்பை கிளியூறல்—வாள்விழியாய்
சாதிபத்ரி கார்கோல் சார்பச்சைக் கர்ப்பூரம்
ஓதிலொன்று முக்கழஞ்சா யொன்றித்து—மாதே
பொடித்தெண்ணெ யிற்றூவிப் போதமுறக் காய்ச்சி
வடித்து முழுகி வரவே—கடுப்புடைய
நீர்த்தோட மத்திசுர நீரழிவு மண்டைநோய்
வேர்த்த சிரத்திடிகள் மெய்வரட்சி—சாற்றிய
மண்டை வரட்சி வரிவிழி செம்முதல்
கொண்டமண்டை சூலை குளிர்வெதுப்புப்—பண்டையுள்ள

[1] போந்தை மடல்—பனை மடல்

நாசி யிரத்தமதி னுற்ற மிளைப்பீழை
பேசிய காதிரைச்சல் பீனிசமும்—நாசமாம்
குட்டங் கரப்பன் குரலடைப்பு நீர்க்கனப்பு
மட்டிலாச் சூலை சிரவாதம்—இட்டமுறப்
போந்தசிவ ஞானியர்க்குப் பூசை புரிந்துணவு
நேர்ந்து கொடுக்கு நிறைதவரைச்—சார்ந்துநின்ற
தீய வினையையெப்பாய்த் தீர்ந்துவிடு மென்றுமுனம்
சித்தர் மாமறை கூறு மறிந்து. 289

## 2. நசியம்

நறுநெய் தனிலே கர்ப்பூர [1]நாங்குழ் முந்திரி பேரீஞ்சு
மறுசெண்பகப் பூத்துரிசுதுத்தமானேயொன்று கழஞ்சுகொண்டே
உறுநற் பதத்தில் வடிநாசி யூடே நாலு துளி யொழுக்கில்
தறுகா தோடுஞ் சிரவரட்சி யென்றே பெரியோர் சாற்றினரே. 290

## ௩. கண்டூஷம்

ஏலங் கோரோ சணைசீனி யினிய முந்திரி பேரீஞ்சு
கோலப் [2]பச்சிலை கர்ப்பூரங் கோவி னெய்யி லேவடித்து
ஞாலத் தடைவே நாசிதனில் நாலு துளியை யொழுக்கிவரக்
கோலச் சிரத்தில் வரட்சியது குலைந்தே போகுமென வுரைத்தார்.

கபால வரட்சி முற்றிற்று.

---

# 12 கபால சூலை 3

## சாத்தியம் 1 அசாத்தியம் 2

சாற்றிய சூலை மூன்று தான்செயுங் குறிகு ணங்கள்
மாற்றமாம் வாயு வொன்று வழுத்துநீ ரிரத்த மொன்று
ஏற்றமாஞ் சாத்தி யகதா னியம்பிய வாயுச் சூலை
சாற்றிய நீரிரத்த மசாத்தியம் சாற்றுங் காலே. 292

## வாயுச்சூலையின் மூன்று குணம்-இது சாத்தியம்

கேளாய் சிரத்தில் வாயுநின்று கிளருஞ் செவியி லிரைச்சலுண்டாம்
தாளா திடிக்கு முச்சியெங்குந் தயங்கு நாசி வரண்டிருக்கும்
வாளார் விழியாய் முகங்கறுக்கும் வழுத்து மலகும் பற்கடுக்கும்
நாளே காது மந்திக்கும் நவிலும் வாயுச் சூலையிதே. 293

## அசாத்தியம் இரண்டில்

## 2. இரத்த சூலையின் குணம்

நாசி தனிலே யசறுவிழு நாற்ற மெடுக்கு மிடியுண்டாம்
பேசி லலகு தணையிடிக்கும் பின்னுந் தலையின் மயிர்கழியும்
ஆசை யுடனே மோர்பானெய் யருந்திற்பகையாய் முகங்கனக்கும்
வாச மிகுந்த குழலாரே மண்டை யிரத்த சூலையிதே. 294

---

1 நாங்குழ்-திலவேர்

2 பச்சைக் கற்பூரம் என்றும் பாடம்

## 2. நீர்ச் சூலையின் குணம்

சென்னி வேர்க்கு மயிர் முறியுஞ் சீறு நாசி நீர்வடியும்
இன்னே சுகந்தந் துர்க்கந்த மிரண்டு மணவா திடியுண்டாம்
அன்ன நடையாய் பல்லலையும் வாயு நாறு மலகுளையும்
மின்னே மண்டையுட் புண்ணாய்மென் மேற்கோழை விழுமன்றே.

## மருத்துவம்

### 1. ஆடுதீண்டாப்பாளை எண்ணெய்

ஆடு தீண்டாப் பாலைச்சா றளவே யெண்ணெ யுடன்விட்டுக்
கூட மிளகு பொடியுழக்குக் கூறுந் தேவ தாரமபின்
நாடு மதுரம் வேம்பாட னன்னா ரியின்வேர் கருஞ்சீரம்
வாடை மஞ்ச ளிவைகழஞ்சாய் வடித்தே மூக்கில் வார்முழுகே.

### 2. நிர்க்குண்டித் தைலம்

சேரு நொச்சி மாவி லிங்கை செய்ய மஞ்ச ணத்தியும்
ஆருமெட்டி வீழி தும்பை யவுரி கொன்றை யாதளை
சோரு குப்பை மேனி வேளை செம்மணத்தி யாயிலும்
பாரு மொன்று சாறு நாழி யெண்ணெய் பாலளாவிடே. 297

வெந்த யத்தொ டோம மாஞ்சில் மேவு சுக்க ரத்தையும்
சந்து கோட்ட மேல மோடு தக்க நற்கி ராம்புசாதி
அந்த நல்ல பத்தி ரீய வின்வி ழாலி னரிசியும்
முந்து சாதி மேவு காயு மாக வெந்து கொள்ளுமே. 298

மேவு மெண்ணெய் சென்னி மீது விட்டு நீகுளித்திடில்
வாவு மண்டை சூலை யோடு வங்கு குட்ட மீளையும்
தாவு சேற்ப பித்த முந்த யங்கு நாசி ரத்தமும்
பாவு சன்னி ரோக மும்ப ரிந்து தீரு முண்மையே. 299

### 3. அமுக்குராத் தைலம்

மேவு மமுக்கிரா யெண்ணெய்தனை மேதினியில்
ஆவலுடன் வைக்கின்ற வாறதுகேள்—பாவும்
அமுக்கிரா வேரு மரைத்துலாம் வெட்டி
கமழிலா மிச்சு கருங்காலி—நமக்குரிய
சீந்திகுறுந் தொட்டி திருகடுகு முப்பலையும்
போந்தலை சூடுவல்லி பொன் முசுட்டை—ஆய்ந்துகொள்
வேங்கை வயிரமுடன் வில்வவேர் நன்னாரி
ஓங்குசிறு நொச்சி யுவாய்வேரும்—பாங்கான
முட்சா றடைவேரு முன்னைவே ரும்புதிய
கொட்டைவே ராயில் குமிழம்வேர்—பட்டை
[1]விரிபூட்டின் வேரு மியங்கம்வேர் மின்னே
பரிவாக வென்றுபலம் பத்துச்—சரியாகச்

---

[1] விரிபூடு-பற்படாகம்

சேரத் தறித்துச் சிறந்தநீ ரெண்மரக்கால்
ஆரவெட் டொன்று யதுதெளித்து—வார்முலையாய்
நல்லெண்ணெய் நாலுபடி நாட்டுமிள நீர்பாலும்
புல்லுஞ் சமமாய்ப் பொருந்தவிடு—நல்த
கனக மிளகுபொடி கார்குழலீர் படிநால்
வினவி யிருகுறுணி நீர்விட்—டனலிருந்தி
நாலொன்றாய் வற்றி நசுக்கிப் பிழிந்துவிடுத்
தேலுமுறை கற்க மியம்புகேன்—சால
மதுரமொடு கோட்டம் வசம்பு குளவிந்தம்
புதிய கிராம்புகர்ப் பூரம்—நதியுதவும்
தேவர்கள் தாரு திருவீந்து முந்திரிகை
பாவு மதியுப்புப் பச்சிலையும்—காவிலுறை
நன்னாரி முத்தாநா னஞ்சுக்கே லங்கடுகு
கன்னாருங் கன்மதமுங் கண்டிவெண்ணெய்—பன்னுமிகு
நற்சந் தனம்பச்சை [1]நாகே சரமகிழம்
பொற்பூ வதிவிடயம் பூதவிர்க்கம்—கற்கெருட
பற்சையொடு தாளிசமும் [2]பஞ்சவா சம்விளங்கம்
நச்சுகத் தூரிமஞ்ச ணல்லசுக்கு—மெச்சுகின்ற
கோரோ சனைகுங் குமப்பூப் புழுகுசட்டம்
பார்சே ரரத்தை பசுமஞ்சள்—நேராகக்
கூட்டொன்று முக்கழஞ்சு கூட்டி யிடிபொடித்து
மீட்டுமெண்ணெய் மீது விரவியே—நாட்டமாய்
வெந்து மெழுகுபத மானவுடன் கீழிறக்கி
அந்த முறவே வடித்தடைத்து—முந்தைமுறை
வெந்நீர் முழுகிவர மேவு சிரசூலை
பன்னோய்கள் மண்டையிடி பற்குத்தும்—பின்னும்
பிடரி வலியிழை பீனிசநீர்ப் பாய்ச்சல்
கடிய செவியிரைச்சல் காதடைப்புத்—துடிபோல்
இடிக்குமண்டை சூலை யிருபுருவக் குத்தும்
அடுத்த சிரக்கனப்பு வாதம்—தடித்த
முகவாத சன்னிவிக்கன் மூக்கினீர்ப் பாய்ச்சல்
மிகைசேர் நயனவலி மேலிளைப்புப்—புகையேழும்
மந்தார காசம் வரட்சி சிரபித்தம்
செந்துவர்வாய் மின்னே சிரங்குகுட்டம்—சந்துநோ
வாத கரப்பன் வரட்கரப்பன் சத்திவிக்கல்
ஓதும் வியாதி யொழித்திடுமென்—றுதியரன்
சொன்னமுறை யாராய்ந்து தொல்புவியோர் செய்துவரின்
எந்நாளுந் தீரு மிவை— 300

[1] நாகேசாம்-நாகம்பூ

[2] பஞ்சயாசம்- தக்கோலம்- சாதிக்காய்- பச்சைக் கர்ப்பூரம்- இலவங்கம் வசுவாசி

### 4. தலை சூலைக்குப் புகை

மானே முதிர்ந்த வாளுக்கு மருவு மிரத மிருகழஞ்சு
தேனே தாளக மரைக்கழஞ்சு சேருந் துரிசு காற்கழஞ்சு
தானே வெள்ளைப் பாஷாணந் தறுகாதரைக்காற் கழஞ்சுகொண்டு
கானு ரூமத் திலையுடனே கருதி யரைத்துக் குளிகை செய்யே.

செய்யுங் குளிகை புகையேழுஞ் சிறக்கப் பிடித்தே யாறவிட்டே
உய்யநல்லாமணக்கெண்ணெயொன்றை யிடைவிட்டேயொருநாள்
மெய்யே குளிர்ந்த தண்ணீரின் முழுகப் பறங்கி சிரசூலை
நையுங் கிரந்தி வெடிசூலை நாடாதோடுங் கண்டீரே. 302

கண்டீ ருறைப்புப் புளியுப்புக் கலவா தரைமண் டலங்கொள்க
விண்டே வயிற்றிற் குருதிவிழின் மிகவே கஞ்சி வெண்ணெயுடன்
கொண்டால் வயிற்றி லுளைவகலுங் குளிருமுடம்பு நோவும்போம்
பண்டை மாலி னுருவாகும் பகர்ந்தார் சித்தர் மறையாய்ந்தே. 303

### 5. குக்கிற் சூரணம்

சுத்திக் கெந்தக மிரண்டுபலந் துலங்கு குக்கில் பதின் கழஞ்சோ
டொத்த பறங்கிப் பட்டையது முடனே நாலு பலங்கூட்டி
மத்துந் திரிகடு கிருசீரம் வாயு விளங்கஞ் சாதிக்காய்
அத்தி ஞெடு கிராம்புபத்ரி யரிய வோமங் கடுகு வெட்பால்
சித்ர மூலங் கார்கோலுஞ் சிவனுர் வேம்பு வெள்ளறுகே. 304

கேளாய் வேம்பின் பட்டையுடன் கிளரும் புங்கின் வேர்ல்வசம்பு
தாளா தொக்கச் சமன்கொண்டு சற்றே வெதுப்பி யிடிபொடித்து
நாளே மதுவிற் குழைத்தருந்திநவிலும்பத்யமண்டலங்கொள்ளத்
தாளா தோடுஞ் சிரசூலை தவிருங் கிரந்தி பறங்கியுமே. 305

கபால சூலை முற்றிற்று

---

### 13. கபால சன்னிக் குணம்

உகைத்தே சிரத்தின் மிகவலிக்கு முடம்பு வேர்க்குங் கண்குழியும்
புகைத்தே யிருமுங் காதடைக்கும் பொருந்து நாவும் வரண்டுவரும்
மிகைத்தே யுடம்பு கருகிவரு மெய்யே நடுக்கும் விழிசுழற்றும்
பகைத்தே யிளைப்பு வாந்தி விக்க லுண்டாங் குணத்தைப் பார்த்தறியே. 306

ஒங்குஞ் செவியிற் சீவீழு முலர்ந்து நாறு மொடுமாரு
ஆங்குக் கைகா லசந்திருக்கு மரம்போ னுவுங் கறுத்திருக்கும்
தூங்குங் கண்ணும் புகைந்துவருஞ் சொல்லும் பேச்சு மறப்புண்டா
ஈங்குச் சிரத்திற் சன்னியிதென் றியம்பு மா மறைதெரிந்தே. 307

## மருத்துவம்

### 1. நிம்பாதித் தைலம்

நிம்பம் பட்டை யாயி ஞெச்சி நேராஞ் சீந்தில் தழுதாழை
பம்பந் திராயு நிலவாகை பரிய முட்சா றடைகொழிஞ்சி
உம்பர்க் குரிய கூவிளைவே ருடனே நாரி சிறுவழுதில்
வெம்புங் கருடக் கொடிசிவனுர் வேம்பு சித்ர மூலியுமே. 308

மேவு மருந்து பலம்பத்து மின்னே தறித்தெண் மரக்கானீர்
தாவிக் காய்ச்சி வடித்தபின்பு சாற்று மியங்கு சிறுவேம்பு
பாவுஞ் சாறடைகொழிஞ்சி தும்பை பகர்ந்த கையான் செம்முள்ளி
காவி னெச்சி தழுதாழை கருது மொன்று சாறுரியே. 309

உரியவெள் ளாட்டின் பாலும் முழுந்துகா ணத்தின் சாறும்
அரியநல் லெண்ணெய் தானு மிளநீரு மளாவி விட்டுக்
கரியசீ ரகமோ டுள்ளி காருகோல் கடுகு மஞ்சள்
திரிகடு பலேயோ டோமஞ் செங்கழு நீர்க்கிழங்கே. 310

கிளரொவ் வொன்று முக்கழஞ்சு கேடில் வசம்பு மாஞ்சரத்தை
உளுவை சீவக மிடவகமு முறுதற் கோலங் கண்டில் வெண்ணெய்
விழாவெட் பாலே பூதவர்க்கம் மெட்டிக் கொட்டை கடுதோன்றி
அளவாஞ் சன்னி நாயகனு மரிய வெளுத்தற் பிசின்கோட்டம் 311

சர்ப்பக் கண்டம் பூநாகஞ் சாரு முசுற்று முட்டைமஞ்சள்
நற்சா திலிங்க மதிவிடய நாடொவ் வொன்று சமன்கொண்டு
சொற்ப மாக வனலெரித்துச் சுகமாம் பதத்தில் வடித்தெடுக்கில்
நற்கு ரணியிற் கபால சன்னி நாடா தோடுமுண்மையிதே. 312

## 2. பஞ்சரத்தின் சிந்தாமணித் தைலம்

புங்கெண்ணெய் நிம்பெண்ணெய் [1] தென்னை யெண்ணெய்
புன்னை யெண்ணெய் யெள்ளிலெண்ணெய் பொருந்தக்கூட்டி
மங்கையரே கரடிரத்தங் கோழி ரத்த
[2] மையிரத்த மாட்டின்பான் மலிய கூட்டித்
துங்கதிரி கடுகுதிரி பலேயோ டோமஞ்
சொல்வ்ளங்கம பூதவர்ககஞ் சோமனுப்பு
அங்கவிழா லரத்தைவெட்பா லரிசி யேல
மவின்சாதி பத்ரிகராம் பாய்ந்து கொள்ளே. 313

ஆய்ந்தகா ரோகணியு மட்ட வர்க்க
மதிவிடயஞ் சன்னியுறு நாயன் பேரீந்
தேய்ந்தசத குப்பைவெண் கோட்டம் வங்க
மெலிமருந்து மஞ்சிட்டி மாஞ்சி யிஞ்சி
காய்ந்தவுள்ளி பூநாக மிருவி துத்தங்
கருதுமிலா மிச்சுமதி மதுரங் கண்டில்
தோய்ந்தகுக்கில் கடுவிளங்க மிவையோ ரொன்று
சொல்லிரு கழஞ்சு நன்ருய்த் தொகுத்துக் கூட்டே.

---

[1] தென்னையெண்ணெய் என்று எல்லாப் பிரதிகளிலும் காணப்படுகின்றது. முன்னும் இவ்வாறு வந்தவற்றைச் தென்னையெணணெய் என்றே கொள்க.

[2] மை-வெள்ளாடு

கூட்டியிடி பொடிதூவிப் பதத்தில் வெந்து
கூறியநற் கர்ப்பூரங் குலவத் தூவி
வாட்டடங்கண் மடமானே சிறுகத் தேய்த்து
மறுபடிகேள் செவிதனிலும் சற்றே வார்க்கில்
நாட்டமுறு சிரசன்னி வெடிக்குஞ் சன்னி
நயனத்தி லிடைக்குத்து நயன வாதம்
ஈட்டமுறு பிடரிவலி திமிர்ப்பு வேர்வை
யிருசெவியி லிரைச்சலிவை யேகுங்காணே. 315

## 3. கண்டூஷம்

உருத்தி ராக்கங் கலங்கொம் போது மக்ரா காரமுடன்
பருத்த வரத்தைத் திப்பிலியும் பவள முத்து முலைப்பாலில்
அரைத்துக் கர்ப்பூ ரங்கூட்டி யரம்போன் றிருக்குநாவினிற்றேய்
உரத்த சிரத்திற் சன்னியெலா மோடி யொளிக்குங் கண்டீரே. 316

## 4. வேப்பம்பட்டைக் குடிநீர்

வேப்பம் பட்டை யீர்க்குடனே வேலிப் பருத்தி யுவாய் சீந்தில்
பூப்பம் பழமும் புடோலுனெச்சி பொருந்து மசுவ கந்திகொன்றை
கார்க்கம் பிளிக்கொட் டான்பீர்க்கு கஞ்சாங் கோரை நாரத்தை
காப்பாய் நாரி கூவிளைவேர் கருது மோரொன் றெருபிடியே. 317

பிடியே தறித்து நீர்பதக்கிற் பிசைந்தே கற்கம் பெருங்கடுக்காய்
கடிய சன்னி நாயனுள்ளி கடுகு கார்கோல் வசம்போமம்
கொடிய வரத்தை திரிகடுகு கொத்த மல்லி பூதவர்க்கம்
படியாந் திப்பிலி மூலமுடன் [1]பறங்கி சிவதை ரோகணியே. 318

ஓரொவ் வொன்று காற்பலங்கொண்டுடனே யிடித்து விரவியதில்
நாரி யதுவிட் டெட்டொன்ருய் நாண்மூன் றருந்திற் கபாலசன்னி
கோரஞ் செறியும் வெடிசன்னி கொடிய சன்னி பதின்மூன்றும்
தூரம் போகந் துரத்துமென்று சொன்னூர் முனிவர் சுகம்பெறவே.

## 5. இராச மிருகாங்குச மாத்திரை

இரச நாவி சாதிலிங்க மிசைதிரி கடுகு தாளகமும்
அரிய நெல்லிக் கெந்தகமு மாம்பொரி கார நேர்வாளம்
விரவுங் கார மிரசபற்பம் வெள்ளி பொன்னும் பவளமுத்தும்
கருதுங் காந்த முலோ கபற்பம் கழஞ்சொவ் வொன் று சுத்திகொள்ளே.

சுத்திகொண் டிஞ்சிச் சாற்றின் மூன்றுநா ளரைத்துச் சொல்லும்
[2]மத்தின்சா றதனின் மூன்று நாளுமே மகிழ்ந்த ரைத்துச்
சித்ர மூலிச் சாற்றி லரைத்துநீள் குளிகை செய்தே
ஒத்தநன் முலைப்பா லிஞ்சி தேனுண்ண வுரைத்த வாறே 321

---

[1] பராங்கி பரங்கி என நின்றது; பராங்கி-சிறுதேக்கு.

[2] மத்து-ஊமத்தை.

### 6. வேலிப் பருத்தியெண்ணெய்.

உத்தமா காணிநொச்சி குறேட்டை வாத
முரத்தடக்கி யோரொன்றிற் சாறு நாழி
சுத்திநிம்பத் தெண்ணெயொரு நாழி கூட்டித்
தூதுவளை யமுக்கிராய் குப்பை மேனி
முத்தற்கா சவுரிதிராய் வெள்வே லீசன்
மூலிபரி வாலியா முறிநன் னரி
நத்தைச்சூ ரிசிறுமட்டி பொன்னுங் காணி
நாயுருவி சிவனார்வேம் பாடா தோடை. 322

ஆடுகொடு வேலியுத்த மாணி வாத
மடக்கிமயி லடிக்குருந்து நொச்சி வண்டு
சாடுமது மலர்மத்தை யுடன்குத் துக்காற்
சம்மட்டி யோரிதழ்த்தா மரைசீ தேவி
தேடியசா ரணையின்வேர் கழஞ்சோ ரொன்று
திரிகடுகு குப்பைதிரி பலையுங் கோட்டம்
ஓடுவெளுத் தற்பிசினிந் துப்பு மஞ்ச
ளுள்ளியில வங்கங்கச் சோல மேலம் 323

அதிமதுர முடன்றேவ தாரம் வெட்பா
லரிசிவிழால் கார்கோ லரிசி நன்மை
உதவுகருஞ் சீரகமை யவிய ரத்தை
யுலுவாச்சன் னியணுய னுறுவ சம்பு
பதமுறவோர் கழஞ்சரைத்துக் கரைத்துக் காய்ச்சிப்
பதத்தில்வடித் திறக்கிநயம் பண்ணி யுள்ளும்
திறமுறவே கொண்டுதலை யினிலும் வார்க்கத்
தீராத கபாலசன்னி தீருந் தானே. 324

தலைநோய் நாற்பத்தாறும் முற்றுப்பெற்றது.

---

## தலைநோய் நிதானம்

### இரண்டாவது

### அமுத நோய்

தேவ தேவ னுரு ரைத்த சென்னி ரோக முள்ளதில்
பாவு மூளை யுள்ளு தித்த பலவி யாதி யின்பெயர்
மேவு சாத்தி யத்தி னேடு சாத்தி யம்ம தின்குணம்
கூவு நன்ம ருந்தி னேடு ரைப்ப னீகு றிக்கொளே. 325

### அமுத நோய் 16

### அவற்றின் பெயர் சாத்தியம் 8. அசாத்தியம் 8

குறிக்கொண்மூளை மீதி லேகு டிக்கொள் வாத பித்தமும்
செறித்த சேற்ப மூன்றி னேடு தொந்த மாறு சேர்ந்திடும்
மறுத்து மூன்றி னேடு நாலு ரோகம் யாதோ வென்றிடில்
வெறுக்கொ ளும்வ ரட்சி யொன்று தோஷமொன்று வேறுகேள்.

வேறு நீரி ரத்த மொன்று மிக்க சூலை மூன்றதில்
கூறு வாத பித்த முங்கு றித்த பித்த வாதமும்
மீறு சேத்ம பித்த மும்வி ரித்த பித்த ரோகமும்
மாறு ரத்த சூலையு மூன்ற வையுஞ்சாத் தியமா கும்மே. 327

ஆகும் [1]வாத சேற்ப மும்ம மைத்த பித்த சேற்பமும்
தீது சேற்ப வாத முந்தி ஊத்த வரத சேற்பமும்
பாகு நீர்வ ரட்சி சன்னி யெட்டு மேப கர்ந்திடில்
காவி யங்கண் மான னய சாத்தி யங்கள் காணுமே. 328

அமுதம் என்பது மூளை. அதில் பதினறு வகை நோய் பிறக்கும். அவை; வாதபித்த சேற்பனங்களினல் தனித்தனி யொவ்வொன்றும், அவை இவ்விரண் கூடித் தொந்திப்பதனல் ஒவ்வொன்றில் இவ்விரண்டு பேதம் தோன்றி ஆறும் ஆக 9வரட்சி 1வாதம் முதலிய மூன்றும் கூடித் தொந்திப்பதனல் பிறக்கும் தோஷம் அல்லது :சன்னி 1-நீர் 1-இரத்தம் 1-இரத்த சூலை-நீர்ச் சூலை-வாயுச் சூலை எனச் சூலை 3ஆகப் பதினறு. அவற்றுள் வாதபித்தம், பித்தவாதம், சேத்தும பித்தம், இரத்தம் மூவகைச் சூலை எனப்படும் எட்டும் சாத்தியமாகும். வாதம், சேற்பனம், பித்த சேற்பனம், சேற்பனவாதம், வாதசேற்பனம், நீர் வரட்சி, சன்னி ஆக எட்டும் அசாத்தியம் ஆகும். சிகிச்சையில் எளிதில் வசப்படக்கூடியதைச் சாத்தியம் என்றும், அதிக சிகிச்சையின் பின் நாட்சென்று வசப்படக் கூடியதை அசாத்தியம் என்றும் கூறினர்.

## அசாத்தியம் எட்டில்

### 1. அமுத வாதத்தின் குணம்

மூளையுள் வாதஞ் சேரின் முதிர்ந்திடுங் குணத்தைக் கேளாய்
நாளுமே சிரங்கு ளிர்ந்து நயனமும் பீளை சாடும்
தாள்செவி யடைத்துக் காட்டுந் தறுகிடா திடிக்கும் சென்னி
வாள்விழி மானே கன்னத்த லையிடை வலியுண் டாமே. 329

## மருத்துவம்

### ஆயிலெண்ணெய்

ஆயில் கொன்றை பொன்மு சுட்டை யாதளைக்கி ழங்குட
னுத்தி யித்தி யரசு நாரி கந்தி யாலுமே
தூய வெண்க டம்பு நிம்ப மாவி லங்கை கள்ளியுந்
துங்க வில்வம் வேங்கை சீந்தி றுத்தி வேர்நி லப்பனை

[1] வாதமும் சேற்பனமும் எனப் பிரிக்க

சாய வேரொ டவுரி கோரை சாற டைக்கி ழங்குடன்
றகரை தூது வளைகொ ழுஞ்சி தண்டை பேய்ப்பு டோலுமே
ஆய வேலி மிச்சு வெட்டி யப்பை யின்கி ழங்குட
னரிய கான [1]மிளகு சாரணைச்கி ழங்கு தானுமே. 330

சொல்லுந் திரிகடு திரிபலை கடுகொடு தூய்சந்தம்
புல்லுங் காரகில் கோட்டமொ டேலம் பொதுவாக
நல்குந் தயிலமு மொருபடி யானற் பலநாலு
வெல்லும் படிநீர் குறுணிய தாக விடுவாயே. 331

வாரெ ளெண்ணெய்க்கியாழ மோடிள நீரும் பாலு மளாவியே
வாச மைந்துட னேல மும்வசு வாசி யும்மதி மதுரமும்
பாரி லுள்ளகி ராம்பு பத்திரி காரு கோலு விளங்கமும்
பச்சை வெட்டொ டரத்தை நாகண மிச்ச மானநன் னரியும்
கூறு திப்பிலி சாதிக் காயொடு கோட்டமும்மில வங்கமும்
குங்கு மத்துறு பூவு மஞ்சளுங் குக்கில் காரகில் கர்ப்பூரம்
சேரு மாஞ்சொடு புனுகு மாவுறு சிணையு மாமிவை யொக்கவே
தேடி யேயிள நீரினலரை சிவனை யுள்ள மிறுத்தியே. 332

கூறிய தயிலம் மெழுகு பதத்திற் குறியாக
ஆறி வடித்தே முழுகிடு வெந்நீ ரதனலே
மாறிடு முச்சி மூளை யினுள்ளே வருவாதம்
மீறிடு சன்னி ரோக மனைத்தும் மிலையாமே. 333

## 2. அமுத சேற்பன குணம்

வெதும்பிடுஞ் சென்னி மீது வேர்த்திடு நாவி னித்துத்
ததும்பிடுங் குவளை குத்துந் தறுகிடா திரும லுண்டாம்
பதம்பெறு குரலுங் கன்றும் பல்லல குடனேம் பார்க்கில்
விதம்பெறு சென்னி மீது மூளையிற் சேற்ப மென்னே. 334

## மருத்துவம்

## 1. இண்டாதி இளகம்

என்னே யமுத சேற்பனத்துக் கிண்டாதி லேகிய மியம்பக்கேள்
முன்னே யிஞ்சி சிறுவழுதில் மொழியுந் தூது வளைதோடை
மின்னே கண்டங் கத்தரியு மிகுபுரு முட்டி துளசி தொய்யில்
பொன்னே கொடுப்பை சீதேவி புகல்வீ ராணி பூசினிக்காய். 335

ஈதொவ் வொன்றிற் சாறுரிகொ ளிவற்றின் வேரு மதனேடே
காதுஞ் சிறுகாஞ் சொறிபிரமி கற்ரு ழையின்வே ரமுக்கிராவேர்
மாதே திரிபலை தேற்றில்விதை வனச வளைய மிருவேலி
போதச் சீந்தி லிலாமிச்சுப் புகலும் வெட்டி யிவையொன்று. 336

---

[1] மிளகு சாரணை-மிளகரணை. இதைக் கான்றை என்பர் சிலர்

இவையோ ரொன்று பலம்பத்தா யிடித்துத் தூணி நீர்விட்டு
நவைதீ ரெட்டொன் ருய்வடித்து நவிலுஞ் சாற்ருே டளாவியபின்
வகையே சர்க்கரை பலம்பத்து வருங்கற் கண்டு சீனியிவை
சவையோ ரறியச் சமன்கூட்டிச் சாரக் காய்ச்சிக் குழம்பாக்கே.

பாகே யானுற் கடைமருந்து பகர்திரி கடுகு கடகசிங்கி
வாகார் மதுரங் கண்டில் வெண்ணெய் வளருந் தாளிச பத்திரியும்
கூகை நீறு விழாலரிசி கோட்டங் கிராம்பு சாதிக்காய்
ஆகு நற்சீர் வசம்புலுவா வசமோ தகமு மிந்துப்பே. 338

பேசிலவங்க பத்திரியும் பேரீச் சம்பழ முந்திரிகை
மாசிக் காயுங் கடுவிளங்க மாஞ்சில் வெட்பா லதிவிடயம்
வாச மைந்து மிவையொன்று வகைக்கு நாலு கழஞ்சிட்டு
நேச முடனே யிடிபொடித்து நீமுன் மருந்திற் றூவுவதே. 339

தேனெய் யெண்ணெ யிஞ்சிநீர் சிறுகச் சிறுக விட்டளவி
ஆன பதத்தி லிறக்கி வைத்தே யஃதோர் மண்டலம் பாக்களவு
தானே கொள்ளச் சிரத்துள்ளே சாரு மூளைக் கசம்விரைந்து
போனுர் வழிசொல் லெனக் கேட்டுப் போகுமென்முன் புகன்றனரே. 340

## 2. அரிதகித் தைலம்

திரிபலை விதைதளி யுறுபல மிருபது தேனேகொள்
உறுபடி யிருபது [1]பயம்விடு குறுகவை யெட்டொன்ருய்
மறுபடி யெளிலெணெ யிருபடி யுறவிடு வான்பாலும்
குறிகொள விடுமதி னுடனுற விடுவது குறிநீயே. 341

[2]அரிதகி திரிகடு மதுரமு [3]மதுகமு மவிேனுடே
கருவகி [4]லசனமு [5]மகரமும் விடயமுங் கன்னுரும்
இருவேலி சயிலக மிடவக விடயமு மிதனேடு
தெரிதுளி யுறையொடு முளுவையு மிவைசேர் சமனுக. 342

இடிபொடி வீசிடு தயிலமு மெரியிடு பதமானல்
கடிகமழ் புழுகிடு வடியுடை சிரசிடு கபமெல்லாம்
பொடிபடு மெனமுனி புகலரு மறையுறு பொருளாமென்
றடிதவில் முரசொடு திமிலைக ளிடுவது மறிவோரே. 343

## 3. அமுத பித்த சேற்பன குணம்

சிரசின் மூளையுட் சேர்பித்த சேற்பனம்
விரையச் செய்யுங் குணத்தை விளம்பக்கேள்
புரைகொள் விக்க லிருமல் புகைந்தெழும்
கரையுந் தேக முடனெழுங் காய்ச்சலே. 344

---

[1] பயம் - தண்ணீர் [2] அரிதகி - கடுக்காய் [3] மதுகம் - இலுப்பைப்பூ.
[4] அசனம் - வேங்கை [5] மகரம் - பெருஞ்சீரகம்.

காய்ச்ச லாயிரு மூக்கிற் கபம்விழும்
பேச்செ லாந்தொண்டை கட்டியே பேசிடும்
மூச்செ லாமுடை நாற்ற முதிர்ந்திடுங்
கூச்ச மாம்பல மூளையுட் கொள்கபம். 345

### மருத்துவம்
### தேற்ருன் எண்ணெய்

தேற்றின் வேர்வித் திலைசிறு தூதுளை
போற்று மாதளை கொவ்வை புடோலுடன்
நாற்றம் வில்வ மகினறை நாரிவேர்
ஆற்ற சீந்தி லமுக்கிர வாகுமே. 346

ஆகு முப்பலை கோட்ட மவையொன்று
தோகை யெயெண் பலங்கொளுந் தோய்பயம்
வாகை யாகக் கலம்விடு வற்றவைத்
தாக மாவிள நீரெண்ணெய் பால்சமன். 347

மன்னு மேதை விளங்க மவின்கன்னுர்
சென்ன சாதி கிராம்புசொல் பத்திரி
மின்னுங் கர்ப்பூரம் வெட்பால் விழாலொடும்
இன்னமும் பஞ்ச வாச மியம்பக்கேள் 348

கேளு [1]நீநெரி [2]பாசி [3]கிளியுறை
தாள்வி லாச்சத குப்பை தகரமும்
நீளி லாமிச்சு வெட்டி நிமிளைக்கல்
வாளை நேர்விழி யாய்சந்த மாகுமே. 349

மாஞ்சில் மஞ்சிட்டி தார மதுரமும்
ஏய்ஞ்ச ரோசனை யேல மிலங்கம்
ஆய்ஞ்சு கூட்டொன்று முக்கழஞ் சாமவை
வாஞ்சை யாய்வடி மாறும் வியாதிகேள் 350

ஆதி யாஞ்சிர மூளை யதிலுறும்
வாத பித்த கபமாறும் வாந்திபோம்
தீது சேர்ப்பித்த சேற்பனந் தீர்ந்திடும்
கோதை தேற்றெண்ணெய் செய்யுங் குணங்களே. 351

### 4. அபூத சேற்பன வாத குணம்

எய்து மூளை யெழுங்கப வாதத்தின்
செய்கு ணங்கள் தெரிந்துரை செய்குவன்
துய்ய கண்முகம் வீங்குந் துரப்பெழும்
நொய்ய நாசியி னூடு நுரைக்குமே. 352

---

[1] நெரி-நெரி பரிசிப்பால் [2] பாசி-பச்சை [3] கிளியுறை-கிளியூறல்.

நுரைத்துப் பொங்கி யுரமது நோவுண்டாம்
உரத்துச் சென்னி யுடனுச்சி குத்திடும்
பரித்த ரோம முதிரும்பல் வேர்கெடும்
சிரத்தின் மூளையுட் சேட்டும வாதமே. 353

## மருத்துவம்

### மயிலடிக் குருந்தெண்ணெய்

குருந்து தூதுளை கோடக சாலையும்
விரிந்த கூந்தன் மிளகுறு தான்றிவேர்
பரிந்த சீந்திலொ டாயில் பனைமடல்
சரிந்த கொன்றை தழுதாழை நொச்சியே. 354

ஏய காரை யியங்கு பொடுதலை
தூய சேவகன் பூடு துதிகையும்
ஆய நெல்லி யரிதகி காரகில்
பாயு நீரொரு தூணிறும் பாய்ச்சிடே. 355

பாய்ச்சு நீர்விட்டுப் மற்ற வடியிட்டே
ஆச்ச தாகி லரியநல் லெண்ணெயும்
பீச்சு பாலிள நீர்விட்டுப் பேசக்கேள்
வாச்ச தார மதுர மரத்தையே. 356

ஏலங் கோட்ட மிலவங்கம் பத்திரி
ஓல மாஞ்சி லுரோகணி முப்பலை
மேலு மேதை விளங்கந் திரிகடு
கோல வெட்பா லுளுவை குடசப்பால். 357

பாரில் வெட்டி லிலாமிச்சுப் பன்னையும்
கூரு சந்தனங் கோரோசனை சட்டம்
சார் கிராம்பொடு சாதிக்காய் பத்திரி
ஓரொவ் வொன்று முறுமுக் கழஞ்செடே. 358

இடித்துத் தூள்செய் திதனில் விசிறியே
வடித்துத் தேய்த்திடு மண்டையுண் மூளையில்
பிடித்த சேற்பன வாதம் பிரிந்துபார்த்
தடித்துச் சாடி யலைகடல் புக்குமே. 359

## 5. அமுத வாதசேற்பன குணம்

எய்திய வமுத மீதே யியம்பிய வாத சேற்பம்
செய்குறி யதனைக் கேளாய் சிரத்தினீர் சேரும் வேர்க்கும்
ஐயுமே மிகுந்து நோவா யரியவெப் பிருமலுண்டாம்
கைகால்கள் கசிந்து காட்டுங் கண்முகம் வெளுக்குங் காணே. 360

## மருத்துவம்

### தழுதாழை யெண்ணெய்

தழுதாழை நிலவாகை புளியாரை நொச்சி
சாரணை யுடன்கோவை தக்க [1] வழி சித்தி
பழுபாக லிருவேலி கோரக்கர் மூலி
பாங்கான வாகை யகில் நன்னாரி சீந்தில்
வழுவாத விருவேலி விலாமிச்சு வெட்டி
வாகா யமுக்கிரா மிளகுசா ரணைவேர்
அழகான வேங்கைவயி ரத்தினுட ஞெவ்வொன்
றவ்வாறு பலமாக வெவ்வேறு கொள்ளே. 361

கொள்பயம் படிநூறு குறையாமல் விட்டுக்
குறுகா விறுத்துப் பிழிந்துகொளு மின்னே
செவ்விள நீராவின் பானெல்லிக் காய்நீர்
தேவதர ரம்பச்சை செண்பக மரத்தை
வவ்வுசா திக்காய்கி ராம்புவசு வாசி
வருசாதி பத்திரி நெரியரிசி கோட்டம்
துவ்வுசத குப்பைதிரி கடுகுதிரி பலையுஞ்
சோமனும் போடுதச மூலமது சொல்வேன். 362

சொலுமாறு குங்குமத் தொடு புனுகு சட்டந்
தோகையே யதிவிடய மேலமில வங்கம்
நலமாக வோரொன்று காற்பல நிறுத்து
நல்லெண்ணெய் நாலுபடி மெல்லவதி லிட்டுப்
பெலமாக வேயனற் கருகா தெரித்துப்
பேதமற வேமெழுகு பாகினில் வடித்துக்
கலவாத வெந்நீ ருடன் முழுகு மின்னே
கடிதான சிரமூளை கபவாத மேகும். 363

அசாத்தியம் ஐந்தும் முற்றிற்று

---

### சாத்தியம் நாலில்

### 1. அமுத பித்தத்தின் குணம்

மூளையிற் பித்தஞ் செய்யுங் குணத்தினை மொழியக் கேண்மோ
நாளிலே யுடம்பு வற்றி நலங்கெட வெளுத்து நாவும்
கோளதாய் வரண்டு கைக்குங் குணங்கெடப் புலப்ப முண்டாம்
ஊளைநீர் நாசி யாலே விழுந்திடு மொடுப் புண்ணாமே. 364

---

[1] வழிசித்தி: அழிஞ்சில், இத்தி,

## மருத்துவம்

### 1. சீந்தில் நெய்

அமுதவல்லி துளசிதொய்யி லம்புயத்தில் வளையமு
மாம்பல்கொட்டி யுற்பலக் கிழங்குமல்லி பூவுடன்
குமுதவாயி னுய்கொடுப்பை கொவ்வைமா தளங்கனி
குமரிநாரி யோடுநெல்லி கூறுநற்க ரும்புடன்
சமமதாக வொன்றுசாறு நாழிபாலு நெய்யுமே
சரியதாக விடுசரக்கு வகையெலா முரைக்கவே
கமழுதேவ தாருமுக் கடுகுமுப் பலையுடன்
கட்டதான வட்டவர்க்க முடனரத்தை காணுமே. 365

காருகோல் விளங்கமேல மோமமாஞ்சில் கோட்டமுங்
கர்ப்பூரம்பு ழுகுசட்ட நற்கிராம்பு ரோசனை
பாரின்மேவு கூகைநீறு பஞ்சவாச மிஞ்சியும்
பத்திரீவ சம்புதுத்த முழுவையோடு துரிசுமே
சாருமஞ்சள் மதுரநல்ல சாதிக்காய்க ளாறுடன்
சாலவொன்று முக்கழஞ்சு தானரைத்து நீகரை
கூரவெந்து நற்பதத்தி லேவடித்து வுட்கொளிற்
குளிருநீர்சி ரத்தின்மூளை கொண்டபித்த மேகுமே. 366

### 2. நிம்ப எண்ணெய்

கொவ்வைசிறு கீரைபுடல் [1]கோகனக நெய்தல்
கொட்டியுட னுற்பலநல் [2]வெற்றிலையும் வேரும்
[3]மவ்வல்புளி யாரையிலை வெள்ளறுகு சீந்தின்
மாதுளைகொ டுப்பைசத வேரியுறு மூலம்
நவ்வுசிறு தாழைவிழு தொடுறுவல் லாரை
நற்குமரி நாரியெலு மிச்சினுட னுணல்
தவ்வுமிரு வேலியுறு கூவிளமு சுட்டை
சாருநறை மிக்கமிவை கோசமத மாமே. 367

மேவியிரு தூணிநறு நீர்விரவி மின்னே
வெந்துவடி கொண்டிளநீ ரந்தமுறு பாலும்
ஆவலுறு மெண்ணெய்படி நாலுமதில் விட்டு
மக்கிதவிர் நன்மதுர மிக்கதெய்வ தாரம்
காவிலுறு மேலமகில் சீரகமொ டிந்து
கற்கெருட பரசையுலு வாவுறுகி ராம்பு
தூவுசத குப்பைகடு ரோகணிய ரத்தை
சொல்லிய [4] மரிசினரி திப்பிலிகொள் சுக்கே. 368

---

[1] கோகனகம் தாமரை. [2] வெற்றிலையின் வேரும் என்றும் பாடம்,
[3] மவ்வல் - முல்லை, [4] மரிசினரி - வெள்ளை மிளகு.

கொட்டமொடு குங்கும மிலுப்பைமலர் சந்தங்
கொத்தமலி செண்பமுகை மாஞ்சிலில் வங்கம்
இட்டமுறு கர்ப்பூரமி தொப்பிடைகொண் மின்னே
யேலநெரி யரிசிபுழு கோடிவை கழஞ்சாய்
வட்டமுலை யாய்பொடிகொ டூவுதயி லத்தை
வாகுபெறு கோவுதவு பாலுமது நாழி
கட்டளைய தாகவிடு வெந்துவடி கொண்டே
காதலுற வேமுழுகின் மூளையனல் போமே 369

## 3. தலையில் தேய்க்க மருந்து

நெல்லிக்கனி யதன்றோலொடு நிகரில்சிறு பயறு
வெல்லக்கொளு மாவெண்ணெயு மேவும் மதிமதுரம்
வல்லிக்கொடி யிடையாய்நன் மலாக்கா யிவை யைந்தும்
சொல்லிற்பனி நீராலரை சிரமர்த்தனை சொலுவாம். 370

ஆவெண்ணெய் கொண் முன்பே யதி மதுரங்கொளு மப்பால்
காவுந்திய சந்தங்கொளும் பின் னமல கனியே
தாவுஞ்சிறு பயறும்மதன் பின்னுவெனச் சாற்றும்
மேவுஞ்சிர கரபாதமுந் தேய்த்தே முழுகாயே. 371

பிதத்துப் பேசிய மூளையிற் பித்தத்துக்
கிதத்த வுச்சியி லேநடு வெல்லையில்
விதத்தி னுற்றுடை மேவுங் குடோரிசெய்
கதத்த துத்தங் கழஞ்சொன்று காணுமே. 372

காண வேயுறு கர்ப்பூர மொப்பிடை
பூணும் வெற்றிலை நீரிற் பொருந்தவே
ஊணி யேயரை மெய்யுறு மூளையிற்
தாணி யேசிர மத்தினிற் றப்புமே. 373

ஒன்று விட்டிப் படியொரு நாட்செயில்
கன்று மூளையிற் பித்தங் கலங்கிடும்
வென்று சேரவெந் நீர்விடு மூன்றுபோ
தென்று கூறு மிலக்கண யோகமே. 374

வேறு

சீர்பெறு துத்தமுந் துரிசுந் தேசியின்
நீர்பெற விட்டரை நீள்சி ரத்தினில்
பேர்பெறு மர்த்தனம் பேணி மூழ்கிட
ஓர்பெறு மூளையிற் பித்த மோடுமே. 375

சீர்பெறு துத்தமுந் துரிசு மாடத்தின்
கூறுபெறு மாவுடன் கோவி னற்சலம்
நீர்பெறு தேசிய னீரு மாமிவை
சார்புறக் காய்ச்சியே தப்பி மூழ்கிடே. 376

## 2. அமுதவாத பித்தத்தின் குணம்

தேக்கிய வமுத மீது வாதபித் தத்தின் செய்கை
தாக்கிடும் பிடரி மென்மேற் றறுகிடா வலியுண் டாகும்
ஊக்கமா யிருமலாகி யுலைந்திடு முறுப்பெண் சாணும்
மூக்குளே சேரு மையு முள்விழி புகையு மாமே. 377

### மருத்துவம்

### கடுகாமலத் தைலம்

கடுகா மலாதி யெண்ணெ யடைவது கழற நீகேள்
இடமுறு தயில நாழிக் கியம்பிய கடுகு பாதி
முடுகுநெல் லிமுளி பாதி யிரண்டையு மொக்கக் கூட்டித்
திடமுறு நீர்ப தத்தி லெரித்திரு நாழி யாக்கே. 378

தேவர்கள் தாரு மாஞ்சி றிப்பிலி மூலங் கோட்டம்
காரகில் மதுரம் பச்சைக் கர்ப்புரம் புழுகு சட்டம்
சீரகஞ் சுக்கு வெட்பால் திரிவிரிந்து கொத்த மல்லி
பாருறு குக்கில் தான்றி மகரப்பூப் பசிய மஞ்சள். 379

கிளியுறை குப்பை மஞ்சள் கிளருஞ்செண் பகப்பூப் பத்ரி
தெளிகிராம் புடனே சாதி சிறிய தேக் குளுவை ரோணி
வழுவறக் கழஞ்சொவ்வொன்று வாரெண்ணெயிள நீரான்பால்
அளவதாய் நெல்லிக் காய்நீ ராகவொன் ருக்கிக் காய்ச்சே. 380

காய்ச்சிடும் பதமே யானல் வடித்திடு கபாலந் தன்னில்
தேய்ச்சிடு வெந்நீ ராலே திரும்பவே முழுகும் பேர்க்குப்
பாய்ச்சிடு மமுதத்துள்ளே வருத்திடு வாத பித்தம்
ஆச்சினி யென்செய் வேனென் றலறியே யோடுங் காணே. 381

## அமுதபித்த வாதத்தின் குணம்

முந்து சென்னியின் மூளை மீதுறு முந்து பித்தமும் வாதமும்
தொந்த மான குணங்கள்கேளுறு தொண்டைநொந்துசு ருக்கெழும்
சிந்து நாசி வரண்டு செம்மி யிரத்த நீர்கள் செறிந்திடும்
மந்த மாயிரு கர்ணி யங்களும் வாரி யென்ன வொலிக்குமே. 382

### மருத்துவம்

### அசனமலகத் தைலம்

[1]கணிவயி ரத்தொடு வாமல கக்கனி [2]கைதைக் கொடிவெட்டி
சாரகில் நேரிய நாரிவல் லாரை சாற்றுங் கருநொச்சி
அணிகொளுமுப்பலை [3]யரிசொடு [4]கொண்டமுமா தொண்டைக் கொடிவே
ராமிரு முட்டி யுவாய்ப்பெரு நொச்சி யரத்தையொ டேயாயில்

---

[1] கணிவயிரம்-வேங்கைச்சிராய். [2] கைதைக்கொடி-தாழை விழுது.
[3] அரிசு-குமிழ். [4] கொண்டம்-குறிஞ்சா.

துணியுற வெட்டிய திடிபய முக்கல தூணக் குறுணிவிடு
துகளற வேயெரி தூணிய தாய்வடி சொல்பா லிளநீரும்
பணியுற விட்டிடு மொழிலெணெய் முக்குறுணி பாரித்ததில் விடுநீ
பாருறு முப்பலே சீரிய முக்கடு பகரக் கேண்மயிலே. 383

மஞ்சட் டேரெடு மஞ்சிட் டியுமதி மதுரங் கடுதாரம்
வாசமு மைந்து விழானெரி யரிசி மலாக்காய் சாதிக்காய்
[1]கஞ்சப் பூவலி கஞ்சக் காயுறு கஞ்சத் தூருடனற்
[2]காவியின் மூலநன் ஞரியி ஞேடுகஸ் தூரி சொலுமஞ்சள்
வஞ்சிக் கொடியிடை வஞ்சிக் குயின்மொழி வஞ்சிக் கொடிமானே
வாயு விளங்கமொ டேயில வங்கமு மாஞ்சில் வசுவாசி
மிஞ்சக் கொளுமிடை மிஞ்சச் சமனிடு மிஞ்சப் பொடிதூவு
மீறிட வேபுழு கோடுறு [3]பன்னேகோ ரோசனே நீவிசிறே. 384

விசிறியே யெரித்து வெந்து மெழுகு நற்பத மானபின்
இசையவே வடித்து நீயு மெய்து சென்னி மேலிடாய்
பசைகொண் மூளை மீதுறும் பயித்திய வாத நோய்கெடும்
அசைவி லாதவ சனுமல கெண்ணெய் செய்யு மாறிதே. 385

### 3. அமுதசேற்பன பித்தத்தின் குணம்

பூவை யெசிர மூளையிற் புக்கிய
பாவு சேற்பன பித்தத்தின் பண்புகேள்
மேவு காதி லிரைச்சல் மிகுந்திடும்
வாவு சென்னி வலிக்கும் வகைகளே. 386

மறுகு வாந்தி மயக்க மிருமலும்
குறுகு றுப்பொடு விக்கல் கொட்டாவியும்
தறுகி டாச்சுரஞ் சாருங் குணங்கணீ
அறிவை தீர்க்கு மருந்தை யறையக்கேள். 387

### மருத்துவம்

### கடுகுமிளகுதான்றி யெண்ணெய்

அரிதகியு மிளகுசா ரணையின் வெரு
மமுக்கிரா வெந்நாரி சீந்தில் வில்வம்
உரியவகில் கருங்காலி கடம்பு நிம்ப
மோடெட்டி நீர்வஞ்சி யுழுந்து காணம்
வரையிலுறு மிருவேலி கொட்டை யாயின்
மருக்காரை சிவன்வேம்பு வெட்டி மிச்சுக்
[4]கரிசாலங் கணிதாழை விழுது பாலை
கதிக்கவொன்று பலம்பத்துக் கலநீர் வாரே. 388

---

[1] கஞ்சம்-தாமரை அதன் பூகாய் கிழங்கு என்றபடி. [2] காவியின்மூலம்-நெய்தற் கிழங்கு. [3] பன்னே-பச்சைக் கற்பூரம். [4] கரிசாலங்கணி-கையான் தகரை.

வாரேயெட் டொன்ருக்கி வடியெள் ளெண்ணெய்
மறுகவிள நீர்பாலு மாட்டின் பாலும்
சீராக விடுகற்கம் விடயங் கோட்டந்
திரிகடுகு திரிபலைதிப் பிலியின் மூலம்
நேரான கர்ப்பூரம் புழுகு சட்ட
நெரியரிசி மகரப்பூ நிமிளை கன்னர்
வார்மேவு முலைமானே பஞ்ச வாச
[1]மட்டவர்க்கந் [2]தெசமூலமஞ் சிட்டி மாஞ்சி. 389

கார்மேவுங் கச்சோலங் கிராம்பு சாதிக்
காயினெடு பத்திரியுங் கண்டில் வெண்ணெய்
வேர்மேவு மதிமதுரந் தேவ தாரம்
விழால்வெட்பா லிலாமிச்சு வெட்டி வேரும்
கார்மேவுங் குழன்மடவீர் குங்கு மப்பூக்
கருதியொன்று முக்கழஞ்சு கதிக்கக் கூட்டி
நீர்மேவி யிடிபொடித்துத் தூவி வெந்து
நிகழ்த்தியநற் பதத்தில்வடி நீங்கும் நோய்கேள். 390

கேளாத செவிகேட்குஞ் சிரத்தி னுள்ளே
கிளரமுத மதனிலுறு பித்த சேற்பம்
தூளாகி யோடுமிடி யொடுவுந் தீருந்
தோன்ருத விழிதோன்றுந் துலங்கு மேனி
வாளாரும் விரகவிழி மானே கேளாய்
வரட்காச மத்திசுர மயக்கந் தீரும்
தாளாத கடுமிளகு தான்றி யெண்ணெய்
தனைப்பெரியோர் தாரணியிற் சாற்று மாறே. 391

வாதம்முதலிய மூன்றும்தொந்தம்ஆறும் ஆக ஒன்பதும் ஆம்.

———

## 1. அமுதவரட்சியின் குணம்

### இது அசாத்தியம்

தீதில் சென்னையின் மூளை யுட்கொடு தீமையான வரட்சிசெய்
கோதி லாத குணங்கள் கேளுடல் குத்தி நொந்து கொதித்திடும்
ஊதை சேர்செவி நாசி கண்களு முள்ளு லர்ந்து வரண்டிடும்
ஓதி லாத புலப்ப முஞ்சில் புத்தி கேடுமுண் டாகுமே. 392

[1] அட்டவர்க்கம்-சுக்கு, மிளகு, திப்பிலி, நற்சீரகம், கருஞ்சீரகம், ஓமம், இந்துப்பு, பெருங்காயம். [2] தெசமூலம்-கண்டங்கத்தரி, சிற்ருமல்லி, பேரால்லி, சிறுவழுதுணை, தழுதாழை, நெருஞ்சி, பாதிரி, பெருங்குமிழ், வாகை, வில்வம்.

## மருத்துவம்

### மூலைப்பாலெண்ணெய்

கொங்குவிரி கோதைமாதர் கொங்கையுறு பாலு நாழி
கொண்டதனி லிரண்டு பாலுமிள நீருமாய்ப்
பங்கயச மூலகாவி செங்குவளை தாதுமாதளை
பம்புமிரு வேலிகோ வையுடன் ஞாழலும்
சங்கையுறு தாழைநீள்விழு தெங்குநறை வீசுசந்தொடு
சம்ப்ரநன் னுரி கூவிளை சதாவேரி
பொங்குதிரி பாலைசீதை செங்கழுநீ ரேலமாஞ்சில்
புந்தியுறு சீரகஞ் சீரொடு சமனுகுமே. 393

அப்புவறு தூணிவீடு வெம்பமுற வேகுறுக்கிடு
மப்பயமும்வேறி றுத்திடு மதனேடே
முப்பலைய ரத்தைகாரகில் முக்கடுகு கோட்டமேலமு
முக்கனியி னேடு பத்திரி வசுவாசி
குப்பைகடு ரோணிசீத கர்ப்புர நாகுசாளமுங்
குக்கிலு வுதார நாகண நெரிபாசி
செப்புபுமு கோடுரோசனை மிக்குளகன் னுருசிவக
திப்பிலியின் மூல மோடுவை சமனுகவே. 394

மேவி யரைத்துக் கரைத்து வெந்திடு மெழுகுகானுற்
தாவி வடித்துச் சிரத்தி லங்கிடு தறுகாமல்
பாவு வரட்சிக் குணங்கள் போமது பரிவாலே
தூவு முலைப்பா லுறுதயி லத்தின் றெகைதானே. 395

## 2. அமுததோடத்தின் குணம்

### இது அசாத்தியம்

திருகி நடுக்கிச் சுழற்று முச்சியில்
வெருவ விடித்துக் கனத்து நொந்திரு
செவியு மடைத்துப் பிதற்றியேயுறு-செயன்மாறிக்
கருகு முதட்டிற் பரித்த தந்தமு
மலகு கடுத்துக் கதத்து வெம்பிய
கடமு மிரைத்துச் சுருங்கெ ழுங்கள-மதனூடே
பெருக மயக்கிற் சினத்து விக்கலு
மிருமி யிளைத்துக் கொதித்து முற்றிய
பிடரி வலித்துத் திமிர்த்து நீள்விழி-யெரிவாகி
மருவு மிடுப்புப் பொருத்து டன்றழ
லெழவும் வலித்துத் திடுக்கி டுங்குண
மமுத தலத்திற் குடிக்கொள் சன்னியின்-வகையாமே. 396

## மருத்துவம்
## நிம்பாதித் தைலம்

புகலரிய நிம்பெண்ணே யதனோடு புங்கெண்ணெய்
பொதியவிழு புன்னை யெண்ணெய்-பொலிவாகச்
செகமுறு மதூகவெண்ணெய் நறைகமழு சென்னையெண்ணெய்
செறியவிடு பின்னை நீயு-மியல்பாக
பகர்கடுகு சன்னிநாயன் றிரிகடுகு மன்னபேதி
பவளசிலை மன்னுசாதி-பயில்சூதமும்
தொகையுறரி தாரகெந்தக மொடு துரிசு கார்விளங்க
சுகமுதவு [1] சுவச்ச லவின்கொள்-துடராகவே. 397

உள்ளிகடு மாஞ்சி லோடு-துள்ளிவரு நாங்குழ் நரடு
மொள்ளியகிராம்பி னூறு-முறுமேதையும்
உள்ளிவிடு சங்கி னுகணம்-வெள்பிசினே டோங்கு சீரக
முள் [2]முசிறு தான்றி நாறிடு-முடைவேரும்
வள்வெருகு மூரு [3] சீரினெடு-மெள்ளவிடி யந்தி தூவிடு
வள்ளியல தாக வேவடி-செவிவாரு
கொள்ளுசிர கூந்த னீவிடு-துள்ளிவிழி யூன்றி நீதெறி
கொள்ளி யழல் போன்ற சன்னிகள்-குணமாமே. 398

## 2. அமுதநீர் வரலாறு
## இது அசாத்தியம்

முன்னோர் மொழிந்த முதுமறையின்முந்துஞ் சீரத்தின்மூளையதீற்
துன்னு மிரத்த நீரிவையிற் றேன்றும் வியாதி தொகை குணமும்
மன்னுஞ் சாத்திய மசாத்தியமு மருவு மருந்தின் வகையனைத்தும்
மின்னே நீகே ளெனவிறையோன் மேவி யுரைத்த விதிகேளே 399

நீரினல் வளரும் தேக நீரினன் மெலிவு முண்டாம்
நீரினற் ருது வீழு நிரம்பிடு நீர மாகும்
நீரின லிரத்த முண்டா மிரத்தமு நீரே யாகும்
நீருளே கனலாய்ச் சேர்ந்த நிரை ரறிகு வாரே. 400

மண்ணொடு விண்ணை நீக்கி நின்றநீ ரனல்வா யுக்கள்
உண்ணிறை விந்து தன்னு லுற்பவ மாகு முண்மை
விண்ணிறை பூவே தேகம் வியாதிநீ ரனல்கா லாகும்
அண்ணலார் வழுத்து முண்மை சித்த வேத மாமே. 401

தாமரை நாளம் போல வுந்தியிற் சனித்த நாடி
பூமியே யாதி யாகப் புகன்றிடு சிரமீ ருக
வாமமார் கலையாய்த் தேகம் வளரவே வாங்கு நீரைக்
காமமே முதலா யுள்ள கடுமையார் விடத்தால் வெப்பால் 402

---

[1] வச்சல்-நாவி [2] முசிறு-முசிற்று முட்டை, [3] உசிர்-இலாமிச்சை வேர்

வாத பித்த சிலேற்பனங்கள் மாறுபாட்டால் வண்டெலியால்
மீதே யுண்டி துயிலிவைகள் மிகுந்து குறைந்த விசேடத்தால்
தீதே செய்யுஞ் சுனைநீராற் சீதஞ் சேரு மலநீரால்
மாதே லகிரி யுவர்நீரால் மழைநீர் பனிநீர் வாடையினுல். 403

வளருஞ் சரீர மியம்புகின்ற வரலாற் ருலே சிரத்தூடே
தளர்விற் றங்கும் பலநாடித் தலங்க ளிடையே தன்குணத்தை
மொழியும் பன்னூ லவையுள்ள முறையா லறிந்து கொள்ளுமென
அளவைக் கெட்டா வியல்புடையோ னயனுக்கருளிச்செய்ததுவே.

இறங்குநீர் சிறிதே யாகும் வியாதியு மனேக மாகும்
இறங்குநீர்க் குணதோ டத்தின் வகையெலா மியம்பக் கேளாய்
இறங்குநீர் சென்னி யுள்ளே யியம்பிடு மமுதந் தன்னில்
இறங்கு நீ ரதுவே கஞ்சத் திலைத்தண்டு னூலதாமே. 405

தாமரைத் தண்டு நீர்போற் ருரையா யிறங்கு நீரும்
தாமரை முகத்தா யந்தத் தலங்களிற் சேரு நோய்கள்
தாமறிந் திடுவாய் மூளை தனிலுறு மக்குணத்தைத்
தாமறிந் துரைத்த வுண்மை தன்னைநீ யறிந்து கொள்ளே. 406

### அமுதநீர்க் குணம்

வாள்விழியி னுய்தலை வலித்திடு மிடிக்கும்
கோழைமிக வாயிருமி யேகுவழை கக்கும்
தாழ்செவியி னுடுருகி யசலமு மாகும்
மூளையுறு நீரென மொழிந்தனர்கண் முன்னோர் 407

ஓதியசிரத் துருகு நீர்வித முரைக்கில்
கோதையறி வாயிது வசாத்யகுண மென்ன
ஆதிமறை யோன்முனி வனுக்குரைசெய் வண்ணம்
கோதிறமி ழாலுரைசெய் கொள்கையது வாமே. 408

## மருத்துவம்

### கருங்காலி யெண்ணெய்

ஓது கருங்காலி யெண்ணெய் தனையுலகில்
ஏதமற வைக்கு மியல்புகேள்-தீதில்
கருங்காலி நூறுபலங் காரகிலும் பாதி
திருந்திய வேங்கைச் சிராயும்-ஒருங்குடனே
கால்கூட்டாய் நன்னுரி காவிலுரு சிற்றமட்டி
வாதமடக்கி வளர்சீந்தி னொச்சிவேர்
[1]பூதிகா நிம்பமொடு பொன்முசுட்டை-காதலூறு
வெட்டியிரு வேலி விளாவாகை நீர்வள்ளி
எட்டி கருவே லியங்கு புங்கு-மட்டவிழும்
தாழை விழுதுடனே தான்றிவேர் மாவிலங்கை

[1] பூதிகா-ஆயில்.

வேளைவே ரோடு விரிபூடு-தாழா
அடம்பு கடம்பு மரத்தை பலைமூன்
றடங்கவே யோரொன் றளவாய்-உடன்கொள்
பதின்பலமுங் கூட்டிப் பரிவாய்த் தறித்தே
இதம்பெறு நீ ரெண்மரக்கா லாகக்-கதம்பமுலை
மானே பெயரிட்டு வற்றியெட்டொன் றானதற்பின்
தானே வடித்துத் தயிலமது-நானாழி
பாலிள நீர்விட்டுப் பச்சிலைக்கே ணீர்வஞ்சி
கானலுறு நொச்சியுடன் கையானும்-பானல்
விழியாய் சதாவேரி வெய்ய தழுதாழை
புளியாரை காற்றோட்டி புங்கின்—கொளுமிலையும்
சம்பீரத் தின்பழமுஞ் சாறொன்று நாழிவிடு
கும்பாமற் காய்ச்சிக் குறுகினாற்—தம்பமுறும்
கொட்ட மிலவங்கங் குக்கிலுவுங் குற்றமறும்
அட்டவர்க்கம் வெட்பா லதிமதுரம்—சட்டம்
புழுகு கிராம்பு புகறேவ தாரம்
கிளியுறையு நிம்பப் பிசினும்—தெளியும்
நெரியரிசி மாஞ்சி நிமிளைசத குப்பை
பொருவரிய தற்கோலப் புட்டில்—வரிமேவு
சாதிக்காய் பத்ரி தகர மிலவங்கம்
கோரக்கர் மூலி குருசானி—நேரொத்த
கற்பூர நேரிழையே கன்னாரும் கன்மதமும்
சிற்றரத்தை சந்தஞ் சிறுமூலம்—கற்கெருட
பச்சைவிழால் தாளிச பத்திரிவெண் குந்திருக்கம்
துய்ச்சகோ ரோசனைந் தோகையே—மெச்சும்
திரிகடுகு தேற்றான் றிரிபலையொவ் வொன்று
வரிசைபெற முக்கழஞ்சு வாங்கி—நெரியப்
பொடித்திடித்துத் தூவிப்பின் போதமுறக் காய்ச்சி
வடித்தடைத்துத் தேய்த்து வரிலோ—பிடிப்போடு
மண்டை வரட்சி வருநயனந் தப்பாது
கொண்டசிர மூளை குடிபுகுநீர்—தொண்டை
சிதறுதல்கண் ணீர்நிறைதல் சேருநீர்ப் பாய்ச்சல்
கதறு மிருமல் கபாலம்—பதறிய
கைகாலில் வாதங் கரச்சோர்வு மேலிளைப்பு
நையு மிருநாசி நாறுதலை—செய்ய
செவியடைப்பு விக்கலிவை தீருமென முன்னோர்
உவகையுடன் சொன்னா ருகந்து. 409

## அமுதரத்த நோய் குணம்
## இது சாத்தியம்

துன்னிவரு மூளையிற் சுரோணித குணங்கேள்
மன்னுமிரு நாசிசெவி யால்வரு மிரத்தம்
மின்னுவிழி மீதில்வரி மேவுதிர மாகும்
அன்னநடை யாய்சிர மடிக்கடி கனக்கும். 410

## மருத்துவம்
## சந்தனாதி நெய்

இக்குண மறிந்துகொளு மீதகல நெய்கேள்
தக்கநறு நெய்யினெடு சந்து [1] சடை கோட்டம்
மிக்கநெரி யரிசிமிகு கற்பூர மினுங்கேள்
[2] முக்கடுகு முப்பலையு மேலமுறு சீரம். 411

தேவதரு ரோசனைகொள் சீவகம் விளங்கம்
ஆவலுறு முந்திரிகை யானசத குப்பை
நீவிரைய வேசமன தாகவிடு நெய்யில்
மேவுமிள நீரினெடு பாலும்விடு மின்னே. 412

நெய்தலொடு செங்குவளை நேர்வனச மாம்பல்
தொய்யில்புளி யாரைசிறு கீரையுடன் றுத்தி
ஐயமகல் கொவ்வையுடன் ளுகவிவை யொன்பான்
நையவிடி சாறுபடி நாழியிவை யொன்றே. 413

ஒக்கவி டளாவியெரி யிட்டுறு பதத்தே
புக்கவடி சீனியிடு பொற்புறு மடந்தாய்
நக்குசிர மர்த்தனைகொ ஞசியிடை வார்நீர்
மிக்கதனி மூளையு ளிரத்தமிவை தீரும். 414

## அமுதசூலை 3
## சாத்தியம் 1 கடின சாத்தியம் 2

வெப்பமுறு சூலையது மேவுகுண மின்னே
எப்படிய தாமெனி லியம்புமுறை கேளாய்
துப்புடைய நீர்குருதி [3] யூதைதொகை மூன்றில்
தப்பித மிரத்த முடனே [4] சலில மாமே. 415

ஊதையுறு சூலையது தீருமிக வுண்மை
வாதைசெயு நீர்குருதி மாறலரி தாகும்
ஆதியர ளுரைசெ யாயுண்மறை யாய்ந்தோர்
ஓதிய குணங்குறி மருந்தையு முரைப்பாம். 416

---

[1] சடை-சடாமாஞ்சில். [2] முக்கடுகொ டேலறு சீரகமாமே என்றும் பாடம். [3] ஊதை-வாயு. [4] சலிலம்-நீர்.

## கடின சாத்தியம் இரண்டில்

### 1. நீர்ச்சூலையின் குணம்

நீரில்வரு சூலைசெயு மக்குண முரைக்கில்
கூர்விழி மயங்குறுத லுச்சியொடு குத்தும்
கார்குழ லுதிர்ந்துபிட ரேகடு கடுக்கும்
வார்முலையி னுயலகு காதடி வலிக்கும். 417

### 2. இரத்த சூலையின் குணம்

இரத்தமுறு சூலைசெயு மிக்குண முரைக்கில்
சிரத்தினி லடிக்கடி திரண்டுடையு மின்னே
உரத்திட விடிக்குமுக மோங்கிமிக வீங்கும்
நெருப்பென வெரிக்கும்விழி நீதெளிகு வாயே. 418

### வாயுச் சூலையின் குணம்
### இது சாத்தியம்

வாயுவுறு சூலைசெயு மக்குணம் வழுத்தில்
காயுமுடல் நீள்செவி கடற்பட விரைக்கும்
மேயசிர மெங்கணு மிரும்பென விறைக்கும்
தூயவிழி மேலிமை துடித்தது துளங்கும். 419

## மருத்துவம்

### அமுதசூலை மூன்றுக்கும் ஏலாதி யெண்ணெய்

பூங்கமல மாதே புகன்றசிர மூளையினில்
ஆங்குறையுஞ் சூலை யகல்வதற்குப்—பாங்கான
ஏலாதி யெண்ணெய்க் கியம்பு மருந்தினிக்கேள்
மேலான வேல மிருநாழி —[1]கீலால
மேபதக்கு விட்டு விரவியெரி யெட்டொன்ருய்
ஆமதற்கு மேன்மருந்து யான்கூறத்—தாமதத்தை
விட்டுநறு நெய்யெண்ணெய் மேவிளநீ ரான்பாலும்
இட்டமுறு நெல்லிக்கா யின்னீரும்—தட்டாத
பொன்மெழுகு நீரும் பொருந்தச் சமன்கூட்டி
மென்மதுரஞ் சீரகமு மேதையுடன்—நன்மையுறு
பன்னைபஞ்ச வாசமொடு பச்சைபச்சைக் கற்பூரம்
கன்மதமுங் குங்குமமுங் கன்னரும்—வன்மையுறு
கோரோ சனைகோட்டங் குக்கிலுவுஞ் செண்பகமும்
காரோ கணியுங் கிராம்புடனே—நேரான

[1] கிலாலம்-தண்ணீர்.

மாஞ்சி னெரியரிசி [1]மஞ்சனுல் மஞ்சிட்டி
எய்ஞ்ச மகரப்பூ வின்பூறல்—வாஞ்சையுறு
பேரீஞ்சு முந்திரிகை பீதவன்ன ரோசனையும்
வாரேந்து பூண்முலையாய் செவ்வள்ளி—பாரில்
இருவேலி வெட்டி யிலாமிச்சு [2]வங்கம்
பொருவரிய தற்கோல நாகம்—கருதரிய
தேவர்கடாரு திரிவிந்து கொத்தமல்லி
காவிலுறு முக்கடுகு முப்பலையும்—பாவையே
கூட்டொன்று முக்கழஞ்சு கூட்டி யிடிபொடித்து
மீட்டுமெண்ணெய் மேல்விசிறி வெந்துவடி—நாட்டமுடன்
நாசி செவியிலும்வார் நாலுநா ளைக்கொருநாள்
நேசமுடன் வெந்நீரி னீமுழுகில்—பேசரிய
மூளையுறு சூலை முழங்கும் பெருவாயு
வாளனைய கண்ணுய் சிரவரட்சி—கோழையுறும்
பித்தமுறு வெப்புப் பெருகுநீர் மஞ்சணிப்புச்
சத்தி யதிதாகந் தாகசுரம்—குத்திடிகள்
சீறு மிருமல் செவியடைப்பு வாய்கயர்ப்பு
மீறுங் குவழைவிழும் விற்புருதி—கூறரிய
கைமயக்குக் கண்கைகால் காந்த லுவாந்திவிக்கல்
மெய்மயக்கு மத்திசுர மிக்கிடிகள்—எய்தும்
சிரக்கனப்பு நீர்த்தோடந் தீரு மிவையென்
றுரைத்தனர்காண் முன்னே ருவந்து. 420

அமுதசூலை முற்றிற்று.
அமுதநோய் பதினுறும் முற்றுப்பெற்றது.

———

## தலைநோய் நிதானம்

### மூன்ருவது

### செவிநோய்

திருமா மறைவா கடநூ றெரியச் சிவனு ருரைமா துதெளிந்திடவே
மருமா மலர்மே லயனுக் கரிதான் மகிழ்வா லருள்வாசகமா மதனைப்,
பொருநான் முகன்மா முனிவர்க் கருளும் பொருளா னதையே பெரியோர் புக
இருகா திடையே வருநோய் குணமு மிதினு்லு றும்யா வுமியம் பிடுவாம், [லும்.

### செவியில் வாதம் 4

### அசாத்தியம் 2 சாத்தியம் 2

வாகா னவெவிக் குளிலும் புறமும் வருநோய் வரலா றுவழுத் திடிலொ
தோகா யறிவா தமுநா லெனலா முறுபேர் குறிமா றுதொகுத் திடுவான்,
பாகா யசுரோ ணி[3]விரோ ணனுடன் ப்ரிவா னதிமிர்ப் புவிறைப் பிவையில்
ஏகா துசுரோ ணிவிரோ ணனுமாந் திமிரோ விறைப் பதுமே கிடுமே, 422

---

[1] மஞ்சணு-கறிமஞ்சள், கஸ்தூரிமஞ்சள், மரமஞ்சள், குவிந்தமஞ்சள்.
[2] வங்கம்-இலவங்கம். [3] விரணன் எனற்பாலது விரோணன் என விகாரம் பெற்றது.

## அசாத்தியம் இரண்டில்

## சுரோணித வாதகுணம்

மேலான சுரோணிதவா தமதின் மிக்கான குணத்தை விளம்பிடுகில்
நூலான நரம்பிடையே தழல்போனே வாசவடிக்கடி வீங்குமது
பாலாகிய மென்மொழி மாதுநலாய் பரதாகமு மோவு பாதியுமாம்
கோலாகலமாக வெடித்ததிலே குருதிப் புனல் பொங்கிடு மிக்குணமே 423

மேவுஞ்செவி சுற்றிட வீக்கமதாம் விசைநாடி யிரண்டும் விறைத்துவரும்
கூவுஞ்சிர மெங்கணும் வெப்பமுறுங் கோழைத்திரள் தொண்டையி னுட்குறு
தாவும்பிடர் நெஞ்சொடு தூளுளையுஞ் சத்தித்து மயங்குமுள் விக்கலுமாம், [கும்
வாவும்பிடி போனடை மங்கையாரே மாருத சுரோணித வாதமதே.

## மருத்துவம்

### 1. விரேசனசுந்தர குளிகை

இந்நோயறி செய்யு மருந்திவைகே ளினிதாகிய சூத மிலிங்கமுடன்,
பொன்னுசிய தார மனேசிலையும் பொங்கும்பொரி காரமு நாவியுமே,
முன்னேருரை கெந்தக முக்கடுசு [1]முப்பாலை விளங்க முரோகணியும்,
மின்னேவரு [2]வாளமி தொப்பிடைகொண் மெலியாதரை சம்பிர மென்
[புளியால்.

அரையாய்ப்பய றேயள வாகவுநீ யடைவாகவு ருட்டி டுவாமமற
வருபாலினிலிஞ்சி யினீர்மதுவின் மகிழ்வா யொருவுண்டை வகுத்திடு
புரைமே வியவாயு மலத்திரளும் பொருமுஞ்சிரமீதுமே வாதமுடன்
உரைமேவியகர் ணீகரத்த மதாலுளதாகியவாதமு மோடிடும். 426

### 2. தேவதாருக்கிருதம் 3. பூச்சி

இடுதேவர்க டாரு வலம்புரிய மேலத்தொடு சாதியு நாகணமும்,
கடுகோடு வெளுத்த னறும்பிசினுங் கம்பிப்பிசின் வெந்தய முக்கடுகும்
கொடுவாவிரு சிரக முள்ளி [3]வசாக் கோட்டமலிழல் குக்கிலு மேதையிவை,
வடுவேல்விழி மாதுந லாய்சமமாய் வாகாயரை வெந்து வடிப்பதுவே. 427

குறிப்பு : சரக்குவகை கழஞ்சு ஒன்றுக்கு பசு நெய் ஒரு படி விட்டு வடிக்க.

வேறும்மிகு காதில் வெதுப்பிவிடாய் மெலுவான சுரோணியின் வாதமெ
போறேனென வொடிடு மென்றறிநீ புகல்வே னினி வேகரு பூசுமருந் [லாம்
தூருகிய நிம்ப முறும்பிசினு முடை வேரும் வசம்புட னுள்ளியவின்,
கூருகிய முக்கடு குக்கிலுவுங் குளவிந்தமு மாயரை பூசிடுமே. 428

பசுநெய்யிலாயினும் ஆமணக்கெண்ணெயிலாயினும்
அரைத்துப் பூசவும்

---

[1] முப்பாலை - முப்பாலை. [2] எல்லாங்கண்டளவு வாளம். [3] வசா- வசம்பு. இதைச் சுட்டுச் சாம்பலாக்கி ஒரு கழஞ்சு கூட்டுக.

### 2. விரணவாத குணம்

விரணம தெழுவாதக் குணமதை வினவக்கேள்
கரணென வெழுமோகப் பருவிவை களினலே
அரணுடை யிருகாதுக் கடியினு மலகூடும்
உரனுற வலியாகித் திருகிடு முணர்வயே. 429

மறுகுற வலியாகு மயர்வொடு வெயர்வாகும்
விறைவொடு திமிர்மேவும் விரணமு மிகவாகும்
சுறுளிடு மிருகாதுந் துரவெழு முரமேவிக்
குறுகுறு குறுவாகிக் குறுகிடு முயிர்தானே. 430

### மருத்துவம்

### 1. பூநாகத் தைலம்

மயிலிற குட்சோறும் வசவொடு கறுவாவும்
[1] அயிலொடு வசநாப [2] மகரமு முலுவாவும்
பயில்கொழி யிடுகாரம் [3] பகர்மயில் சரவூணும்
செயிரது முசுறண்டந் திகழ் [4] பரியுகிராமே 431

கம்பிளி சுட்டகரி கார்கோல் சீரகமும்
பமபிய வெண்பிசி னும் [5] பஞ்ச வனக்கானும்
வெம்பிய முக்கடுகும் வேண்டிய குக்கிலதும்
கம்பிந றும்பிசினு மொன்றுக ழஞ்செடுமே. 432

புங்கிலுப்பை தென்னை புன்னை நிம்பவெண்ணெய் யைந்துமே
புக்கவே சமன்கொண்மிக்க கற்கமும் புகட்டியே
பொங்கிடாதே ரித்துவெந்து பாகமாய் வடித்தபின்
பூசு நீள்சி ரத்தி லும்பொ ருத்திலுந் நகக்கணும்
சங்கை யாக வுள்ளி லுங்கொ டங்கி ரண்டு காசெடை
தட்டிடா திரண்டுகாதுள் விட்டடைப்பை தையலே
மங்குல் போல வேயெ ழுந்த கர்ண வாத சன்னிமோக
மாறிடா விரணம்யாவு மாறு மாறு மாறுமே. 433

அசாத்தியம் இரண்டும் முற்றுப் பெற்றது.

---

### சாத்தியம் இரண்டில்

### 1. செவியில் விறைவாத குணம்

செவியூடுவிறைத்திடுவாதமுமே செய்யுங் குணமான நீதெளிவாய்
சவுயேகெட நீள்சிரமெங்கணினுந் தளராமல்வலித்திடுமூதையுறும்
குவைமீதுகடுத்திடுமீரலகிற் கொட்டாவியு நெட்டையு மாறரிதாம்
புவிமீது நடுக்கி மயக்கிவிழும் பொல்லாத விறைத்திடு வாதமதே.

---

[1] அயல்-கோரைக்கிழங்கு, [2] அகரம்-ரசம், மயிலொடு....மகரமும் எனப் பாடங் கொள்ளின் மயில் செங்கத்தாரி மகரம் பெருஞ் சீரகம் என்க.

[3] இது பூநாகம் போலும்; பகர் மயிராசவூணும் என்றும் சரவூனும் என்றும பலபாட பேதங்களுள. [4] பரியுகிர்-குதிரைக்குளம்பு.

[5] பஞ்ச வனக்காயும் என்றும் பஞ்சவர்ணக்காலும் என்றும் பாடபேதங் களுண்டு. மயிற்கால் போலும்;

## இரட்சை

சுரிமேவு பிடர்த்தல மீதினுமுன் சொல்லும்படி கர்ணக நூலதிலே
வரிமேவிய தெங்கி தங்கி னுறுங்கனி நெய்யமறுகாலமுல் பொங்கெரி
[தங்கநனே
இருகாதடி நாடி விசைத்தலமு மெழிலாக வறிந்து சினத்திடவை
திருகாக வலித்திடு வாதமெலாந் தீருமெனவேயுரை செப்பினரே.

### 2. செவியில் திமிர்வாத குணம்

கன்னிக திமிர்வாதஞ் செய்குறி கழறக்கேள்
சென்னியி னிடைவாயுச் சேரிடும் வெயர்வாகும்
உன்னிய வலகூடுங் கன்னமு முளைவுண்டாம்
மன்னிய களநாடி வலியொடு விறைவாமே. 436

### மருத்துவம்

### சினேக பொட்டலி

திகரிடு கடுகோமந் திரிபலை கருஞ்சீரம்
வெறியுறு மசாளி விதையொடு கார்கோலும்
செறியுறு சனிநாயன் சிறுபுனை விளைவீசம்
நறைகம ழகிலேல நாகண முலுவாவே. 437

மதுகமொ டழிசெட்டி மகிழொடு மாவெட்டி
பொதியவிழ் சிறுசென்னை புங்குட னேரண்டம்
கதுவிய வீரச்சங் கொம்மடி காற்பாசம்
முதிரையோ டேமாடம் முருங்கையு மிவைவித்தே. 438

முள்வளை முயிறண்டம் மூரிகொள் பேய்ப்பீர்க்கு
எள்ளதி னெடுகுன்றி யின்புறு வரள் [1]வாழை
வள்வகிர் வளர்தேங்காய் வசவொடு வசுவாசி
[2] வெள்பிசி னுப்பைந்தும் விளங்கம தொடுகுக்கில். 439

இவைசம னிடிநன்ரு யிதையொரு கிளியாக
நவையறு நவதூசு நடுவொடு குழலூணித்
தகையுறு மஞ்செண்ணெய்த் தைலம தால்விரவிக்
[3]கவையுற வெயில் வைத்துக் கட்டு வைபிணைநீயே. 440

நீயொரு சட்டி சுடவைத்தெரி நிம்ப நெய்யில்
தோய்சிர நெற்றி பிடர்தோள் செவிசுற் றினிலும்
நேயமொ டொற்றிட நேரிழை மாமயில்கேள்
போயிடும் வெப்புறு நோய்வா தமும்புகல் வேனே. 441

---

1 வாகை என்றும் பாடம்
2 வெள்பிசின் பஞ்சவனு விளங்கம தெருக்கலையே என்றும் பாடம்,
3 கவையுறவேயிறுகக் கட்டுவை என்று பாடம்.

பிடவர்ளை தனுவாதம் பிறவலி திமிர்வாதம்
இடருறு விறைவாத மெரியெழு [1] சனி வாதம்
சடமுறு மெரிவாதந் தளர்வுகொள் வெகுமோகக்
கொடுமைசெய் கடுவேகக் குதிரையின் வலிபோமே. 442

## செவியில் வாதம் பலவுக்கும் விடமுட்டித் தைலம்

எட்டி கொன்றை யாயில் புங்கி யங்கு புன்ளை யாதளை
யிலுப்பை [2] சொன்னகாரை வேங்கை யித்தியத்தி [3] யாரமும்
வட்ட மாம டம்பு தும்பை மாவிலங்கை நீலியும்
வாகைகூகை வக்க ணுத்தி மஞ்ச ணுத்தி கொம்மடி
கட்ட மான பேய்த்தி மிட்டி காரை [4] கன்னி காரமுங்
கார்த்தி கைக்கி ழங்கொ டேலங் [5] காத்த குட்டி நொச்சியும்
சட்ட மான வேளை மேனி கங்கு குப்பி யீருவாய்
சாத்ர பாண்டி சித்ர மூலி தக்க கள்ளி நாலுமே. 443

நிம்ப நாறு வீழி வெள்ள றாகு காக்க ணம்முடன்
நீரின் மேனெ ருப்பு மிக்க நீணி லத்தில் வாகையும்
பம்பு கொட்டை யிருகுறட்டை பாலை முன்ளை பாதிரி
பங்கம் பாளை நரி வெருட்டி பாரின் மேவுமிரு குமிழ்
வெம்பு தேட்கொடுக்க தண்டை வில்வ மீசுர மூலியும்
வேலு நல்வி டத்த லைவி ரிந்த பூடெ ருக்குமே
கொம்ப ளுய்கொ டிக்க ழற்க ரூட வள்ளி மூவிலைக்
குருந்து நீள்வ னசமுங் [6] குறுந்த முட்டி வேருமே. 444

புனமு ருங்கை கரிய காலி பொன்மு சுட்டை சூரையும்
பொருவு வேலி யுறுப ருத்தி புளிச மோடு வழிசமும்
கனக நீள்செ ருப்ப டையுங் காண மோடு ழுந்துமே
கருதி லந்தை நறுகரந்தை கட்டு மட்ட வர்க்கமும்
வனச மான கத்தி யாம ணக்கு முல்லை குடசமு
மாக விம்ம ருந்து கேளு மவைச மூல மாகவே
மனது கூர வேப தின்ப லங்கொள் சற்று வாடினல்
மருவு பாளை யுள்ளி லிட்டு மறுக மூடி மண்செயே. 445

துய்ய சட்டி மத்தி யிற்றுளை த்தொர் தூதை மீதிலே
துங்க மாக வேக விழ்த்து சூழ்ந்தி டாயெ ருத்தனல்
நைய வேயெ ரித்து மூன்று நாள்க ழித்தெ டுத்ததி
னக்க ளுரி டத்து விந்து [7] நாரி விந்து [8] நாரணன்

---

[1] சனிவாதம்-சன்னிவாதம் [2] சென்னசாரை-செங்காரை [3] ஆரம்-ஆத்தி [4] கன்னிகாரம்-கோங்கு [5] காத்தகுட்டி-காற்ருேட்டி [6] குறுந்தமுட்டி- குறுங்தொட்டி [7] நாரிவிந்து-கெந்தகம் [8] நாரணன் விந்து-அரிதாரம்.

செய்ய விந்து [1] நான்மு கன்செ றிந்த விந்து நீள்சிலை
சீத மேவு கர்ப்பு ரந்தெ ளீயு ரோணி சீவகம்
உய்யு மக்க ராவு நாவி வாள மோடு மெலிமருந்
துற்ற [2] கார சார மைந்து முள்ளி சோம னுப்புமே. 446

மேவு நல்வ சாவி னேடு வெந்த யம்வி ளங்கமு
மிக்க காந்த மோட வின்விடைய நாகு கடனுரை
தாவு கின்ற சாள மோடு சயில லேகந் துரிசுமே
தகர மோடு துத்த மிருவி சாதிக் காய்கி ராம்பு கேள்
பாவு குக்கில் கருட பச்சை மிக்க சாதி பத்திரி
பகப ருத்தி ராக்க நாங்குழ் பலம ருந்து சரியதாய்
நீவி றைந்தெ டுத்த டைத்த தயிலம் விட்ட ரைத்தபி
னிகரி லாத கிண்ணி யுள்ளி னீயெடுத்து வைப்பையே. 447

வைப்பை சட்டி யுட்க விழ்த்து மணல்சொ ரிந்து சட்டியான்
மறுகமூடி யெரியிடாய்பின் வனசமலர் கொள்கனலெனச்
செப்பு நாலு கடிகை சென்றெ டுத்தி றக்கி யாறியே
சேர வேபொ டித்து முந்து தயில மீது தேனனுய்
ஒப்புடன்க லந்து பேய்ச்சு ரைக்கு யுள்ளடைத்
தோங்கு நிம்ம முன்பு ளத்துளைத்தோர் மண்ட லத்துவை
தப்பி டாம லேயெ டுத்த தயில நல்ல நாளிலே
தந்தி மாமுகத்தன் முன்பு வைப்பை சாந்தி செய்திடே 448

சாந்தி செய்தெ டுத்து தயில வைத்த மொன்று பணவெடை
தங்கொர்மண்டலங்கொள்காதிற்சற்றுவிட்டடைத்திடில்
போந்த வாத மெண்ப தும்பு கன்ற சூலை யீரொன்பான்
புக்க சன்னி யுள்ள தும்பு கன்ற குட்ட மியாவையும்
மாந்து சோம ரோக மும்வ லித்தி டும்வி யாதியு
மயக்க மான நோய்க ளோடு வஞ்ச னைக்கு ணங்களும்
காந்து வெவ்வி டங்க ளோடு கைம யக்கு துன்பமும்
கட்டு மாமு டக்கெ லாமுந் தீரு முண்மை காணுமே. 449

இப் பூப் புடத் தைலம் முன் 46-ம் பக்கத்தில் கூறியபடி இறக்க வேண்டியது. இறக்கிய பின் இரசம், கெந்தகம் முதலிய சரக்குகளை யெல்லாம் மேற்படி தைலம் செல்லத் தக்க அளவு விட்டரைத்து ஒரு மண் கலயத்திலிட்டு மேல் மூடிச் சீலைமண் செய்துலர்த்திக் கொள்க. ஒரு தாளியில் நாலு விரற்கடை மணலிட்டு அதன்மேற் கலயத்தை வைத்து மேலும் மணல் சொரிந்து மூடி மற்றொரு சட்டியினல் மூடிச் சீலைமண் செய்துலர்த்தி நான்கு நாழிகை,

---

[1] நான்முகன்விந்து - வெள்ளைப்பாஷாணம், காரமைந்து-வெண்காரம், பொரிகாரம், சீனக்காரம், சவுக்காரம், அப்பளாக்காரம். [2] சாரமைந்து-நவச்சாரம், சிவச்சாரம், சத்திசாரம், எவச்சாரம், தும்பச்சாரம்.

கமலாக்கினி யெரித்து ஆறவிட்டிறக்கி மருந்தை எடுத்துப் பொடி செய்து தைலத்திலிட்டு நன்ருய்க் கலந்தபின், பேய்ச்சுரைக் குடுக்கையுள் விட்டடைத்துக் கொள்ளவும். முதிர்ந்த வேப்ப மரத்தைத்துளைத்து அதனுட்குடுக்கையை வைத்து அம் மரத்துளா லேயே மூடி மண்டலம் சென்றெடுத்து உபயோகிக்க.

### செவியிற் சூலை 6

தழைசெவி மீதுற வருகுறு சூலையின் விதமது தானறியில்
விளைகத மேலிட வெழுவிட நீரொடு வனிலமு நீள்குருதி
குழுமிய தோர்தசை சுரமொடு கூறிய குணமத ஞலறியும்
பழுதுறு தோஷம துட [1]னிரு நாலுசெய் பகுதியு நீயறியே. 450

கூறிய வத்தினி னீர்தசை வெப்பொடு கோபபி குத்தலெனத்
தேறிடு மிக்குள வூதையு மத்தொடு தீரரி தாமயிலே
சீறிவ லித்தெழு தோட மிரத்தமு மாறுமெனத்தெளிநீ
மீறுகு ணத்தொரு சார்குறி யப்பெயர் யாவுமி சைத்திடுவாம் 451

செவியிற் சூலை ஆறுவகைப்படும். அவை: நீர்ச்சூலை, வாயுச் சூலை, இரத்தசூலை, மாங்கிஷசூலை, சுரசூலை, சன்னிசூலை என்பன. அவற்றுள்; நீர்ச்சூலை மாங்கிஷசூலை, சுரசூலை, வாயுச்சூலை என்னும் நான்கும் அசாத்தியங்கள்; சன்னிசூலை, இரத்தச்சூலை இரண்டும் சாத்தியம் ஆவன. அவற்றுள்

### அசாத்தியம் நாலில்

### 1. செவியில் நீர்ச் சூலையின் குணம்

தோகைய ரேசேவி யூடு றங்கிய
மேகம தாயுறு நீர்மி குந்திடு
சூலையி ஞர்செய் குணங்க ளானவை—சொலவேகேள்
மோகம தாக மயங்கு மேவெயர்
வாகுல மோடு வெதும்பு நீள்சிர
மேமெலி வாக வயர்ந்து தாபமு—மிகவாகி
தாகமு மாயிரு காது மந்தமு
மூதையு மீறியொவ் வாது நாவது
சாரமு மாறி வரண்டு பேசுரை—தடுமாறிக்
கூகைகள் போலல கூடு காதொடு
தாவிட மோதி யெழும்பு மாறிது
கூறிடி யம்பிய நீர்கொள் சூலைசெய்—குறியாமே. 452

### மருத்துவம்

### சிற்றுமுட்டித் தைலம்

குறுந்தொட்டி காரகில் காஞ்சொட்டி கூவிளை
குருந்தத்தி பாதிரி கொழுஞ்சித்தியும்
நறுந்துத்தி சாரடை யடம்புற்ற மாதளை
நறுங்கொட்டை [2] நாறுடை நாரத்தின்வேர்

[1] இருநாலு-இரண்டும் நாலும் என்க பிரிக்க.

[2] நாறுடை-நாறு உடை எனப்

சொறிஞ்செட்டி யாயிலொ டியங்குற்ற தூதுளை
சொலுஞ்சுத்த வாகைக டுலங்குற்றவேல்
குறிஞ்சிப்பிலியுட னழிஞ்சத்தின் வேருசிர்
கொளுஞ்சித்ர மூலிகை குழம்பொக்கவே. 453

வகைக்கொரறு பலத்திினெடு தறித்திடதை
மறுத்துமிடி மதித்து விடுநீர்
உகைக்குமிரு கலத்திினெடு சிறக்கவெரி
பதக்குவடி யுரைத்த படியே
துகைத்தயிலு மெளிற்றயில [1] மயப்பயமும்
வகைக்குவகை தொகுத்த வளவே
புகைக்களப விரைக்கலவைப் புதுப்பனிநீர்
மலர்க்குழல் புகட்டி டதிலே. 454

திரிகடு கிருசீர் வசவொடு கறுவாத்
திரிபலை யுலுவா-விளங்கமோ
[2] டறுவகை யரிசி கிளியுறை நெரியா
ரவினெடு வசுவா-சருங்கன்னர்
வெறியுறு லகிரி வகையொடு திருவார்
[3] மிருகமத குழுவார்-சயிந்தவமும்
நறுவிய புழுகோ டிடவக முதலாய்
நவில்வகை யதுவோ-தெரிந்துகேள். 455

மருவு மஞ்சள் வகைநாலு வுரிய செண்பக மலரோடு
மதுரமுந்து கடுரோணி மகரமந்த முறுசீரக—மதனேடே
பொருவுசந்த மிருவேலி புதியசங்க முறுபீலி
கிளுலை நிம்ப பிசினேடு புகலுமிஞ்சி மதுமேவு—கனிதானும்
சரிகொளொன்று பொடிதூவு பதமறிந்து வடிவேறு
தயிலமொன்றி லடைநீயொர் சலனமன்றி முழுகாய்பி—னறுநோய்கேள்
இரையுமந்த வலிசூலை யிடிகள்பம்பு சலசூலை
யிடர்செய் வஞ்சச் சனிசூலை பெழுதுமந்த வுதைசூலை—யிவைதீருமே. 456

## 2. வாயுச் சூலையின் குணம்

ஊதை மிகுத்தெழு சூலை விதத்தினை யோதிடு மிக்குரைகேள்
மோதி யிடித்திடு நீள்செவி சுற்றுற மோக மயக்கமுமாம்
வாதை மிகுத்திட வேசிர மொக்கவு மாறரு வெப்பமுமாய்க்
காதடி தொட்டல கோடு கவுட்டல மீது கனக்குமதே. 457

---

[1] அயப்பயம் - வெள்ளாட்டுப்பால். [2] அறுவகையரிசி - வெட்பாலை யரிசி, விழாலரிசி, கார்போகவரிசி, வாலுளுவையரிசி, உருளரிசி, உலுவா அரிசி. [3] மிருகமதம்-கஸ்தூரி.

## மருத்துவம்

### செம்மணத்தித் தைலம்

செவிவ ருத்துஞ் சூலை நிற்குஞ் செம்மணத்தித் தைலமும்
புவியில் வைக்கும்படி யுரைக்கும் பொலிவையுட் கொண்டிடு பொன்னே
நவிலு [1]மத்தின் வயிர முத்த நறியசந்த மகிலோடே
சவியெ ருக்குக் [2]கவிக மற்றைக் [3]கதிரு [4]நெய்க்கொட்டை களுமே.

குவவு [5]மெட்டிக் கடிகை கொட்டி குலவு கட்டுக் கொடியுமே
கவை[6]கு றட்டை [7]பலவு கட்கங் கொடி கழற்சிக் கொடியுமே
அவுரி மத்துக் கரிதி மிட்டி யழிசு துத்திக் குணவுதூள்
இவுளி மெத்தப் பதறி கொத்துக் கிளுவை யித்திக் கிதழியே. 459

வேறிரு வேலி கூவிளை நாரி மேவுடை பூதி காவுமே
நாறுசீர் பாலை மாதளை வீழி நாகொடு கூர ஞாழலே
சாறடை பூவை யோரொரு பூடு சேர்பல நாலு சாலவே
ஊறிடு நீரு மீர்கல மாக வோரிரு நாலு நீள்படி யாகவே. 460

ஆறிட வேறு நீவடி பாலு மாமிள நீரு மளாவியே
கூறிய காண மாடமும் வேறு நீயவி சாருநீர் தானுமே
மீறிட வாரு வேறெணெய் நாலு நால்படி யாக விடுவாயே
சாரெடு மீற வேயெரி பாகு தானுறு காலை மேலுமே. 461

### பாடபேதம்

ஒரு பிரதியில் மேற்கண்ட மூன்று செய்யுட்களுக்கும் பதிலாக வேறிரண்டு செய்யுட்கள் காணப்படுகின்றன. அவற்றை யிதன் கீழ்த் தருகின்றோம்.

1. காயு மெட்டிப் பட்டை கொட்டி கடிய கட்டுக் கொடியுமே
நேய மொக்க முக்கு ரட்டை நீள்க மற்சிக் கொடியுமே
யேய மத்துப் பேய்த்தி மிட்டி யினிய துத்தி யரசுடன்
நீயு மொக்கக் கிளுவை யித்தி நீலி வேருந் தானெடே. 462

2. எடுக்கும் வேலி வில்வ நாரி யினிய நற்சீர் பாலையும்
தடுக்கும் வீழி நாகு ஞாழல் சாரு மாதளை தன்னுடன்
அடுக்கு மேயிவை யொன்று நாற்பல மாக வேகல நீருமே
வடிக்கு நீரினி லெள்ளி லெண்ணெயும் வாங்கு மீரிரு நாழியே.

[8] முந்திய முக்கடு முப்பலை சந்தகின் முந்திரி தற்கோலம்
விந்த மரத்தை வெளுத்த னறும்பிசின் வெந்தயம் வெட்பாலை
கொந்துறு பத்திரி செண்பக மொட்டொடு [9]குலவுசிர் கச்சோலம்
இந்தொடு குப்பை விளங்கு மிருப்பை யிதிற்பூ வேலமுமே.

---

[1] அத்தின் வயிரம்-செம்மணத்திச் சிராய், செம்மணத்தி என்பது செம்புளிச்சை. [2] கவிகம் - குக்கில். [3] கதிர் - ஏரட்சுண்டி. [4] நெய்க்கொட்டை-புனரைப்பழம், [5] எட்டிக்கடிகை - எட்டிச்சிராய், [6] குறட்டை - காக்கணங்கொவ்வை. [7] பலவு - சிற்றுமுட்டி. [8] விந்தம் - தாமரைப்பூ.
[9] குலவுசிர் - குலவு உசிர் எனப் பிரிக்க,

அட்ட வர்க்கமொடு கொட்ட முத்தமு [1] மரத்த சந்தமு மருக்குநீ
ளரிசி யாறுவகை யுரிய ரோகணியு [2] மடவி மீதுவரு சோலமும்
வெட்டி வேருநெரி யரிசி சீவகமும் வீறு மேதையும் விளங்கமும்
விரைகொள் [3]பூரமுரோணிசாதியுறுவெண்ணெய்மாமதுரதாரமும்
சட்ட குங்குமம தொக்க நேரிடை கொட்டி டாதிடி பொடித்துநீ
சாரி யெண்ணெயதி னேர்ப தத்தில்வடிதயிலமேமுழுகவேறுகேள்
மட்டி டாதபல சூலை வாதமொடு மண்டை யூடுவரு நோய்களும்
வாத பித்தகப மாதி யாகவரு வாதை மிக்குளது மாறுமே. 465

## 2. மாங்கிச சூலையின் குணம்

உரைத்தசெவி யூடுற நெரித்தகனல் போலெழுந்
துதைத்ததசை மீதெழும்-விஷசூலை
வருந்துகுண மானது சிரத்திலிடி மீறிய
பிடர்க்குள்வலி யாயல-குடனேவாம்
பெருத்ததசை காதிடை யிரத்தவடி வாயது
கரிப்பதுட னேவரும்-பெலமாகி
வருத்தமுற வேபெரு நரப்பினிடை யூதைகொண்
மயக்கமிக வாகிடும் வகைகாணே. 466

## மருத்துவம்

### நிர்க்குண்டித் தைலம்

போந்தநொச்சியியங்குதூதுளை
சீந்தி [4]னத்தமழிஞ்சிவாகைகள்
பூண்டகொட்டை விளம்புகூவிளை
பூந்தருப்பை கடம்புவேலகில்-பொருநாரி
வாய்ந்த வெட்டி குருந்து நாறுடை
கூர்ந்த முட்டி செருந்தி காரகில்
வாய்ஞ்ச முத்தங் கரஞ்ச மாயிலி
யாங்கெ ருக்கு நெருஞ்சி வீழியும்வகைசேரவே
சாந்த முத்தணி கொங்கை பாய்சம
ணய்ந்து வெட்டி யழுந்து நீரது
தாங்கு முக்கல மிஞ்ச வேயெரி
சார்ந்து வற்றி யுறைத்த போதிரு-தறுகாமலே

---

[1] அரத்த சந்தம் - செஞ்சந்தனம், [2] அடவிமீது வருசேலம்- அடவிகச் சோலம், [3] பூரம்-பச்சைக் கர்ப்புரம், சாதியுறுயெண்ணெய்-கண்டில் வெண்ணெய். [4] நத்தம்-.எருக்கு கொட்டை-கொட்டைக்கரந்தை, முட்டி-சிற்றுமுட்டி, காஞ்சம்-புன்கு-அரக்குமுதிர்ந்த நீர்-கொம்பரக்கு அவித்த நீர், காண்டம்-பாத்திரம்.

காந்த லற்றிடு மெண்ணெய் பாறயிர்
கூர்ந்த ரக்கு முதிர்ந்த நீரொடு
காய்ந்த டுப்பி லெரிந்து மன்புறு
காண்ட மத்தில் விரைந்து நீவிடு-களிமேவவே. 467

சுக்குக்[1]கடு முத்தச்சினையொடு குக்கிற்கிளி நத்துச்சுரியுகிர்
துச்சிட்டணி பச்சைப் புழுகொடு-துரிசேலமும்
குக்குட்பிசி னக்கிக்குலமறு கர்ப்புப்புர பிப்பிற்கர் றுவகில்
கொட்டத்தொடு சட்டப் புழுகொடு-வேலிவேரும்
திக்குச்சசி யுப்புத்திரிபலை கற்கக்கடி சத்தக்கடனுரை
தித்தித்திரி கட்குட் குறுகனி-சிறுமூலமும்
அக்குப்பிசி னட்டக்குழுவொடு மத்திப்பிலி கொத்துச் சடைமுகை
யப்பைத்துளி ரச்வத் தொலியுட-னசமோதமும்
மிக்குற்றெழு பச்சைப் பசியவின் வெட்டிக்குல மிச்சுத் தருதுர
மெட்டிக் [2] குரு குத்தித் தொலியொடு—மிருசீரகம்
சிக்கத்திடு நெய்க்கொட் டையின்மணி சித்தத் துறுபத்ரி குலமொடு
செச்சைப்பிசி ஞெச்சித் துளிர்வெறி—தசமூலமும்
ஒக்கச்சம னிட்டிட் டுறவடி பட்சத்துட ஞெக்கத் துகளற
ஒக்கக்கல வொக்கக் கனலெரி—உறுபாகமாய்ப்
பக்வத்தொடு லக்கப்படவடி பத்யத்தொடு மெய்க்கக் குளிசெவி
பத்துத்துளி விட்டிட் டடையகல்—பலசூலையே. 468

### 6. சுரசூலையின் குணம்

செப்புப் போன்முலை மாதுந லாய்செவி
யொக்கத் தாவியே கோப மிகுந்திடும்
வெப்புச் சூலையி னுர்செய் குணங்க—ளறிந்தேகேள்
துப்புப் போல்விழு நாறு முளைந்திடு
மக்கித் தாகமு நாவும் வரண்டது
சுக்குப் போலுலர் வாகி மயங்கிட—வயர்வாகி
அப்புக் கூர்விழி மீறி வடிந்தழல்
மிக்குத் தேகப மாகி விரைந்திடு
மச்சத் தோடிரு கால்கர மெங்கணு—மதுநோவாய்
உப்பித் தேவயி றூதி வருந்திட
விக்கிச் சீறிட வேவெயர் வாகிடு
முற்றுத் தானறி வாகட நூலினை—யுணர்வோனே.

---

[1] கடு-கடுகு, முத்தம்-கோரைக்கிழங்கு, சினை-கோரோசனை, கிளி-கிளியூறல், நத்துச்சுரியுகிர்-நாகணம். குக்குட்பிசினி - குங்கிலியம், கர்ப்புப்புரம்-பச்சைக்கர்ப்பூரம், பிப்பில்-திப்பிலி. கறு . கறுவா, சசியுப்பு-இந்துப்பு, கற்கக்கடி-இலுப்பைப்பூ, திரிகட்குட்குறுகனி, திரிபலை, அக்குப்பிசின்-அகிற்சத்து, அட்டக்குழு-அட்டவர்க்கம். அத்திப்பிலி-அத்தித்திப்பிலி, சடை-சடாமாஞ்சில், முகை-செண்பகப்பூ; நாகம்பூ என்பாருமுளர், அச்வம்-அமுக்கிரு. துரம்-துடரி, [2] குருகுத்தி-பிமதண்டு, சித்ரத்தொலியோடு என்றும் பாடம். நெய்க்கொட்டையின்மணி-புனலைப்பழம், பத்ரிக்குலம்-இலவங்கபத்திரி, காளிசபத்திரி-சாதிபத்திரி, செச்சை-வெட்சி.

## மருத்துவம்

### உசீர்சந்தனாதித் தைலம்

[1] கந்தத் தொடுசீர் குந்தக் கூவிளை
சிந்துக் காரகி [2] னத்திப் பூவொடு
தாலத் துறுமடல் வேல்கொத் தழிசொடு
காலத் திருவெலி நீலத் தியுமர
விந்தப் பூவலி கந்தத் தோடில
வந்தக் காணியு மந்தப் பாலையு
மீறுஞ் சீதேவி கூறுங் கோவையு
நாறும் பாதிரி வேறுந் தூதுளை
அந்தச் சாறடை கந்தித் தூரொடு
கொந்துக் கேதகை பந்தப் பீரொடு
மாமல கக்கனி மாமலை யிற்கணி
காமரு முக்கடு தேமல ரிக்கொடு
புந்திக் காரணி யந்தச் சாகினி
[3] கந்திப் பாதகி யிந்தத் தாதகி
பூமுட் டியினெடு மாகச் சமனிடு
நீர்முக் கலனிடு போதத் தெரிவடியே.
[4] வடித்த நீரொடு பாலிள நீரெணெய்
விடுத்துச் சீதள முத்திள நீர்சரி
மருக்கொள் பாகெணெய் முப்படி விட்டெரி—மறுகாலே
கடுத்த கோட்டந் திரிகடு முப்பலை
யரத்தை காரகில் குக்குலு முத்தமு
மருக்கொள் நீள்[5]வெறி மிக்குள வித்தொடு
கதித் தாளிச பத்ரி துவட்சிகை—கமழேலம்
அடுத்த நாகணம் வெட்பலை மொட்டவி
னருக்க மாமலர் கர்ப்புர சட்டமு
மருத்து ரோசனை கற்கர்ட பச்சையு—மரியாறும்

---

1 கந்தத்தொடு உசிர் எனப் பிரிக்க. உசிர்-இலாமிச்சம்வேர், குந்தம்-குருந்து, கூவிளை-வில்வம் சிந்து-இருவாட்சி. 2 நத்திப்பூ-நந்தியாவர்த்தம்பூ, தாலத்துறுமடல்-பனைமடல், நீலத்தி-அவுரி; சருநெய்தல் என்பாருமுளர். அரவிந்தப் பூவலிகந்தம்-தாமரைப் ,வும் கிழங்குமென்றமடி; தாமரைப்பூவும அல்லிக் கிழங்கும் எனப் பொருள் கொள்வருமுளர். இலவு-தேற்று பாலை-வெட்பாலை, கேதகை-தாழை, பீர்-பீர்க்கு, ஆமலகம்-நெல்லிக்காய், கணி-வேங்கை, இக்கு-கரும்பு, புந்திக்காரணி-பிரமி என்பர். சாகினி-சிறுகீரை, தாதகி-ஆத்தி, முட்டி சிற்றமட்டி, 3 நந்திப்பூடொடு என்றும் பாடம்.

4 நீலத்திறமுறு என்றும் பாடம் கந்திப்பாதகி முதலிய சில சொற்கள் விளங்கவில்லை.

5 வெறிமிக்குளவித்து-சாதிக்காய், துவட்சிகை-கற்கடகசிங்கி; அல்லது கடுக்காய்ப்பிஞ்சு. அரியாறு-அரிசியாறு. தாரு-தேவதாரு. வாசம்-இலாமிச்சு, முக்கனி-திரிபலை, துளிர் துளீர் என்றுயிற்று.

விடுத்த தாருவு மக்கர துத்தமு
முரைற் வாசமு முக்கனி யப்பையின்
மிகுத்து ளீரொடு மொப்பிடை யுறறிடி—மிருது வாக
அடுத்து நீவிடு மிக்க பதத்துற
வடித்து வேறடை சூலை பதத்துற
மதித்து நீள்செவி விட்டடை யுட்கொளு-மதினாலே
தொடுத்த வாதமு மத்தி சுரத்தொடு
மிகுத்த தாகமு மக்கி கபத்திரள்
துடிப்பு மேல்வெயர் குத்தொ டயர்ச்சிகள்–சுழல்வாயு
கடுத்த சூலைகள் விக்க விளைப்பொடு
விறைத்து மோதிடு தொக்கு வலித்திரள்
கதித்த சோகைகள் குட்டவெடிப்பொடு-கயநோவும்
எடுத்த நாவுலர் வுற்ற வரட்சியு
மிரைத்த வூதைகள் சக்தி நடுக்கமு
மெரித்து வாதைசெய் பித்தவகைக்குண-மிவைதீருமே.

பாரின் மேவுதிற லரச னுனபா ராச சேகரனை யண்டினோர்
சீரின்மேவிவளர் செல்வமல்கவவ ரின்மைதீருமது செய்கைபோல்
ஆருமூழ்கினவர் கோருகின்றசுக மடையநீள்பிணிக ளகலுமென்
றேருமாயுண்மறை தேருமா தவர்களுண்மைகண்டறுதி யிட்டனர்.

அசாத்தியம் நாலும் முற்றிற்று

---

## சாத்தியம் இரண்டில்

## 1. சன்னிசூலையின் குணம்

கன்னிக முற்றிடு சன்னி கதித்தலின் மன்னிய சூலைசெயுங்
காரண மேதெனி னீள்செவி சீழுற நீடு கனப்பு மிகுந்
துன்னிவி றைத்தது சென்னியொ டுச்சியு மொக்க வலித்திடியா
வுடரொடு வாகி யுரோம முதிர்ந்துட லேறவு நொந்துளையும்
அன்னம றுத்திடு முன்னிய விக்கலு மாக மயக்கமுமா
யானன வேர்வையு மாறரு மோகமு மாகி நடுக்கமுறும்
தன்னுணர்வற்றிட விண்ணின்மறப்பொடு குன்னிமுடக்குமுடல்
தாபமொடேபர தாகமுபாதியு மாகுமதன் குணமே. 473

## மருத்துவம்

## குருந்தெண்ணெய்

குருந்தோடு நாறுடை யழிஞ்சோடு கூவிளை
குறிஞ்சாவு [1] ஞாழலுங் கொடுவேலியும்
கருங்காலி தூதுளை நெரிஞ்சோடு பாதிரி
கடம்பாயில் வேலொடு கருஞ்சூரையும்

---

[1] ஞாழல்-பொன்னுவிரை.

[1] பிருங்காவு மாதளை நரந்தோடு சாறடை
பெருங்காவின் மாறிவளர் தழுதாழையும்
செருந்தோடு காரகி லுழுந்தோடு காணமு
மொருங்கான நிலைகண்டு தெளிந்தோர்களே. 474

மருந்தான தோராறு பலம்போத வேயிடி
வருந்தாது நீர்கலன் மகிழ்வோடுநீ
எரிந்தாறி னல்வடி யிடுங்கூட வேயெணெ
யிணங்காவி யேயிடு மினங்கேளுநீ
விரும்பாரின் மேவிய வசம்போடு காரகில்
விளங்காரு வோமமு மவின்பூரமும்
கருஞ்சீரு நாகண முறும்பாலை வேறுள
களங்காரு மோதிய கரும்பூவையே 475

வகைக்குமொரு பலத்தினெடு தறித்தவதை மறித்துமிடி யதுக்கு விடுநீர்.
உகைக்குமிரு கலத்தினெரி சிறக்கவொரு பதக்குவிடு வுரைத்த படியே.
துகைத்தயிலு மெளிற்றயில மயப்பயமு வகைக்குவகைக் கொத்த வளவே,
புகைக்களப விரைக்கலவை புதுப்பனிநீர் நறைக்குழலி புகட்டி டதிலே. 476

மற்றொரு பிரதியிற் கண்ட

## பாடபேதம்

[2]பூவையேயிவை பதின் பலங்களெடு போதவேதறி யிடித்தபின்
மேவுநீரி ருகலத்தைவிட்டவி மிகுத்த நீருமிரு நாழியாய்த்
தாவியேயதை வடித்துவேறுமொரு தாளி தன்னிலிடு வைத்தபின்
ஏவைவென்றவிழி மாதராயதிலிடு மருந்தினையியம்புவாம் 477

நாக ணத்தினோடு பூத வர்க்கமுறு நாறு குக்கில்வசு வாசியும்
கோக னத்தினிதழேல முற்றவிதை கோழி விட்டுவரு காரமும்
சீவ கத்திரளு மோது முக்கடுகு தேவர் கற்பதரு ரோகணி
பாகமுற்றவிவை யொன்றுநேரினிடு பாலும்விட்டெரி வடித்திடே.

வடித்துமுழு கிடச்செவியி லடைக்கவிரு விழிக்குள்விட மறுத்திதழிலும்
குடித்துவர வுடற்றடவை விதற்ககலு மியற்பிணிகள் குறித்துவினவில்,
தடித்தவுட லடைத்தசெவி யுடற்குள்வலி சிரத்திலிடி வெடித்தசனிநோய்
கடித்துளைவு முடக்குதலை திமிர்ப்புவிறை வயர்ப்பிவைகள் கடிதேகுமே. 479

## பாடபேதம்

வடித்தெடுத்திரு சிரத்தி னீள்செவியில் வார்த்தை டைக்கவிடு நோய்கடாம்.
இடித்த மண்டைவலி சூலையெட்டுட னிரண்டு காதிலுறு வாதமும்.
வெடித்த சன்னிகள் கடுப்பு ஊச்சல்பிடர்மேவு நோய்களெவை யானவும்
கடுத்த யங்கிய களத்த ரன்றனிரு கண்முனை புரமொக்குமே. 480

[1] பிருங்கா-கையாந்தகரை. நரந்து-நாரத்தை. [2] இச்செய்யுள் முன் சிற்றுமுட்டியெண்ணெய் என்ற -தலைப்பின்கீழும்வந்துளது.

## 2. இரத்த சூலையின் குணம்

கறணிக சுரணித மெழுகுண மதிலுறு கடுகிய வெடிசூலைக்
குறியிரு செவியொடு விரணம தெழமிகு குருதிகள் விழுமதனல்
மறுகுற விடிவலி திமிரொடு முழலைகள் சலமுற வருமதுவே
சிறுகிடு மிருகுரல் திருகிடு மலகுக டெரிகுவை தெளிகுணநீ. 481

### மருத்துவம்

### அசுவகந்தித் தைலம்

[1] அசுவ கந்தமு நரைகொள் சந்தமு மதவுதும் பரமும்
பசிய குந்தமு மகிலு முந்திய பழுவமுங் குமிழும்
இசலை பம்பிய கிளுவை தும்பிலு மிறலி வங்கமுநீள்
குசைசெ ருந்தொடு கதிர்பொ ருந்துசிர் குடச மிஞ்சமுமே. 482

[2] கணிகை வெம்பனை புனமு ருங்கையொ டிதழிகண் டகமுங்
காரெட்டிநீர்வெட்டி வீழொட்டி யீர்முட்டி கூர்முட்டி சீர்முத்தமும்
அணிக டம்பொடி மதுக மம்புய வளையமுஞ் சில்பா
வாரித்தி கூவிளை நாரத்தை தூதுளை யாலத்தி லாமிச்சி வேலததிசம்
பணிவி ரிந்திடு விளவ டம்பொடு கைதை செழுங் கழுநீர்
பாரொத்த மூவிலை சீரொத்த வோரிலை பாகுற்ற நீர்வளி நீர்பத்தியும்
கணியொவ் வொன்றது வறுப லங்கொளு துணிசெயம் பியநீர்
காரெட்டு வேடிட்டு நீர்விட்டு ஊறிட்டுக் கூறிட்டு சீரீட்டிடே. 483

[3] எட்டொன் றுக வேயிறு - விட்டன் பாக வேயெண்ணெய்
கட்டுங் கோகுல நீள்பய - மெட்டு போத நீவிடு
பெட்டம் பாக வேவடி - யிட்டங் கூர நீகுளி
யச்சங் கூருஞ் சோரிகள் - வெப்புஞ் சூலை வாதமும்
குட்டங் கோவை நோயொடு - குத்துஞ் சூடு வேதனை
குற்றஞ் சேரு நீள்வெயர் - குப்பஞ் சேரு நாடிடில்
முட்டும் வாயு மீறழல் - மொய்க்குஞ் சோக மீழைகள்
முக்குங் கோப மூலமு - முற்றுந் தீரு மாறிதே. 484

---

[1] அதவு-அத்தி, உதும்பரம்-எருக்கு, குந்தம்-குருந்து, பழுவம்-ஆல் துப்பில் என்பது ஒரு மரம். தும்பை என்றும் உடம்பிலி என்றும் உப்பிலி என்றும் கிளுவை என்னுமிடத்திற்கு கருவெல் என்றும் பாடபோதங் களுண்டு. இறலி-இத்தி வங்கம்-வட்டுக்கத்தரி. குசை-தருப்பை, செருந்தி-கோரை ஒரு மரமுமாம், குடசு-குடசப்பாலை.

[2] கணிகை-முல்லை. பனை-அரசு. கனிநிலப்பனை என்றும் பாடம். அங்ஙன மாயின் கனி-வேங்கை என்க. இதழி-கொன்றை. கண்டகம்-நீர்முள்ளி மதுகம்-மதுரம். அத்திசம்-நீர்முள்ளி. கைதை-தகழை. செங்கழுநீர்-சீதேவி யார். மூவிலை-நரிப்பயறு. ஓரிலை-ஓரிலைத்தாமரை. நீர்பத்தி-தண்ணீர் விட் டான். அம்பியம்-மிடா.

[3] கோகுலநீள்பயம்-மசுப்பால், எண்ணையும் பாலும் வகைப்படி அ.

## செவியில் சூலை பலவுக்கும்

### 1. குக்கிலாதிச் சூரணம்

[1] தீதறு குக்கி லோரொரு வற்கு மீர்பல மத்தில் வேறுநீர்
சீருறு பட்டை நால்பல மொத்த திரிகடு மிக்க திரிபாலை
ஓதிய குப்பை சீரியர் பத்ரி கார்கோ றுத்தம் ரோகணி
யோமமு மிக்க தூபமு முத்தற் காசுறை புட்டி லோடவின்
காதல கற்ப தாருறு கோட்டந் தாளிச பத்திரி சாளகஞ்
சாதிகள் கர்ப்புர ரோசினை குக்கில் சலாவு மொக்க வேசமன்
காதிய சித்த மூலியு மெட்டிக் காயுறு வித்து மோர்பலங்
காதடி முற்று மேயிடி மட்டில் வேறுகொ ளக்கி காணுமே. 485

### 2. கெந்தக ரசாயனம்

[2] களிதமறு கெந்தகம் விளவிஞெடு செண்பகங்
கடுகுவச விந்துவுங் கமழேலமும்
கடலினுரை மஞ்சளும் மரிசியறு பந்தமுங்
கருதிய விலிங்கமுங் கருசீரகம்
பளிதமுறு குங்குமந் தெரியுமில வங்கமும்
பசியநறு சந்தமும் பகரோணியும்
பணிலசுரி யென்பவுந் திரிகடுகு வெந்தயம்
பயிறுரிசு மிங்குவும் பயில்சாரமும்
துளிமதுர கொங்கமும் மிதழிநறு நிம்பமுஞ்
சொறிதவி ரியங்கின்வேர் சுழல்வாகைவேர்
சுருள்கொடி யழிஞ்சில்வெள் ளறுகவுரி தும்பையுந்
துடரிசிவ நிம்பமுந் தொகுவாகவே
நெளியவிடி தும்பிலுந் நறுநெய்விடு மிஞ்சவுந்
நிகழ்கதலி யின்பழ நிகர்தேனுமே
நிறைவிரவு கிண்டுபின் வெருகடிகொ ளின்பமாய்
நிமிர்சிரசுள் வந்தநோய் நிலைபேருமே. 486

### 3. குக்குலுபட்டைச் சூரணம்

நிம்பத்தோல் தோடையிலை நேர்கண்டங் கத்தரியும்
தும்பைத்தூர் முள்ளி சிறுசுண்டை வம்பவிழும்
பூண்முலையா யோரொன்று போதப் பதின்பலங்கொள்

---

[1] குக்கில்-பலம்2 பட்டை-பறங்கிப்பட்டை. சீரியர்-இருசீரகம். தூபம்-சாம்பிராணி. புட்டில் - தற்கோலம். கற்பதாரு - தேவதாரு. சாளகம்-குங்கிலியம், சாதிகள்-சாதிக்காய், கிராம்பு, வசுவாசி.

[2] களிதமறு கெந்தகம்-நன்கு சுத்தி செய்து களிம்பு நீக்கிய கெந்தகம் என்றபடி அரிசியறுபந்தம்-அறுவகையரிசி. பளிதம்-பச்சைக் கர்ப்பூரம். பணிலசுரி - நாகணம். இங்கு - பெருங்காயம். கொங்கம் - பூமிசர்க்கரைக் கிழங்கு. இதழி-கொன்றை வேர்நிம்பம்-வேப்பம்வேர். தும்பில்-கற்கண்டு. கதலிப்பழம் என்றது ஈண்டு சாம்பல் வாழைப்பழத்தை, பழமும் கற்கண்டும் நெய்யிலிட்டுச் சிவக்கக்காய்ந்த பின் சரக்குத் தூளிட்டுக் கிண்டி இறங்கித் தேன் விட்டுப் பிசைக. தேனையும் நெய்யோடுகலந்து பழமும் கற்கண்டு மிட்டுக் காய்ச்சி யிறக்கிய பின் சரக்குத்தூள் போடுவாருமுளர்.

மாணுறவே நீதறித்து வாய்ந்தநீர்—பேணி
அரைக்கலம் விட்டே யதில்விரவிக் கொண்டு
பொருத்தமாய் வேடுகட்டிப் போதப்—பரித்ததோர்
குக்கிலொரு நாலுபலங் கோதகல வைத்தற்பின்
மைக்கவொரு சட்டிகொடு வாய்மூடிச்—சிக்கென
வெயெரித்து நூலிழையே வெந்தா லவித்தெடுத்துத்
தோய மதிற்கழுவிச் சுத்தியுறப்—பாய்மீ
துலர்த்திநறு நெய்சிறுக வூற்றி வறுத்து
நலத்துறு பட்டைபல நாலு—மலக்கற
வேசீவிக் கொண்டதற்பின் வேலிப் பருத்தியிலை
மாசிலா நொச்சியிலை மாவிலங்கை—பேசிய
சங்குசங் கங்கும்பி சாற டையுந்தும்பை
புங்கவுரி கள்ளிநாற் பூவையே—இங்கிவைகள்
ஒவ்வொன்று சாறுரியா யொன்றித் தொருகலத்தில்
வவ்வியுற விட்டதற்பின் வண்டுகட்டித்—திவ்விய
பட்டை யதிற்பரப்பிப் பாங்காக வேறுமொரு
சட்டிகொண்டு மூடித் தழலெரித்துக்—கட்டாக
வற்றிய பின்னெடுத்து மாதே யுலர்த்திமிகச்
சுத்தமுறு கெந்தி யிரண்டுபலம்—முத்தனைய
ஆவின்பா ஞழி யானவொரு சட்டியிட்டு
மேவியநற் கம்பிளியால் வேடுகட்டிப்—பாவையே
வேறுமொரு சட்டிகொடு மேன்மூடித் தீயெரித்து
ஊறி யுருகியதி னுள்விழுந்தால்—ஆறியந்தப்
பாலி லரித்தெடுத்துப் பாங்கான பின்பதற்கு
மேலு மருந்து விளம்பக் கேள்—கோலமுறு
முக்கடுகு கொத்தமல்லி முற்பகரு மட்டவகை
தொக்கமறு நற்றுரிசு துத்தமுடன்—மிக்கவிரு
சீரகமோ டேலஞ் சிறுமூல மீரோமம்
கார்கொலுட ஞறரிசி காரவகை சாரவகை
சாதியைந்தது நேர்விளங்கொடு சாதிலிங்கமு மோதிடுஞ்சிலை
பேதிவன்சிவ ரோணிகுங்குலு சீதவிந்தொடு
போதமுந்தவின் மாதுகேள்
ஆவரைத்தொலி காவெளேத்தொலி வேலியிற்றெலி
யாலினிற்றெலி
நாவலிற்றெலிசாறடைத்தொலி
நாரமத்தொடு சேவகத்தொலிபூவையே

---

தோயம்-தண்ணீர். பட்டை-பறங்கிக்கிழங்கு சங்கங்குப்பி-பீச்சுவிளாத்தி. கள்ளிநால்-சதுரக்கள்ளி. இதை வாட்டிச் சாறெடுக்க. அட்டவகை-சிற்றரத்தை, பேரரத்தை, செவ்வியம், சித்திரமூலம். சிறுதேக்கு, நன்னரி, கோரை, சிறுகாஞ்சோன்றி, சத்திசாரம், தும்பச்சாரம். சாதி ஐந்து, ஏலம், இலவங்கம், சாதிக்காய், கிராம்பு, வசுவாசி, விளங்கு-வாய்விளங்கம். குங்குலு-குங்கிலியம்; விந்து-இரசம். வேலி-உத்தாமணி. வேயினிற்றெலி என்றும் பாடம். வேய்-மூங்கில். சேவகத்தொலி-சிற்றாமுட்டி வேர்த்தோல்.

அதிமதுர முறுதருவு மடையவிவை யொருநிறைகொள்
இதனைபிடி பொடிவடிகொ விதையுமுனம்-விதமாகவே
சுத்தியான மருந்தெலாமிடியத்திஞேடு பொருந்தவேயிடு
துப்புமாம துவந்துநீகொடு துட்டமான கிரந்தி சூலைகள்
அத்ரவாயு பவுத்ர நோயொடு சுற்றுச்சூடு நிதம்பசூலைகள்
அக்கிதாக மசந்தவாதமு மத்தியூடு சுரங்களானவும் பத்தியே
கல்லடைத்திடன் மெல்லடிப்படல் கைமயக்குதல் சில்லொடுப்படல்
மேல்வெடித்திடல் பன்னிறப்படல் மேல்பொருக்கெழல் வல்லியே
அசறுமேலெழு புலவு நாறுதல் படருதாமரை யழுகணீரொடு
கசமதாயுறு சொறிசீலாரிடல்
குமிழுளேவடிகுருதிசீயொடு கசிவான
சிரசிரங்கு சொறிபறங்கி திமிர்விதங்கள்
தினவெழும்பல
கறைபடிந்து குமிறலுந்து
கடிவிஷங்கள் புரைவிழுந்தல வெறு வெறெனும்
வண்டுகடிவிடங் கண்டபுகையெழல்
துண்டமடைபடல்மண்டையிடிகொளல்
விண்டபதகரி கண்டகடிவிஷந்
தண்டுபிளவைகள் மண்டுதசையெழல் கொண்டதோர்
நாசிபீடபீனிசங்கள் மாசுமேவுமாசுரங்க
ஞசமானமாசயங்கள்
ஓசையூடு நீர்சலங்கள் காசமோடு சேர்கபங்கள்
ஊதைமீறு
பேதகங்கள் சீதமேவு பேதகங்கள்
பேசுமுந்து நாவினி லுந்து சூலைகள்

---

காரவகை-வெண்காரம், பொரிகாரம், சவுக்காரம், சீனக்காரம், அப்பளக் காரம். சாரவகை, நவச்சாரம், எவச்சாரம், சிவச்சாரம், தரு-தேவதாரு. வேப்பம் பட்டை முதலியவற்றை நறுக்கி ஓர் பாண்டத்திலிட்டு தண்ணீர் அரைக் கலன் விட்டுப் பாண்டத்தின் வாயைக் கம்பளியால் வேடுகட்டி அதன்மேற் குக்கிலைவைத்துச் சட்டியால் மூடி எரித்து அவிந்தபின் குக்கிலை எடுத்துக் கொள்ளவும். பின் வெய்யியிலர்த்தி நெய் தெளித்து வறுத் தெடுக்க. பறங்கிக் கிழங்கையு மவ்வாறே சாறு வகைகளைப் பாண்டத்தில் விட்டு முன்போல் வேடுகட்டி அவித்து எடுத்துலர்த்துக. பசும்பால் நாலு படியை ஓர் பானையில் விட்டுப் பானையின் வாயைக் கம்பிளியால் வேடு கட்டி வேட்டின் மேல் கெந்தகத்தை வைத்துச் சட்டியினுல் மூடிச் சீலை மண் செய்து பூமி மட்டத்தின் கீழ்ப் புதைத்து எருவடுக்கிப் புடம் போடக் கெந்தக முருகிப் பாலில் விழுந்திருக்கும் அரித்தெடுத்துக் கொள்ளுக. சரக்கு வகைகளை வேருகவும் இவற்றை வெவ்வேருகவும் இடித்தரைத்துப்பின் கலந்து கொள்ளுதல்வேண்டும், மருந்துண் ணும்போது உப்புப் புளி நீக்கிப் பத்தியம் வைப்பது உத்தமம். உண்டு முடிந்தபின் ஆமணக்கெண்ணெயா யினும் சிரரோகங்களிற் சொல்லியிருக்கும் தைலங்களில் எதுவாயினும் தேய்த்துத் தலைமுழுகுதல் வேண்டும்,

வெந்தரோணிகள் பொந்ததாய்விழல்
முந்தவேயுழை தந்தசூலேகள் தந்தவாயுகள்
தந்தகிருமிகள் தத்த சீலொடு தந்தசோரிகள் தந்த மேயுதிர்
தந்தவேவுகள் வந்தவத்தியிற் பறங்கிதோடமும்
ஒட்டிய கிரந்திரோகமு மக்கியுட்
புகுந்த சூரைகள் சத்திகெட்டிருந்த ரோகமு
மக்கரக் குணங்களானவை
தப்பறப்பறந்து போமிது
வித்தகத்திணங்கமாமுனி முற்படப்பயின்ற நீதியின்
வித்தையைத் தெளிந்து யோகமும்
பத்தியத்திருந்து நீசெய்து குத்தமற்றினங்க வேகுளி
பக்குவத்திருந்து தேர்வது பரிகாரமே. 487

செவியிற் சூலே முற்றிற்று

---

## III. செவியிற் சன்னி நான்கு

ஒது கர்ணிக மீது சன்னிக ளோரு நாலு முணர்ந்திடி
லொன்று வாயுவுமொன்று நீள்சியலொன்றுசோரியுமொன்று நீர்
ஈதின் முன்னுரை வாயு மன்னிய நீரு மின்னல்செய் நோய்களா
மெய்து சீலொடு வெய்ய சோரியு முய்யுமாலென வெண்ணு நீ
தீதுசெய்குறி வாதை கொள்குண மோது செய்கை தெரிந்துகேள்
செப்பு மோர்புற முற்று மேயுறின் மிக்கநேர்மை தெளிந்திடும்
ஆதி முன்னுரை வேத மேமுனி கோதி னன்மொழி யாய்குவோ
ரன்பு கூர வறிந்து மாறுகொடுன்ப நோயையறுப்பரே 488

### சாத்தியம் இரண்டில்

### 1. சீல் வெடி சன்னியின் குணம்

[1] கேள்வி யுளில்வரு தோ டமதுதனில் வாத மிகுசிய னேவுகேள்
கெண்டைபோ லும்விழியொண்டொட செவியுமண்டை யூடுருவநொந்திடும்
தாழு மலகுகண் மோதி விறைவொடு பாக மயர்வுறவீசியே
தண்டமாக வலிகொண்டு நீள்விழிகள் துண்டமோடி சிவுகொண்டிடும்
நாளு மொழியுறு நாவு வரள்வுற வோது பலவுரை யீனமாய்
நந்த லாய்மிகவு மந்த மாகிமெலி வுந்த ளாடலொடு குத்திடும்
சூழு கபமது தாழு மிருமிடு மூதை கொளும்விழி சோரிடுந்
தொந்தநோவுமதி மந்தமோடுசுழல் வுந்துகானடைகள் சிந்துமே.

---

[1] கேள் - செவி. துண்டம். இந்நோயில் வாதம் அதிகரித்திருக்கும்.

## மருத்துவம்

### வசவாதித் தைலம்

வசம்பு நால்பலம் வேறே நீயிடி
தெளிந்த நீர்குறுணி பாகா யூறிட
வருந்த வேயெரி சீரா யோர்படி—வடிநேராய்
[1] கசந்த பாகெணெய் தானே யோர்படி
நயங்கொள் பேரெணெய் நேரா யேயது
கலந்து ளேவிடு மேலா மூலிகள்—கருதாய்நீ
இசங்கு நாறுடை யாடா தோடையு
மிளந்து ளீரொடு வேலீ காவிளை
யியம்பு சாறடை வீழீ வேளையு—மிதின்வேரும்
தெசங்கொண் மூலியு நாலே நால்வகை
யழிஞ்சி நீள்விதை காலீ தூதுளை
சிறந்த பாதிரி வேரே யோர்பிடி—தெளிவீரே. 490

அடுக்கு மஞ்சளின் வன்ன நாலொடு
விடுத்து மிஞ்சிய சொன்ன தாரமு
மரத்தை சந்தன மன்னு நாகண—மரியாறும்
அருக்கு நன்மலர் புன்னை மாமுகை
விரித்த சென்னைகள் கன்னி காரமு
மமுக்கி ராமண முன்னை காரகி—லவிஞேடே
விடுத்த செண்பக மன்ன பேதியு
முரைத்த சன்மளி புன்னை மாமணி
விரைக்கொள் பன்னைகள் சன்னி நாயகன்--விடயமோமம்
வெளுத்தல் வெள்ளுளி துன்னு நீள்கிலு
கிலுப்பை வள்ளுகிர் பின்னு மோர்சடை
விரித்த கஞ்சவு மன்ன தாருவும்—வெறியாறும்
கடுத்த திரிகடு மின்ன ஞயிடி
பொடித்து முந்துறு மெண்ணெய் மீதுறு
கருத்து றும்படி துன்னி விடாதெரி—கருகாதே
கதிக்க வெந்துகொள் பின்னை யேவடி
குறித்து டன்கொளு சன்னி சூலைகள்
கடுப்பு மிஞ்சிய சன்னி மேல்வலி—கபவேர்வை

---

[1] கசந்தாபாகெண்ணெய்- வேப்பெண்ணெய். பேரெண்ணெய்-நல்லெண்ணெய். வேலி-கொடுவேலி. இயங்கு முதலியவை துளிரும் வேரும் என்பது கருத்து. தெசங்ககாண்மூலி- தசமூலி. காலி-புனமுருக்கு, மஞ்சள்நாலும்-கஸ்தூரிமஞ்சள், கறிமஞ்சள், மரஞ்சள், குளவிந்த மஞ்சள். சொன்னதாரம்-பொன்னரிதாரம். அரியாறு-அரிசியாது, அருக்குமலர்-எருக்கலம்பூ. புன்னை முகை-புன்னைப்பூ மொக்கு, கன்னிகாரம்-கோங்கு சன்மலி-முள்ளிலவம்பிசின். புன்னைமணி-புன்னைவித்து. புன்னை-பச்சைக் கர்ப்பூரம். உகிர்-இலாமிச்சு, தாரு-தேவதாரு.

இடுப்பு நொந்துடல் குன்றல் காதிடி
வெடிப்பு வெஞ்சல மன்ன சோரியு
மிரைச்ச னெந்துளை வுன்னு மூதைக—ளெழுநீரும்
எரிப்பு டன்பிடர் தன்னி னேவொடு
நரப்பு டன்கொழு கன்ன மேல்விறை
விளைப்பு நெஞ்சது கன்ற ருபமு—மிவைதீருமே. 491

## 2. இரத்த வெடி சன்னியின் குணம்

முந்து நீள்செவியி னூடே தாவிட
நொந்து கோபமுற வேதான் மோகமு
மொய்ம்பு தாழ்பிடரி கீழ்நா மேலண—முறநோவாம்
கொந்து சேர்குழலி கேளாய் நாளினி
லுந்து மேயுடையு நீரா மேயவை
மந்த மாயகுறி கொண்டு வேர்வையு—மிகவாகி
வந்து கால்கள்கர மோவாய் நாவுலர
வுந்த ளாடலுட னேதா னுகுல
மந்த மோடுமயர் வாயே காதினிடை—வருசோரி
சிந்து மேயிதுவு மோர்பா லேயுற
வந்த போதிலுறு மாறே நீதெளிதி
சிந்தை கூரமுனி தானே யோதுமுரை—தெளிவீரே. 492

## இலசுனுதி நிம்பத் தைலம்

[1] மருவ முற்பக ரிலசுன மத்தொடு விரவு சுக்கதி மதுர முத்தமு
மருங்கொட்டம் வசம்புஞ்செண் பகங்கொத்தம் பலையோமம்
அரசி வர்க்கமு முரிய குப்பையு மவின ரத்தையும் விடய முப்பலை
யழிஞ்சத்தின் கொழுந்தத்தி னிளந் தொத்தும புடைவேரும்
மிரியல் கர்ப்புர மரிய சட்டமு மிதழி யிற்பிசி னிருவி துத்தமு
மிலிங்கஞ்சந் தனங்கொண்டங் குங்கிலியம் மிவையோடு
உரிய திப்பிலி குலவு நற்கடு கசக சாவிரை சசியினுப் பும்பரி
வுறுங்கற்கங் கழஞ்சிட்டங் கிரிந்திட்டங் குறவே. 493

[2] உரியநறு நெயினளவு நிம்பப் பழத்தினுறு
தயிலமது மளவியிடு முந்தப் பொடித்த பொடி
யுறவிசிறு சிறுகவெரி வெந்தப் பதத்தில்வடி—யுடல்கால்கை
சிரமுமிரு செவியும்விடு துண்டத் தலத்தும்விடு
செறியமுழு கிடுதெரிய மங்கைக் குரைத்த பொரு
டெரியமறைமுறைபரவுகும்மக்குடத்துண்முனி—தெளிநூலை

---

[1] இலசுனம்-வெள்ளுள்ளி. கொத்தம்-மல்லி. அழிஞ்சிக் கொழுந்து வேரும் என்றபடி. மிரியல்-மிளகு. கொண்டம்-குறிஞ்சா. [2] நிம்பப்பழத்திலுறு தைலம். வேப்பெண்ணெய்.

மருவுகலை பயிலுமவர் புந்திக் கிதத்தவட
மொழியையுறு தமிழினுரை சிந்தித் தியற்றிடுகில்
வசனமுணர் செவியிலுற மிஞ்சக் கனக்குமிடி—சொரிநீரும்
பெருகுசல வெடிசனிகண் மண்டைத் திமிர்ப்பினெடு
திருகவல குகளில்வலி வெம்பிச் சுரக்கும்விறை
பிடரிவலியுளைவினெடுதொண்டைக்குழிக்கழலைபிற—வலிதிருமே.

சாத்தியம் இரண்டும் முற்றிற்று.

———

## அசாத்தியம் இரண்டில்

### 1. நீர் வெடி சன்னியின் குணம்

செவியி னூடுற நொந்து வருந்திட
மறுகு நீள்சிர மெங்கு முளைந்தது
சிறுகு நீள்குரல் பம்பி மெலிந்துறு—சோபமாகி
குவியு நீள்விழி பொங்கி மருண்டிடு
மலகு காதடி வந்துற வுந்திடு
குமிழி போலும்வெடி கொண்டு சுரந்ததில்—வருநீரும்
சவிகெ டாயிடு மங்க முலைந்திடு
மிருமி யேசல நெஞ்சி லுறைந்தது
தளர்வ தாய்வெகு சம்பிர மஞ்சல—மதுதான
கவியு மாமுகில் பொங்கு நெடுங்கிரி
யுறையு மாமுனி முந்த மொழிந்திடு
கருணை யாயுறு பண்டிதர் கண்டிது—கருதீரே. 495

## மருத்துவம்

### திரிகடுகாதி நிம்பத் தைலம்

[1] திரிகடுகு நாரி கூவினை—குடசமிசு பாலை தாதகி
யுறுகிருமி சாடு மாயிலி—சிந்துக்கந்தத் தோடு சீதை
சிறுவழுதில் தாது மாதுளை—யறுகவுரி வேவி பாதிரி
சிவவனச வேரு சீரொடு—குந்துசந்தத்தொடுதேவதாரு
தெறுகாரி சாறடை காலிமாமலை—முரிமுரிகையானு மூவிலை
களவிதழி வேலு நாறுடை—கந்தக்குந் தத்தொடு காசு
கருதுமொரு மூலி நால்பல—மதுதுணிசெய் தோயமேயொரு
கலமும்விடு சீற வேயெரி—வெந்தத்த தந்தித்திதை வேறே

---

1 சிந்து-இருவாட்சி. கந்தம்-உள்ளி. குந்து-குந்துருகம் என்னும் மூலி. தெறு-தேற்று- காரி-கண்டங்கத்தரி. காலி-புனமுருக்கு. மலைமுரி-சற்றுமரையென்பர். மூவிலை - நரிப்பயறு குந்தம் - குருந்து. காசு - முத்தற்காசு. கார்கொழி-கருஞ்சீரகம்.

மறுகவடி கூட வேயதில்—விடுபயமு மோது நீள்தைல
மதனிலெண்ணெ யாதி யாயுள—நிம்பச் செம்பொற் பழமேவி
வருமெண்ணெயு நேர தாய்விடு—வுறுநலிள நீரும் வாரெரி
வளமதுற வாயுண் மாமறை—முந்தச் சிந்தித்திடுவோர் சொல்
நறுவியகி ரூர நாகண—மரிசிவகை யாறு சாளக
நறைமதுர பூர ரோசினீ—மஞ்சண் மஞ்சிட்டியுமோம
நவிலும்வெறி யாறு சீதள—மிருகமத சாதி தாளிச
நகைபுழுகு சீத கார்கொழி—யின்புற் றிவைநேரே. 496

கற்கவகை யொக்கவிடி புக்கவிடு பத்தவெரி கட்டளையதாய்
மிக்கபத மொக்கவடி மத்திசிர முற்றுடலும் விட்டடைசெ
விக்குமொரு சத்துளிலு மப்புவளி ரத்தசிய னத்திவெடிநோய்
அக்குசனி குத்திடிகள் கப்பிவலி தொக்கிலுளை வற்றுவிடுமே. 497

### 2. [1] வாயு வெடி சன்னியின் குணம்

ஓதிற் காதிடை குத்து மிடித்திடு
மாறுற் றேவலி கக்கல் பெருத்திடு
மூர்வுற் றேசிர மொக்க வரட்சியு—முடனுகும்
மோதிச் சீறிட விக்கி யிளைத்திடு
மோகத் தாகமு மொக்க வெர்த்திடு
மோலித் தார்கலி யொக்க விரைத்திடு—முரைகேளா
வேதித் தேயல குக்கிடை கிட்டிடு
மீறித் தாகமு மக்கி பெருத்திடு
மீளக் கோழைகள் சத்தி யெடுத்திடும்—விரைவாக
வாதித் தேபுரு வத்தொடு நெற்றியு
மாகத் தாழ்பிடர் சுற்ற வலித்திடும்
வாயுச் சீலினின் முட்டிடு சன்னியின்—வகைதானே.

### செவியிற் சன்னி பலவுக்குந் தைலம்

ஓதுஞ் செவியிலுற வுந்திவெடி நீரிரத்தம்
காதுஞ் சலமுதை கருதியநால்—ஆதியாய்
வந்தசன்னி வாதமவை மாறுதற்கு மானணையாய்
சிந்தை யுறத்தைலஞ் செப்பக்கேள்—முந்தவே
எள்ளெண்ணெய் புங்கிருப்பை பென்னை புன்னை யெண்ணெயிவை
தள்ளாம லொவ்வொன்றுந் தான்சமனுய்க்—கொள்வைநீ
வெள்ளாட்டி னெய்பும் விளம்பிய கண்டுநெய்யும்
துள்ளு முதலையினிற் றேன்றுநெய்யும்—விள்ளாதே

[1] இந்த நோய்க்கு, பூதிகா நிம்பத் தைலம் என்னும் தைலம் ஒன்று கூறப்பட்டு இருக்கிறது. அதைக்கிடைத்த பிரதிகளைக் கொண்டு செற்வை செய்து கொள்ள முடியாமையினல் பதிப்பிக்காமல் விட்டோம். வேறு பிரதிகள் கிடைக்குமாயின் ஆராய்ந்து திருத்திப் பின்னர் வெளியிடப்படும்.

ஈதி னிரத்தமது மித்தோ டளாவியபின்
மாதேநீ கற்க வகைகேளாய்—போதமுறு
[1]முப்பழமு முத்தமொடு கொட்டமுலு மிக்கசத
குப்பைகமழ் வெட்டியுசி ரத்திஞெடு—தக்கவிரு
சந்தமகில் கொந்துலவு சண்பமலர் வெந்தயமும்
மந்தமறு மிந்துகடு மஞ்சள்வகை—சிந்தையுறு
கார்கொலுட ஞறரிசி காரகிலு மோதமவின்
சார்மதுர முத்திராக்கஞ் சானமணி—சீரியர்கள்
கோழியிடு காரமது கோல்விடய நாகுபுரி
கேளுநெரி பாசியொடு கேண்மையுறு...வாள்விழியே
நிறுவியிருவி லசுனவசவு கறுவுநிமிளை கடுகுவெறிகொள்
வகைமிருக மதமும்வளைச நகமுமளைகொள் சிவதைசுவைகொள்
திரிகைதுரிசி சிவகவகையு முரகதசையு முசிறினரிசி
அறுகுகிருமியொடு வெண்பிசினும் வகைகள் சமனுமதனைத்துகையும்
இடிபொடிசெய் தைலமதி விடுவிசிறி யெரிசிறுக
வடிகொள்பத முடுகுமுன மதனிலுறச்...சடையனைய
தழுதாழை நிலவாகை தசமூல மலர்வாகை
குழையாயில் கொடுவேலி பரிவாலி—வளமேவும்
உத்தமதாளி சித்திலைப்பாலை யொட்டுயிஞுரி கொத்தகல்வீழி
மத்தொடுகாரை துத்திகையானு மட்டுடைநாலிற்—துளிர்சேர
மேவுநெல்லிக் காயாளவிட் டேவிரவிக் காதலுறத்
தூவிவடித் தேயதனிற் ருேகைசொலக்—கூவுமியற்
சாவலறுத் தேகுருதித் தாரைவிடுத் தேமறுகாற்
தூவுசிலிற் பாதியொடுத் தோதுமுறைத்—தீவியநற்
கெந்தக மிடங்கண மிலிங்கமலர் கிம்புரிசை
விந்துவுட னேர்ந்துமிடை மிஞ்சுசமன்—அந்தமுடன்
பொடிசெய்திடு துகிலிலிடு புனைகுறிசெய் தைலமதில்
அடையவெரி பரணியில்வை யதையுமினம்—முடிவுபெற
நெல்லுக்கு ஞற்பதுநா ணேராக வேபுதைத்து
வல்லபம தாயெடுத்து வைத்ததனை—அல்லலறச்
சென்னி தனிலுஞ் செவியினிலும் பூசிவரச்
சன்னியொரு நால்வகையுஞ் சார்வாதம்-கன்னமதில்

---

கண்டுநெய் நல்லாநெய் என்றும் பாடம். [1]முப்பழம்-கடுக்காய், நெல்லிக்காய் தான்றிக்காய். உசிர்-விலாமிச்சம்வேர், மஞ்சள்வகைமஞ்சள்நாலு. சானமணி-பெருங்காயம். சீரியர்கள்-இருசீரகம். நாகு-நாகப்பூ. புரி-வலம்புரி நெரி-நெரியரிசி. பாசி -பச்சை. நிறுவி-நிருவிடம். இலசுனம்-உள்ளி. வசவு-வசம்பு. கறுவு-கறுவாப்பட்டை. வெறிகொள்வகை-தக்கோலம் ஏலம், இலவங்கம், கர்ப்பூரம், சாதிக்காய். மிருக மதம்-கஸ்தூரி. வளைசகம்-நாகணம், திரிகை-முந்திரிகைப்பழம்; உரகதசை-சர்ப்பக் கண்டம். முசிறினரிசி-முயிற்றுமுட்டை. கிருமி-கிருமி சத்துரு. தழுதாழை-வாதமடக்கி பரிவாலி-குதிரைவாலி. ஒட்டு-புல்லுருவி. உயில்-சிக்கிரிப்பட்டை, மத்து-பூமத்தை. இடங்கணம்-வெங்காரம். அலர-பொன்னரிதாரம் என்றும் கிம்புரிசை-இரசகர்ப்பூரம் என்றும் கூறுப,

வெருவுமிடி திமிரயர்வு சியல்குருதி யிரைவுளைவு
தருமுழலை யொடுமெரிவு மிகுவிரணன்-பொருவரிய
சிரத்தில் வெயர் கடுப்புளைவு சிறுத்தகுர லிளைப்பிருமல்
பெருத்தநரப் பிசிப்புமிகு பிடிப்புவலி-வருத்தமிவை
ஒழியவிரு செவியிலடை யுறமுழுகு நசியமிடு
பழியகலு மெழிலுடைய களபமுலை-மொழிவதுகேள்
உப்புப் புளிப்புமறு கைப்புத் துவர்ப்புமொழி
வெப்புத் துனுக்கமறு மப்பைத் தரித்தசடை
ஒப்புத் தணந்தபொரு ளப்பொற் சிவைக்கருளும்
அதுதெளியு மசலமுனி யுரைசெய்தமிழ் வளமுணரும்
அறிஞர்சவை யாய்ந்து தெளிவதுபரி காரமே. 499

## IV. செவியில் விற்புருதி. 6

செவியிடை முரணுற விரணம தெழவழல் செறியுறு [1]விற்புருதி
தெளிவுற வறுவகை யுளததி னுறுபெயர்குறியுறநீயறிவாய்
குவிதசையொடுமடுவிரணம துடன்மிகுகொடுமைசெயென்புடனே
குலவிய புற்றிவை யாறினி லொடுமடு குளிர்தசை மாறிடுமாம்
பவமிகு புற்றெடு விரணம தென்பிவை பகரிடின் மாறரிதாம்
பரிமள மிர்கமத மழவிய முலைமயில் பரிவுட னிவைகேளாய்
அவிர்சடை யரனுமை மலைமகள் மகிழ்வுற வருடமுறைபேசு
மழகிய குணமொடு மகல்வுற மவுடத மவைசொல் வறிவீரே.

## சாத்தியம் மூன்றில்

### 1. தசை விற்புருதியின் குணம்

சுற்றுதசை விற்புருதி யுற்றகுறி தொக்கிலுறு
சுற்றதனிற் பக்க முமெலாம்
உற்றிட வதைத்தனி லக்கிவலி குத்திநெடு
மெத்தவே யெரித்து விழுமால்
எற்றுகரு நத்தையினி லுற்றதசை யொப்பதென
வெப்பமுற முற்றி யெழுமே
உற்றதிவை யிக்குணம தொக்கமுனி செப்புமறை
யுற்றறித லொத்த முறையே. 501

### 2. ஒடுவிற்புருதியின் குணம்

வடுவைப் பிளவுசெய் விழிபொற் கிளிமொழி மயிலுற் றறிநீயே
கடுகச் செவியிடை விரணத் துடனுறு கறஞெத் தெழுமொலியே
வெடிபட் டுளைவொடு வலிகுத் தயர்வுகள் மிகவுற் றழலாயே
ஒடுபட் டழிசல மிகுமிஃ தொடுவிற் புருதிசெய் குறியாமே. 502

---

[1] செவியில் விற்புருதி ஆறு. அவை:- தசை விற்புருதி. ஒடுவிற்புருதி. மடுவிற்புருதி. விரணவிற்புருதி. என்புவிற்புருதி, புற்றுவிற்புருதி, என்பன. அவற்றுள் ஒடு, மடு, தசை மூன்றும் சாத்தியமாவன—ஏனை மூன்றும் அசாத்தியமாவனவாம்.

### 5. மடுவிற்புருதியின் குணம்

வடவெற் புறுதன மயிலுற் றறிகுவை மடுவிற் புருதியை நீயே
அடைபட் டிருசெவி குடையுற்றதிலிடி யழலுற்றெழுமலகிடையே
முடுக்கித் திடிரென வெளுபற் கழர்வுற முகமொக் கவுமது கனமாய்
இடியிற்கடிதெழுகுடைநற்புதரென விரைவுற்றெழுமதனியல்பே.

அசாத்தியம் மூன்றில்

### 1. என்புவிற்புருதியின் குணம்

ஓசைசேர்செவியிலென்புவிற்புருதிசெய்குணங்களிவையோதிடில்
கூசு மேயலகு கூடு மெல்லைகள் குவட்டி னுேடுமிடி கொண்டிடும்
பேசி லோகவு ளிடிக்கு மேயிரு புறத்து மென்புகள் புறப்படும்
நாரமாகுமிது தீரி டாதுவகை நாக மாமுனி யுரைத்ததே. 504

### 2. விரண விற்புருதியின் குணம்

குறியுறச் செவியுளே விரணவிற் புருதிமேல்
கொதிகொள்வெப் புடனெழுங் குணமோதில்
மறுகுறச் சிரமெலா முளைவுறத் துடிகள்போல்
வசமறக் கபமுமாய் வலியாகும்
இறுகுறக் கன முமா யெரியெழச் சுரமுமா
யிருகவுட் கிடையெலா மிடிமோதிக்
கறணெனப் புலவுநீள் கனலையொப் பதுவெனக்
கருதியுற் றிடுமிகு தறிவீரே. 505

### 3. புற்று விற்புருதியின் குணம்

முத்தை யொத்தநகை மானே நீயறி
புத்து விற்புருதி தானே காதடி
முற்று முட்டனில மாபே மோ திட-முகபேதமாய்
நத்தை யுட்டசைகள் போலே சீயொடு
குத்த யர்ச்சியிடி மாரு வேதனை
நச்ச முற்றதுப ரோயா வேர்வொடு-வெகுமோகமாய்ச்
சத்தி விக்கலழ னீருய் மேலெழு
பித்து மிக்கபமு மாருய் மீறிய
சக்தி யிற்கிசைய நோயாய் நீரினில்-மிகுதாகமாய்
அத்தி யுற்றெழுதல் போலே சீறிட
நெற்றி தொட்டலகு மீதே நோவெழு
மக்கு ணத்தையறி தீரா நோயிஃ-தெனவோதினர். 506

## செவியில் விற்புருதி பலவுக்கும்

### 1. நாளிகேரத் தைலம்

[1] தெங்கு நெய்யினி லங்கு நீவிடு சீதகாகொளி நாகணந்
திரிகடு குடனுறு திரிபலை வசவொடு தேவ தாரமு மதுரமும்
பொங்கு கடனுரை சோகி யுள்ளுறை புழுகு மக்கர பூரமும்
பொரியு துரிசவி னுரிய காருகோல் பூவை யேகரிய சீரகம்
இங்கு ளங்கடுகு ரோணி யொக்கவு மெடைச மன்கொடு பொடித்ததை
யிட்டு வெந்திடு நற்பதந்தனி லேவ டித்திரு செவியினும்
தங்க விட்டடை புறத்து மேதடவு சால விற்புருதி யாறுமே
தறுகியோடிவிடு முண்மையுண்மையிது தந்திமாமுகவ னுணையே.

### 2. தில தைலம்

[2] திலம தானதயி லத்தின் மேவியிடு செய்ய பூரமொடு பச்சிலை
திப்பில் சுக்குமிள கரிசி யாறுலசு னத்தி னேடுகறு வாவபின்
புலவு நாறிய வெளுத்தல் காரகில் பொருந்து நாகண விருச்சிகம்
பூதகற் கடக மாலை நாங்குழ்கழல் புதிய மஞ்சளச காலுடன்
தொலைவிலேலமுசிறண்டமுஞ்சுழலுமாவரைத்தொலியும்விதையுமே
துளித மாயுற விடித்து நீயுமதி லிட்டெ ரித்துவடி காசெடை
வலிகொள் காதிலிட வாறு விற்புருதி மாறி யோடுமிது நிச்சயம்
மறுகு மண்டையிடி குத்தி னேடுளைவு மாறி யோடுமிது சத்தியம்.

### 3. உமரிச்சாரகிருதம்

[3] நறுவியொடுபுற்றி றுத்தசோறு துரிசுசூத மற்றிப்பிலியு
நறியசாதி கைப்புக்குழுவுமன் றிநவச்சாரமும்
உறுதவிருநீலகுக்கிலப்பைதருமுவலைசாளகதுத்தமோ
டுசிர்வெளுத்தற்பிசி னுமுமிரிசாரமருக்குத் துளிருடைவேரவின்
கறுவுபூத விருக்கச் சிராயுமரியகார் கோல்வசம் புசயிலேகங்
கதலிவாழைத்தார் சுட்டநீறுக ருதியோ ரொரொப்புற்றகூறு
உறவதாக வொக்கப்பொடி செயெரிவடி கொள்வற்றச் செவியி
லோருமட்டு விற்புருதிமொ ழியுமாறுசத்திக் குரைசெயுரையாகுமே.

### 4. காரக்குழம்பு

[4] முன்புரைத்திடு காரமைந்தொடு விந்துரத்த பாடாணநந்துரி
முந்துநற் றுரிசானசங்க முமுடிதாரமும்

[1] காகொளி–தேட்கொடுக்கி. இங்குளம்-சாதிலிங்கம்.

[2] விருச்சிகம்-சாரணை. கழல்-கழற்சிக்கொட்டை, நாங்குழ்-நிலவேர். அசகால்-வசம்பு. [3] நறுவி-நிருவிடம். புற்றிறுத்தசோறு-புற்றும்பழச் சோறு. அப்பைதருமுவலை-அப்பைத்துளிர். உமிரிசாரம்-உமரிப்பூண்டைச் சுட்டெடுத்த சாம்பரிற்காய்ச்சு முப்பு. அருக்குத்துளிர்-எருக்கலந்துளிர்.

[4] நந்துரி-நாகணம். சங்கம்-சங்கபாஷாணம், முடிதாரம்-மிருதாரசிங்கி. இங்கு-பெருங்காயம், சம்பிரவிங்கிதம்-எலுமிச்சம்புளி.

இன்பமுற் றிடுசாதிலிங்க முமைந்தெனப் படுசா ரபாதமு
மிங்க தொப்பெடையாக வெந்தெடு தருமீதை
அன்புறக்கல தூயசம்பிர விங்கிதத்தரை மேவுசெப்பிடு
வந்தபுத்தொடு சோரிசிந்திடு பலநோயும்
என்புவிற்புரு திமேதையுந்திய புண்களுக்கள வேயிசைந்திடு
மென்படப்பு கரேடமா றிடுமிது காணுமே. 510

### விரணவிற்புருதிக்கு இரட்சை

[1]கறணிகச் சுவடிலே வெடிபடப் பொருமியே
கனலெனப் புதைய வேயெழு மாகில்
அறமுரைத் தவர்சொ னுரருமறைப் பொருளிலே
யறிவுவைத் திடுக வேயதினுறு கேள்
சிறியபுட் காலினேடரிய பொட்டோதினர்
செவியடிக் கீழுமே செறிவாகவே
விரணவிற் புருதியார் பொடிபடத் துகளதாய்
விழுவர் மைக் கடலிலே விரைவாகவே. 511

### புற்றுவிற்புருதிக்கு அட்டைவிடல்

வித்தகச் செவியுளே சத்தெழக் கதுவியே
வெப்புறப் பொருமியே வெகுநோவாய்
நத்தையுட் டசைகள்போ லத்தினிற் றவழுமா
னக்கனுக் குரைசெய்தார் நலமாக
உத்தமக் குரியதா மட்டைவிட்டிடுகவே
யுற்றுரைத் தருளினு னுமைபாகன்
புத்துவிற் புருதிதா னற்றுவிட்டிடுமெனப்
புக்குரைத் தருளினர் புவிமீதே. 512

செவியில் விற்புருதி முற்றிற்று.

---

### V. செவியில் எழுச்சி 6

மானே செவியில் வருமெழுச்சி யாறுபெயர்
தானே யுறுகுணமுஞ் சாத்தியமும்—தேனே
பெயரு மசாத்தியமும் பேசினர் முன்னோர்
இயல்பாய்த் தமிழி லியம்பில்—செயலான
சாத்தியமு நாலாகுந் தக்க வசாத்தியமும்
ஏத்துமிரண்டா மிளங்கிளியே—ஏத்த





[1] புட்கால் பட்சியின் கால்போன்ற இரட்சைக்கருவி. பொட்டு-வட்டமாயுள்ள இரட்சைக்கருவி, இவ்விரண்டி லொன்ருல் செவியின்கீழ் இரட்சைசெய்க.

பெயர்நீ ரிரத்தம் பெருஞ்சீழ் விரணம்
அயர்வான சன்னிசுர மாறிற்—கயல்விழியாய்
முன்னுரைத்த நாலு முறையாகச் சாத்தியமாம்
அன்னசுரஞ் சன்னி யசாத்தியமாம்—மின்னேகேள்
சாத்தியமோர் நான்கினுக்குஞ் சாருங் குணங்கள்சொலக்
கோத்தநீர்த் தோடத்தாற் கொண்டெழுச்சி—தோற்றில்
தலைவலிக்கு மூக்கடைக்குந் தக்கபிடர் கனக்கும்
உலையுஞ் செவியுள் ளுடையும்—மலைவார்
இரத்த வெழுச்சி யிருகா தடைக்கும்
வருத்து மிடிகுத்து வலியோ—டுரைத்திடுகில்
வீக்கமுட னேவாய் வெடிக்குங் குருதி சிந்தும்
தாக்கிய சீழெழுச்சி தன்குணங்கள்—கேட்கில்
சிரமுழுதுஞ் சூடு செறிந்திடும் வீக்கம்
உரமுறு காந்தலுடல் சிலிர்த்தல்—கரைய
வெடிக்குஞ்சீல் மற்ற விரண வெழுச்சி
இடிக்கும் பரிதாக மேங்கல்—மிடைப்படவே
பொட்டிக் குருதி பொசிந்துவரு சன்னியினுல்
முட்டு மெழுச்சிக் குணமுரைக்கில்—மட்டில்
இடிவலிகுத் தோடிரைச்ச லேற்றலகு நெட்டி
கொடுவீக்க நெட்டுயிர்ப்புக் கொள்ளும்—கடுகிய
மண்டைக் கனப்புவிக்கல் வாந்தி சுரமிருமல்
தொண்டை சிதறல் தொடர்ந்துதலை—கொண்டதோர்
வாயு செறுத்திரைதல் வார்த்தைகே ளாதிருத்தல்
தீதுற்ற சாத்தியமாஞ் சேயிழையே—ஓதிற்
சுரத்தி லெழுச்சியுறு தோட மதுகேள்
பெருத்தவிடி காந்தல் பிரமை—வருத்தும்
நடுக்கல் விறைவிறைத்த னுவரட்சி தாகம்
தடுத்த பிடர்க் குத்து விறைப்புத்—தொடுத்த
அலகு கடுத்துளையு மான திமிர் கொள்ளும்
சலமோடு நீரிரத்தஞ் சாடும்—உலகறியக்
காதுகே ளாது கருதீ ரசாத்தியமாய்
ஓதினர் முன்னோர்க ளுற்றதனைத்—தீதில்
மருந்து வகைகள் மறுசிகிச்சை தாமும்
தெரிந்துணர்ந்து மேன்மையுறச் செய். 513

செவியில் எழுச்சி, ஆறு வகைப்படும். அவை, நீரெழுச்சி, இரத்தவெழுச்சி, சீழெழுச்சி, விரணவெழுச்சி, சன்னியெழுச்சி, சுரவெழுச்சி என்பன. அவற்றுள் நீர், இரத்தம், சீழ், விரணம் இவை நாலும் சாத்தியமாவன. சன்னி, சுரம் இரண்டும் அசாத்தியமாவனவாம்.

## மருந்துவம்

### நீரெழுச்சிக்கும் இரத்த எழுச்சிக்கும்

[1] செவியுறு நீரெழுச்சி யுறிலது தீரமிக்க
திறமுறு வேளை யத்தில் வருநீரே
நவையற வேயொ ழுக்கி யதையரை சூழவப்பு
நலிவுற வேயிரத்த மதுவாகில்
புவியுறு நீர்வ ளிக்குள் வருமிகு நீரையுற்ற
புகையெழு நீல கண்ட ரினிதாக
அவையிடி நீயழற்று புளிதள மீது சுற்றி
யதையரை பூசு ரத்த மதுதீருமே. 514

### விரண எழுச்சிக்கு

[2] வெடிபடச் செவியுளே சலமுடைத் ததனுளே
விரணமுற் றிடவெழு மதுமீள
அடவியுற் றெழுவதோர் பிளவுபற் றிடுபுவே
யனலெரித் ததனினெய் யதுதூவி
விடுவைதொக் கதனிலே விரணெழுச் சியினினுன்
மெலிவதற் றிலதெனி லதுமீளக்
கடியநற் றுரிசொடே யுரியவெற் றிலையுநீள்
கனலில்வைத் தரைபயம் விடுபூசுமே. 515

### சன்னி எழுச்சிக்கு

[3] கன்னிக மீது சன்னியி னுய வின்னல்செய் தோட மதுதீரவே
முன்னுரைகோடலன்னதுதீயுண்முன்னுறவேவையவைமோதவே
துன்னுறு துளிகள் பின்விடு மேலு மன்னது பூசு மதுசூழவே
சன்னியி னுய வின்னல்செய் தோட மன்னது தீருமியல்பாகவே.

### சுர எழுச்சிக்கு

[4] சுரத்துறு மெழுச்சியென திற்கதலி யுற்றெழு
துடக்கமது தன்னை மிகவும்
மருத்துற வழற்றிய தொழுக்கவது சுற்றினின்
மறித்திடு மரைத்த தனையே
வருத்திடு மெழுச்சிகள் செறித்திச லக்குவை
மயக்கிடு மிரத்த மவைபோம்
தெரித்தமி ழகத்திய முனிக்கர னுரைத்தருள்
சிகிச்சை தனையுற்றறிவதே. 517

---

[1] வேளை-தைவேளை. நீர்வளி-தண்ணீர்விட்டான், நீர்மலி என்றும் பாடம். நீலகண்டர்—துரிசு இதை மேற்படி சாறுவிட்டரைத்து வில்லை தட்டிப் பழப்புளியினுற் கவசித்துச் சுட்டு வெந்தபின் கவசம் நீக்கி மேற்சாறு விட்டரைத்துப்பூச. [2] புற்றிடுபூ-காட்டுக்காளான், பயம்-முலைப்பால், [3] கோடல்-வெண்காந்தள். [4] கதலியுற்றெழுதுடக்கம்-வாழைக்கிழங்கு,

## செவி எழுச்சி பலவுக்கும்

### கோடாசூரி கிருதம்

[1] துரிசுமவி னேடு சோகியு மரிசுசொ லால மாமணி
துவர்சிகை பூத நாரொடு சுழலாவிரை
அரியவசு வாசி சாதியு மகிலுந லேல மாறரி
யயில்புழு கோம சீரக மதிமதுரமும்
புரிவசவு தானு நீள்சிலையு முறைலசுன கறுவு மானமுறை
புகலுமிவை மீறி டாதுசம னுகவே
மருவுநெயி னேடு வேகவை யுரைகடவ ருது வேறெடு
வடவையனல் போலு நோய்களவை மாறுமே. 518

### செவியிற் கரப்பன் 8

[2] செவியிற் கரப்பனுறு வகையெட் டதற்குவகை
தெரியக் குறித்த றிவைசில செப்புகேன்
அவையிற் பெருத்தவற லனலக்கி பொக்கிவெடி
யழுகிச் சிலிர்த்தி தலைசொறி யெட்டுமே
நவையற் றிதற்குறுதி யொழியத் தொகுத்ததிது
நலிவற் றிசைத்தெ ளிவுநய முற்றதாம்
சவையிற் பெருத்த முனி மொழியைக் கருத்திலுறு
தமிழிற் பெருத்த வுரையது தப்புமோ. 519

செவியிற் கரப்பன் எட்டு வகைப்படும் அவை; நீர்க்கரப்பன், கொள்ளிக் கரப்பன், அக்கிக் கரப்பன், பொக்கிக் கரப்பன், வெடி கரப்பன், அழுகண்ணிக் கரப்பன், தேமற் கரப்பன், சொறி கரப்பன் என்பன.

### நீர்க்கரப்பன், கொள்ளிக்கரப்பன், அக்கிக்கரப்பன் இவற்றின் குணங்கள்

எட்டுக் கரப்பனென மட்டுக் கடக்கமது
விட்டக் குணங்களிவை யறிநீயே
துட்டக் கரப்பனிது வப்பித் தெழுந்தவகை
தொக்கக் குமிட்டியது சொறிவாமே
விட்டுத் தெழுந்த கனல் கட்டிக் கனிந்தசொறி
வெப்புற் றழுங்குமிஃ தறிவாயே
சட்டச் செவிக்குளெழு மக்கிக் கரப்பனது
சற்றுப் பொருக்கையழல் தருமாமே. 520

---

[1] அலமாமணி-புங்கம விதது. துவர்சிகை-கடுக்காய்ப்பபிஞ்சு, பூதம-சடாமாஞ்சில், நார-கல்நார், அயில்-கோரைக்கிழங்கு. [2] அறல்-நீர், தீதலை-தேமல்.

## பொக்கிக்கரப்பன், வெடிகரப்பன், அழுகண்ணிக் கரப்பன், தேமற்கரப்பன், சொறிகரப்பன் இவற்றின் குணங்கள்

பொக்கிக் கரப்பனது மிக்குற் றெழுந்தகுறி
போக்கிச் செழுங்குருதி புலவாகுமே
தொக்கித் தெழுந்தகணி வெப்பித் தெழுந்தகனல்
சுட்டுப் புகைந்ததென வெரிவாகுமே
புக்கிக் கடிந்தவெடி முட்டிச் சுரந்தசொறி
பொத்துக் கரிந்துசெலு முதிர்வாகுமே
தக்கித் தெழுந்திதலை யப்பிப் படர்ந்தசொறி
தட்டிப் பரந்ததழு தணைதேமலே. 521

[1] பம்புகர் ணகத்திலே முன்பெழுங் கரப்பனீர்
பண்புகொண் டிடச்சொறி வதுவாகியே
வெம்பிடுஞ் சுரக்குமே வந்துபின் வலிக்குமே
விண்டுதான் வெறிக்குமே வெடிநாறுமே
நம்பன்முன் னுரைத்ததே கும்பன்பின் னுரைத்ததே
நங்கைமுன் குணத்தையே நவில்வாயே
நிம்பநெய் திலத்திலே யிந்துகெந் தகத்தொடே
நெஞ்சுகந் திறத்துறு மரிதாரமே. 522

[2] பொங்குடங் கணத்தொடே துங்கலிங் கதத்தொடே
புங்கம்வித் தெருக்குமே புகல்சூதமே
சங்குறுங் கணத்தொடே குங்குலும் விதத்தொடே
சண்பகம் விதத்தொடே சயிலேகமே
இங்குளஞ் சமத்தமே யங்குசம் மிடிப்பையே
யிந்தனம் மெரிப்பையே யினிதாகவே
தங்கமுன் னடுப்பிலே வெந்துபின் வடிப்பையே
சஞ்சிவித் திறத்தினேர் சரியாகுமே. 523

செவியிற் கரப்பன் முற்றிற்று.

---

## VI. செவியிற் குட்டம் 8.

சோத்திரத்துறு குட்டமெட்டெனவே யுரைத்தவை சொல்லுவேன்
துஞ்சுநெய்யென வேயி ஊந்து சொறிந்தெ ரிந்து சுருக்கெழும்
காத்தி ரத்துறு தோல தாகிய குட்ட வெண்மை கறுப்பொடே
கட்டு புள்ளி யெரித்த செம்மை கடுப்பு வெவ்விட குட்டமும்

---

[1] நிம்பநெய்-வேப்பெண்ணெய். திலம்-(எள்)நல்லெண்ணெய்.

[2] உடங்கணம்-வெண்காரம், சங்குறுங்கணம்-நாகணம். இங்குளம்-பெருங்காயம். அங்குசம்-வாழை. இதன் கிழங்குச் சாற்றில் சரக்கை அரைத்துக் கலந்து காய்ச்சி வடிக்க.

ஏத்த தோர்கடி குட்ட மெட்டினி லேகி டாதது சருமமு
மெச்சு புள்ளி கடுப்பு வேகமு மச்சு ணங்கு விடங்களாம்
மாத்த லாமொரு நாலு மாமது மாறுகின்ற மருந்துமே
மங்கை பாக னியம்பு மாறது கும்ப தேவன் வழங்குமே. 524

செவியிற்குட்டம் எட்டுவகைப்படும். அவை: சருமகுட்டம், வெண்குட்டம், கருங்குட்டம், புள்ளிக்குட்டம், செங்குட்டம், கடுப்புக்குட்டம், விடகுட்டம், கடிகுட்டம் என்பன. இவற்றுள் சருமம், புள்ளி, கடுப்பு, செம்மை இவை நாலும் அசாத்திய மாவன. ஏனை நாலும் சாத்தியங்களாம்.

## மருத்துவம்

## செவியிற் குட்டம் பலவுக்கும் பாதாளத் தைலம்

[1] செவிமுற்றுற விழுகுட்டம தறவுற்றுரை தெளிநீ
அவைபுற்றல ரியைபுற்றிடு மறிசத்தொழி யதன்வேர்
சிவவெப்பொடு கருடக்கொடி சிறுமத்தொடு கருவேல்
சவையுற்றவே ளறுகுப்புதல் சமுலத்தொடு பகர்வேன். 525

[2] எட்டிக்குல வித்துக்களி நெய்க்கொட்டை கரிசா
லிருகொட்டை குறட்டைப்புத லெரிகுன்றி மஞ்சாடி
கட்டுக்கொடி மத்துப்புலி வட்டத்துதி பருகாற்
கருநொச்சிகொள் மறுநொச்சிகொள் கழல்புங்கொடு வேல்செங்
கொட்டைக்குரு வெட்டிக்குறு மட்டுக்கொள் சரக்கே
குலகுப்பை யரத்தைக்குழு விரத்தத்தொடு தாரம்
வட்டக்குழி வெட்டிப்புட மிட்டுத்தயி லத்தை
வதனத்துறு செவியிற்றட வாய்குட்டமு மாறும் 526

செவியிற்குட்டம் முற்றிற்று

---

## VII. செவியிற்பரு 8

எண்ணிச்செவியிற்புற முற்றெழுபருவறியாய் குணமிருநாலே,
திண்ணத் துடனெழுகுன் றிப்பருவனல் செறிபொக்கியினெடு விரணவேகி,
திண்ணத்துடனெரிபருவத்தொடுகுவை செருமித்துளவெழு சலவேகி,
நண்ணிக்குருதிகொள் பழுவத்தொடுவிழறவ்விப்பருவொடு நவில்வாயே.

அறிவுற்றிடவுரை செயுமப்பருவிணையறியக் குறியிணையறைவேனல், நெறியற்றெழுசலவிரணப் பருவனல் நெரியக்குவை கொளுமொரு நாலும், குறிதப்பியதெனவியல் புற்றறிகுவை குணமுற்றிடுமவை யொருநாலும், செறியிற்பழுதிலையவையைத் தெளிவுறுதளமுற்றுறு திகடெரிவாயே.

---

[1] புற்றலர்-காட்டுக்காளான். சிவவெப்பு-சிவனார்வேம்பு.

[2] கரிசல்-கையாந்தகரை. புலி-வேங்கைச்சிராய். அரத்தைக்குழு-ஈரரத்தை: இரத்தம்-சாதிலிங்கம்.

செவியிற் பரு எட்டு. அவை: குன்றிப்பரு, அனற்பரு, பொக்கிப்பரு, விரணப்பரு, குவைப்பரு, நீர்ப்பரு, குருதிப்பரு, விடப்பரு என்பன. அவற்றுள் நீர்ப்பரு, விரணப்பரு, அனற்பரு குவைப்பரு நாலும் அசாத்தியங்கள்; ஏனைய நாலும் சாத்தியங்கள்.

**மருத்துவம் :**

### தளம் 1

[1] ஒருஞ் செவிப்புறத்து முள்ளும் பருவேகம்
சேரு மதற்குத் தளஞ்செய்—பாரில்வளர்
நற்கொவ்வை நீள்பயிலி நன்முசுட்டை பூமத்து
நெற்பொரி யெட்பொரி நீர்ப்பூலாச்—சொற்பெறு
சித்திரப் பாலையுடன் சீந்திலது நெல்லிமுளி
மத்துநீர் வள்ளி வராகியும்—உத்த
திருநாமத் தாளி சிவந்த பசளி
மருவிய சிற்ரு மணக்கு—விரைபுளியின்
திருநாமத் தாளி சிவந்த பசளி
மருவிய சிற்ரு மணக்கு—விரைபுளியின்
வித்திற் புறத்தொலியு மேவுபசுப்பால் கருங்கல்
உற்றமருந் தாமிவற்றை யொன்றித்துப்—புத்தியுடன்
ஆவெண்ணெய் கூட்டி யரைவழித்துப் பூசினக்கால்
மேவுமதி லெழுந்த வீக்கமும்போம்—பாவையே
ஏரண்ட வெண்ணெய்தனி லிட்டுவெந்து மேற்பூசில்
தீரும்பரு வெனவே செப்பு. 529

### தளம் 2

[2] கற்ருழை யிற்புறந்தோல் கானுங் களியினிலை
வெற்றிலையோ டின்னும் விளம்புவேன்—சுற்றிய
வேலிப் பருத்தி விளாத்தி யகத்தியிலை
சால விவற்றிலொன்று சால்பாக—ஏலும்
பசுமணக்கி னெய்யாற் பதமாய் வறுத்துக்
கசிய வரைத்திடவே கன்னம்—இசையும்
பருவனைத்துந் தீருமெனப் பண்டை முனிவர்
உரைசெய் திறமதனை யோர். 530

### வீரகேசரி

[3]காதிற்பருவிவைமோதித்தெழுமெனிலோ தற்கருவலியுளதாகும்
காவிற் படர்கொடு வேலிக் கடுதிரி மோதச் சயிலவ மொடுகேளாய்
பாதிப் பிறைநுதல் சாதிச் சாரமு நீதிக் கெவுரியு மரிதாரம்
பாஷத் துடனெலி வீரத் தொடுகாஞ் சூதச் சிலைதுரி சொடுகாரம்

---

1 வராகி-நிலப்பனைக்கிழங்கு. 2 கானுங்கள்ளி-இலைக்கள்ளி. பசுமணக்குநெய்-ஆமணக்கெண்ணெய். 3 கடுதிரி-திரிகடுகு, பாஷம்-பாஷாணம்.

தீதற் றிடுதிரு மேனித் தயிர்வெளி சேரப் பிழிவடி யரைசாமம்
தீர்தற் கருபரு வாதைப் படமுன மோர்வுற் றிடுமது வழிபூசு
வேதப் படியர னுர்சொற் படிமலை மீதிற் குறுமுனி யருளாலே
வேதித் திடுமிவையோதிற்குளி கையிம் மேலைத்திசையினுமிலையே.

## செவியிற் சீழ்புழு முதலியவற்றிற்கு மருத்துவம்

எருக்கிலையிற் பழுப்பு நொச்சி வேளை தன்னே
டிஞ்சியுவாய் மூலமுடன் பிரண்டை தம்மில்
நெருக்கிவரு மோரொன்றிற் சாறு முக்கு
நிம்பெண்ணெ யெள்ளிலெண்ணெ யுழக்குக் கூட்டி
மருக்குலவுங் குழன்மடவாய் கடுகு மூன்று
வருமேல மோருள்ளிப் பூடு கஞ்சா
உரைத்ததனில் விதையுடனே கரிய சீர
மொன்றுகழஞ் சரைகரைத்து வடித்தி டாயே. 532

வடித்தவெண்ணெ யிருசெவியில் வார்க்கச் சீழ்போம்
மத்தின்காய் பாவட்டை யுத்த மாணி
தொடுத்தவிவை துளிரிரண்டு முதலைக் கட்டஞ்
சொல்வசம்பு வெள்ளையுள்ளி தோன்றுஞ் சாற்றில்
அடுத்த செவிப் புழுவொழியு மற்றுங் கேண்மி
னுடுதொடா மூலியிலை பூவார் மத்தின்
கடுத்தவிலை யெருக்கிலையிற் பழுத்தல் வேளை
காட்டுமிலை பேய்ப்பீர்க்கி னிலையி னேடே. 533

படரும் வேலிப் பருத்தி யிவையெலாம்
தொடர வோரொன் றெருபிடி தொக்கியே
அடருஞ் சாறு பிழிந்தரி சத்துடன்
கடுகு சுக்கு வசம்புள்ளி காணுமே. 534

கூட்டி யெண்ணெய் குலவிட வெந்துபின்
நாட்டு நற்பதந் தன்னில் வடிப்பிராய்
கேட்கு மூலப் புழுவது கேடுறும்
ஈட்டு மெண்ணெ யிருதுளி விட்டிடே. 535

## VIII. செவியிற்பிளவை 5

செய்ய கர்ணிக மீது வந்திடு பிளவை யைந்து குணங்கள்கேள்
சீழு நீரொடு குருதி குன்றி செறுத்த வாய்வொடு பிளவையைந்
தைய மீதிவை காதி னுட்புறமாகி யேவெடி நீர்வீழு
மரிய ரத்த மிறங்கு மோரெழு நாளி னிற்செய லற்றிடும்
மையல் செய்தன லாயெ ரிந்து சிவந்திடும்புலவு நாறிடும்
வாயமேற்கொளு மான வுச்சி வலிக்கு மேயொடுவு கொள்ளுமே
மெய்யி துண்மைய தாம சாத்திய மென்னமாதுமை கேட்கவே
விமல னுரை செய்த தாமிது மேதி னிக்கொரு கிருபையே. 536

## இரட்சை, காரம்

கிருபை யாக வுரைத்த தாமிது கீறு புள்ளடி கருவியால்
பொருவி லாவனன் மீத ழற்றிடு செவிந ரம்பிலி ரட்சைசெய்
மருவு வெற்றிலையி னீரி லேதுரிசு மத்தி தேயுவிடை வைத்திடு
பெருகி ரட்சைசெய் குறியி னிட்டடு பிளவை யானவவை தீருமே.

முற்கூறிய தைலவகைகள் இந்நோய்க்குப் பொருந்துவனவாம்.

காதுநோய் முற்றிற்று.

---

காதுநோய் நூறில் இங்குக் கூறப்பட்டனவேயன்றி, கழலை 3, சுருட்டு 3, தோல் செவி 3, கறை 3, உண்ணி 3, வெயர் 3, அயர்ச்சி 3 என்னுமிவை பெயர் மட்டும் குறிக்கப்பட்டுள்ள கலி வெண்பா ஒன்று ஈற்றில் காணப்படுகின்றது. அதில் இடையிற் சில அடிகள் சிதைந்து விட்டன போற் றெரிவதாலும் வேறு பயனின்மையாலும் பதிப்பிக்காமல் விடப்பட்டது.

அக் கலிவெண்பாவினீற்றில்;

‘பேரும் குறிக்குணமும் பேணு மவுடதமும்
தீருந்தீ ராததுவுஞ் செய்கைகளும்—பாரிலுள்ளோர்
எல்லார்க்குஞ் சொன்ன னிமயமயி லுக்கிறைவன்
பொல்லாங்கு தீரும் பொருட்டு’

என்றிருத்ததால் கழலை முதலிய பிறவற்றின் குணம் சிகிச்சை முதலியனவும் கூறப்பட்டனவேயாதல்வேண்டும். அவை சிதைந் தொழிந்தன போலும்.

---

## தலைநோய் நிதானம்

### நான்காவது

### மூக்குநோய்

### மூக்கு நீர்ப்பாய்ச்சலின் குணம்

கண்டமேன் முகங்கண் காது கரகரத் தூர்வ தேபோல்
துண்டமேற் றினவு பற்றிச் சொறிந்துதான் சலமும்வீழ்ந்து
மண்டையுங் கனத்து நொந்து வலிமிக வுளதே யாகில்
பண்டுசேர் மூக்கி னீரின் பாய்ச்சலென் றுரைக்க லாமே. 538

### பீனிசத்தின் பொதுக்குணம்

தலைமிக வலிக்கும் நாசி சளிவிழு மொடுவுண் டாகும்
நலிவுறு தும்ம லுண்டாம் நாட்செலில் வரளும் நாசி
மலைவுறத் திரண்டு வீழும் வாயுமே நாற்ற முண்டாம்
பெலமுற மூக்க டைக்கும் பீனிச மென்று தேரே. 539

தலையுங் கனத்து வலிகொண்டு சளிபோ ஞசாற் றிரண்டுவிழும்
அலையு மொடுப்போ லொருகாலு மறுதிப் படவே மாருது
நிலையுங் கெடாது பரிகார நியதிப் படவே செய்துவரில்
தொலையுஞ் சொன்னேம் பீனிசமுஞ் சொல்லுங் கபாலவரட்சியுமே.

ஒடுக்கமா மைய நாடி யொருங்குடன் பக்க நின்றுல்
நடுக்கமாம் பீனி சங்க ஞசிநீர்ப் பாய்ச்ச லுண்டாம்
பிடித்திடு மண்டை சூலை பெருகிடுந் தலைக்க னப்புத்
தடுத்திடு நன்று நெய்யைத தலையிலே தப்பத் தீரும். 541

### நாசி காபீடம்

நன்றிது கன்ன பீட நாளிலே கதுப்ப டைத்துக்
குன்றிபோன் மூளை தன்னிற் குற்றமே பற்றி நின்று
கன்றியே நாசி யாலே கனக்கவே சீழ்தான் வீழ்ந்து
பொன்றிடச் செய்யு மென்று புலவர்வா கடஞ்செய் தாரே. 542

நாசியிற் றசைவ ளர்ந்து நலிவுற வடைக்கு நாசி
மாசுசேர் சீழ்நீர் வீழு மண்டையுங் கனத்து நொந்து
பேசரும் வலியுண் டாகும் பெருகுகண் கதுப்பு நோகும்
நாசிகா பீட மென்று நவின்றனர் கலைவல் லோரே. 543

நாசிரோகம் எண்பத்தாறு என்று இந் நூன்முகத்திற் கூறப்பட்டிருப்பினும், கிடைத்த பிரதிகளில் அப்பகுதி காணப்படவில்லை. அலகுரோகம் கதுப்புரோகம் முதலிய சிலவும் அவ்வாறே காணப்பட்டில. இவையெல்லாம் இறந்தன போலும்.

பலரோகநிதானம் என்னும் தலைப்பின்கீழ், சில பிரதான நோய்களின் பொதுக் குணங்களும், மருத்துவங்களும் கூறப்பட்டிருக்கும் பகுதியிலிருந்தெடுத்து இவற்றை இங்கு சேர்த்திருக்கின்றேம்.

மூக்கு நீர்ப்பாய்ச்சல்; வாதம் முதலியவற்றுல் மூன்றும் தொந்தத்தினுல் ஒன்றும் ஆகப் பிரதானமானவை நான்குவகைப்படும்.

பீனிசம் பதினெட்டு என்று சில மருந்துகளின் தலையுரையிற் குறிக்கப்பட்டுள்ளது. ஆயினும், நீர்ப்பீனிசம், இரத்தப்பீனிசம், சீழ்ப்பீனிசம், சீராய்ப்பீனிசம் எனப் பிரதானமானவை நான்கே. அவை, வாதம் முதலிய முப்பிணிகளின் தொந்த பேதத்தினுல் பல பேதப்பட்டுத் தோன்றும்.

நாசிகாபீடம் மூன்று வகைப்படும் என்ப.

ஏனைய நாசியிற் கரப்பன், கழலை, பரு, பிளவை முதலியவற்றை செவிரோகத்திற் கூறியவாறு பற்றி யுணர்ந்து கொள்க.

**மருத்துவம் :**

### புகை 1

சாதிலிங்கம் வெண்கார மக்க ருவுந்
தகுந்தமுறை யோரொன்று கழஞ்சு மூன்று
நீதிபயி றுரிசுதுத்தங் கழஞ்சோ ரொன்று
நிறைப்படியே மரிசமஞ்ச ளதினிற் பாதி
ஓதியசீ ரகமிரண்டு மதனிற் பாதி
யொன்றுபட நறுக்கியதைப் பொடியதாக்கிச்
சோதிபெறு பஞ்சினிலே சுருட்டி நெய்யிற்
றோய்த்ததனைத் திரிபுகையாய்ச் சூழ்ந்து செய்யே 544

### புகை 2

சூதங் கெந்தகஞ் சொல்லரி தாரம்பின்
சாதி லிங்கந் தகுவெள்ளை யோடபின்
ஓது சங்கு முடிமிரு தாரநோய்
காது வெண்குந் திருக்கமுங் காணுமே. 545

நேரு நற்பசு நெய்யி லரைத்துமே
[1] வீரவாளியிற் பூசி வெயின்முகம்
சேரி டாம லுலர்த்தி யதைத்திரி
ஒரு நெய்யி னனையெரி யூட்டிடே. 546

தோன்று நற்புகை துண்ட மதில்விடுத்
தேன்ற பத்திய நெய்பசுப் பாலுமாம்
ஆன்ற நல்ல முருங்கை யதனிலை
தோன்று காயிவை யாமெனச் சொற்றனர். 547

சொன்ன நற்புகை மூங்கிற் றுளைவழி
மன்ன விட்டு வரன்முறை பத்தியம்
அன்ன தாற்றி யவிழ்த வகையணத்
துன்னு பீனிச மாதி தொலையுமே. 548

### புகை 3

சாதி லிங்கந் தகுமரி தாரமும்
ஒது பூமத் திலையுறு சாற்றெடே.
தீது தீர்திரு மேனியின் சாற்றிலும்
நீதி சேர வரைத்து நிகழ்த்துகேள். 549

சீலை யூட்டித் திரிபசு நெய்யினில்
கோல மாக நனைத்துப் புகைகொள
நாலு பீனிச நாசியி னீர்சியல்
மேலு நாக்கில் வினைகளுந் தீரும். 550

[1] வீரவாளி-ஒருவகைப் பட்டுச்சிலை.

## நசியம்

வெற்றிலைசேர் சாற்றினுடன் மிகுந்தசிற்ரு மணக்கின்னெய்
சொற்றவிவை யோரொன்று சுகம்பெறவே யாழாக்கு
உற்றிவற்றி னேடின்னு முழக்காதண் டைச்சாறு
திற்பலியுஞ் சுக்குமிகச் சேரிரண்டு தான்கழஞ்சே. 551

சேர்த்தடுப்பி லேற்றிவெந்து சேயிழையே நற்பருவம்
பார்த்துவடி சூடான பக்குவத்திற் கர்ப்பூரம்
சீர்த்தகண்டர் ஞாழலுடன் சேருமுறை யேநசியம்
போற்றிவிடின் மாறுமென்பர் புகலுமைந்து பீனிசமே. 552

## நாசிகாபீடத்திற்கு நசியம் 1

வாழைச் சருகு, வாழைப் பழத்தோல், சுரையோடு, உலர்ந்த சுண்ணும்பு இவையெல்லாம் சமனெடை கூட்டிப் பொடி செய்து தண்ணீரிற் கரைத்து நசியமிட நாசிகாபீடம் கரையும். வாழைச் சருகையும் பழத்தோலையும் தனித்தனி சுட்டுச் சாம்பலாக்கிச் சேர்ப்பதுமுண்டு.

வெள்ளைப் பாடாணம் ஒரு பங்கு பூங்காவி இரண்டுபங்கு பொடி செய்து பசுநெய்யிற் குழைத்து நசியமிடக் கரையும்.

## மூக்குநீர்ப்பாய்ச்சலுக்கு நசியம்

சாறடைக் கிழங்கிந் துப்புச் சாதமின் மிளகுசீனி
கூறிய நறுநெய் தம்மிற் கொண்டிடு முலைப்பா லொக்க
வீறதாய் நையத் தட்டி விடுவதே மூக்கி னையம்
சீறிய மூக்கி னீருந் தினவுட னடைப்பும் போமே. 553

## சீந்தில் நெய்

சீந்தில்வட்டுத் தூதுவளை சிவனுர் வேம்பு
சிற்றமல்லி பேர்மல்லி முத்தக் காசு
சாந்தமுறு நிலப்பனைவேர் நிலத்தின் வேம்பு
தாமரையின் வளையநிலக் குமிழ்வேர் சுக்குப்
போந்தவிவை பலமைந்து வீதந் தூக்கிப்
புகறூணி யிருநாழி யாய்வ டித்து
வாய்ந்தபசு நெய்நாழி பாலீர் நாழி
வரன்முறையாய்க் கூட்டியதிற் கராம்பு வாசி. 554

திரிகடுகு வசம்புள்ளி மதுர மேலஞ்
சேருநெல்லி கிளியூற லரந்தை மாஞ்சில்
தருகடக சிங்கியிரு வேலி யோமந்
தக்கோலம் பச்சிலைகச் சோல மின்னம்

மருவுமிரு சீர்கடுகு ரோணி கோட்ட
மதித்தகுரா சானியிவை சமனுய்த் தூக்கி
வருமுறையே யரைத்துவெந்து வடித்து நக்கி
வார்மூக்கிற் பீனிசங்கண் மாறு மன்றே. 555

## சீந்திலெண்ணெய்

சீந்தில்சிறு வழுதலைவேர் கமல மூலஞ்
சிவன்வேம்பு நிலவேம்பு சாம்பல் வாழை
போந்தவிரு முட்டியுடன் முத்தக் காசு
பொற்காணி சீதேவி தூது தாலஞ்
சேர்ந்தபனை பலமைந்து வகைக்குக் கூட்டிச்
செப்பியமுக் குறுணிபயங் குறுணியாக்கி
நேர்ந்துவடித் திடுபசுப்பால் குறுணி யாவி
னெய்திலத்தி னெய்வகைக் கொன்றரையாய்ச் சேரே.

வேம்பினது பட்டையினிற் சாறுதானும்
விளம்புபடி யரைவிட்டு மேலுங் கற்கம்
நாம்புகலுந் திரிகடுகு கோட்ட மேல
நவிலரத்தை வசுவாசி கடுகு ரோணி
ஆம்பச்சை கச்சோலங் கடக சிங்கி
யதிமதுர மிலவங்க முள்ளி நோயிற்
போம்பசிய தக்கோலங் கண்டில் வெண்ணெய்
பொருந்துசந்த மிருவேலி யிலாமிச் சோடே. 557

நற்சீர கம்வசம்பு கிராம்பு மல்லி
நாடுமிவை வகைக்கைந்து கழஞ்சு தூக்கிச்
சொற்பாவு முறைதவரு வகையி டித்துத்
தூவியெண்ணெய் மெழுகுபதம் வடித்து நக்கிப்
பிற்பாடு தலைதனிலும் வைத்து மூன்ருய்ப்
பேசுநாட் கொருமுழுக்கு முழுகு வாயேல்
விற்பாவு நுதன்மடவாய் பீனி சங்கள்
வெருண்டோடிப் போகுமென விளம்பினரே. 558

சீந்தில் நெய், சீந்திலெண்ணெய் இரண்டும் வடித்தபின் குங்குமப்பூ, கோரோசனை வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் பொடித்துத் தூவுக.

## குண்டலாதித் தைலம்

புங்கழுஞ்சி தூதுவளை முருங்கை நொச்சி
பூனையின்றன் கழற்சியுத்தா மாணி யோடு
சங்கிவைவேர் பலமெட்டுத் தூணி நீரிற்
றகுந்தபடி யெட்டொன்ருய்க் குறுக்கி வாகி

மங்கைநல்லாய் நொச்சிகொடிக் கழற்சி யுத்த
மாகாணி தழுதாழை யாடா தோடை
இங்கிவற்றி னெடுகரந்தை முருக்கு மஞ்ச
ளிஞ்சிசங்கங் குப்பியொடு கிரந்தி நாயன். 559

பருத்திநிம்பங் கரிசாலை யுற்ற தேசிப்
பழத்தினெடு நற்றேடம் பழமு மல்லால்
விரித்தகொடி மல்லிகையும் புங்கி வற்றின்
மிகுசாறு நானுழி யெள்ளி லெண்ணெய்
உரைத்தபடி நானுழி விரவிக் காண்ட
முறவிடுத்துத் தீமுட்டி யூறிப் பின்னும்
உரைத்தகுலக் காயிருசீர் கிராம்பு கோட்ட
முறுகடுகு வெளுத்தல் கைப்புத் தூப மோமம், 560

தாரமுடன் மரமஞ்சள் பூத வர்க்கந்
தருமரத்தை சீதாரி பலங்கால் வீதம்
வீரமுறு துரிசுதுத்தங் கழஞ்சொவ் வொன்று
மிகுமதுர மேலமில வங்க மேகர்ப்
பூரமொடு திப்பிலியுங் கழஞ்சி ரண்டு
புகன்மிளகு மஞ்சளுள்ளி யிவற்றி னேடு
சாரமுறு சுக்கிரண்டு பலமே கூட்டித்
தகர்த்திடித்துக் கரைத்துவடி பதந்தப் பாதே. 561

வடித்துறுகோ ரோசனையும் புழுகு சட்டம்
வகைக்கிரண்டு கழஞ்சிட்டுக் கலக்கி வைத்தே
எடுத்துமுழு கிடநசியம் பண்ண மூக்கி
லெழுந்தநோய் பீனிசமு முகத்தின் மீதே
அடுத்தவரு பலநோயுஞ் சிரத்து ரோக
மானவையுந் தீருமெனச் சிந்தர் வேதம்
படித்துணர்ந்த வறிஞருரை செய்தார் முன்னம்
பழகுதமிழ் வளமுணர்ந்த பரிச தாமே. 562

## சஞ்சீவித் தைலம்

உயிர்தருஞ் சீந்திலது தண்டுடன் சிறுமட்டி
யுற்றவேர்த் தொலிதானுமே
யுறுதியுட னைம்பது பலமெடுத் திருதூணி
யூறுநீர் குறுணியாக்கிச்
செயிரறுந் திலவெண்ணெய் பசுவினது பாலுமே
சேருமிரு மூன்றுநாழி
செப்புதா மரைவளைய மிருவேலி யிலாமிச்சு
செய்யநன் னரி தானும்

துயரறும் படியதா யிருபது பலங்கொண்டு
சுத்தநீர் தூணி விட்டுத்
தூய்மையுட ணெண்ணுழியாய்வர வடித்ததைச்
சொல்லுமுறை தான்கூட்டியே
பயிருறுந் தக்கோல மேலமில வங்கமும்
பகர்மதுர மொடுகோட்டமும்
பச்சைநற் சந்தனங் கச்சோல மஞ்சிட்டி
பலைமூன்று தேவதாரம். 563

தாரமொடு மேதைமா மேதையுந் தகரமுந்
தகுமாஞ்சில் கடுகுரோணி
சால்புறு மரத்தைசெவ் வள்ளிகார் கோலோடு
சார்வசம்பொடு செவ்வியம்
நேர்மைபெற வோரொன்று பலமரைய தாய்மிக
நிறுத்தே யிடித்ததூளை
நியதிபெற நன்ரு யரைத்துக் கலக்கியே
நீடனலில் வெந்துசாலச்
சீர்மைபெறு மெழுகுபத மதிலே வடித்துடன்
சேர்பன்னை ஞாழருனும்
செய்யவெறி யுறுபுழுகு சட்டமும் மேற்பொடிகள்
சேர்த்தே யடைத்ததைலம்
கூர்மையுட னேமுழுகு நசியமிடு செவியிலிட
கொண்டபல மண்டை ரோகங்
குறையாத செவிரோக நாசிகா பீடமுங்
குருதிவிழ லிவைதீருமே. 564

நாசி தன்னிடை நாடுபல் ரோகமும்
ஓசை சேர்செவி யுற்ற செவிடதும்
தேசு லாம்விழி சேரும் பிணிகளும்
வேசி யாசைய தென்ன விலகுமே. 565

## தாமரை வளைய எண்ணெய்

[1] திருமேவு மொருமூலி தனிலார வருமூல மொடுகாணியும்
கரிசாலை யரிநாம முறுமூலி யொடுதேசி வநசாறுமே
தருகோவி னுறுபாலு மிளகுநீரு மிவைசால விருநாழியாய்
ஒருவாம லொருதாளி தனிலார விடுமேலு முறுமாறுகேள். 566

[2] இருவேலி யொடுதூது மிகுநாரி தகுகோரை சிலையாரமே
மருமேவு முசிர்தால குமிழ்கோலி யுறுமேக விதழ்மூலியே
திருநாக வலிவேரு மசுவாதி யிவையோடு மினுமோதவே
செருமேவு மயில்போலும் விழிமாது நினைவாக விதுகேளுமே. 567

---

[1] திருமேவுமொருமூலி-தாமரை. காணி-பொன்னுங்காணி. அரிநாம முறுமூலி-விட்டுணுகிரந்தி. தேசி-எலுமிச்சம்பழம்.

[2] சிலையாரம்-செங்கழுநீர்க் கிழங்கு. உசிர்-இலாமிச்சு, தாலகுமிழ்-நிலக்குமிழ் கோலி-இலந்தை. ஏகவிதழ்மூலி-ஒரிதழ்த்தாமரை. நாகவலி வெற்றிலை. அசுவாதி-அமுக்குராக் கிழங்கு.

இயங்குசிறு குறிஞ்சிநொச்சி வெட்டி வேரு
மீஞ்சினது குருகுமற்றை வேர்க ளெல்லாம்
நயம்பெறவே பலமைந்து தூணி நீரி
ஞுழி யுறவெரித்துப் பிழிந்து விட்டே
வயங்கொளுநல் லெள்ளெண்ணெய் நான்கு நாழி
மணமிகுத்த சந்தனமோர் பலம ரைத்துக்
கயம்பெறுசீ ரகமோடு மிளகு மல்லி
கார்புகா வரிசிகுலக் காய்கி ராம்பே. 568

வாலுளுவை வெட்பாலே தேவ தாரு
மதித்தசத குப்பையில வங்க நற்சீர்
ஏலமொடு தான்றிக்காய் கோட்ட மின்ன
மியைந்தவத்தித் திப்பிலியுங் கழஞ்சு நாலு
சீலமுட னிடிபொடித்துத் தூவி யெண்ணெய்
சேர்ந்தமெழு கெனும்பதத்தில் வடித்துச் செய்ய
கோலமுறு தலையில் வைத்து நசியம் பண்ணிக்
கொள்ளவரு பீனிசங்கள் குலைந்து போமே. 569

## நிர்க்குண்டித் தைலம்

நல்ல சந்தமிரு வேலி நாரியெலுமிச்சை தோடையுசிர் கோரையும்
வல்ல மஞ்ஞையிவை வேர்க டேடிவழு வாம லேயறு பலம்பயம்
சொல்லுதூணிவிடுநாலிலொன் றுவடி யெள்ளிலெண்ணெய்விடு சொன்னவா
றல்லவென் றகுழன் முல்லைவென்ற நகையெல்லைவென் றவிழிவல்லியே.

தெங்குறு பாலு மாவின் சேர்பய நொச்சி தன்னிற்
றங்கிய சாற்றி னேடு சம்பீரப் புளியு மெல்லாம்
இங்கிதஞ் சேரு மானே யிவையெண்ணெ யளவுகூட்டி
மங்கல நெல்லி சுக்கு மரமஞ்சள் கிராம்பு வாசி. 571

கோட்ட மரத்தை வாலுளுவை கூறுமாஞ்சில் கச்சோலம்
கூட்டுக் கிசைந்த சாதிக்காய் கோல மிளகு சிறுநாகம்
நாட்டுங் கண்டில் வெண்ணெயதி மதுரம் வெட்டியுசிரி வைகள்
ஏட்டிற் குறித்தபடி யிடித்தே யெரித்துப் பதத்தில்வடி கேண்மின், 572

வெறிமிகுந்த பன்னையோடு வேண்டு ஞாழல் கூறபின்
குறிமிகுந்த சுரபி மேவு சினையு மின்ன கூட்டியே
நறியவிந்த வெண்ணெய் தேய்த்து முழுகு நாசி யோடுரை
அறியுமந்த மூலமுள்ள மேவி டுத்தி யறிவுளாய். 573

புசித்துளும் பத்தி யந்தான் போற்றிடப் பீனி சங்கள்
கசித்திடுங் கபால வேர்வை கடியநீர்ப் பாய்ச்ச லாதி
பசித்தவர்க் கீயா துண்ணும் பாவியோர் செல்வமென்ன
நசித்திடு மென்று வேத நவின்றமா முனிவன் சொன்னான். 574

## வெற்றிலைச் சாற்றிலெண்ணெய்

நாகவல்லி யிற்சாறு நவின்முசுக்கை யிரவுள்ளி
சாகமுறு கைத்தகரை தக்ககருப் பூரவல்லி
போகுநெல்லிக் காயினுடன் புகல்சாறு நாழியிரண்
டாகவிடுத் தெள்ளிலெண்ணெ யாமதுவு மவ்வளவே. 575

நற்கபிலை யுற்றபய நானுழி நன்மிரியல்
உற்றவித்த நீரதுவு மோதுமிரு நாழியதாய்
வெற்றியுட னேகலந்து வேம்பாடல் செவ்வள்ளி
குற்றமறு நன்மதுரங் கூறுகடு மாயக்காய். 576

கைப்பினெடு மேவுகின்ற களிப்பாக்கு நல்வெளுத்தல்
செப்பிருசீ ருற்றதொரு சிவந்தசந்து சாதியின்காய்
தப்பறவொன் றேயாறு தருகழஞ்சு தாங்கூட்டி
ஒப்பவடி துண்டமதி லுறுபன்னோ யொழிந்திடுமே. 577

## ஆடுதின்னாப்பாலை யெண்ணெய்

ஆடுதின்னாப் பாலையிலைச் சாறு நாழி
யதனோடு வெள்ளறுகுச் சாறு நாழி
நாடுகவெற் றிலைச்சாறு தானு நாழி
நற்றேங்காய்ப் பாலும்வெள் ளாட்டின் பாலும்
தேடுகநீ யெலுமிச்சம் பழத்தின் சாறுஞ்
சிறக்கவகைக் கொருநாழி சேர்த்துப் பின்னும்
பீடுறுநல் லெண்ணெயொரு நாழி கூட்டிப்
பெருத்தவிலா மிச்சையிரு வேலி கோரை. 578

குங்குமத்தின் மலர்வாசி தான்றிகுள விந்தங்
குக்கில்கிளி யூறலர வின்மலரு மஞ்சள்
அங்குறுகற் கடகசிங்சி தேவதரு மோத
மரத்தையில வங்கமல ரேலமொடு சீரம்
தங்குமர மஞ்சள்விழல் கொத்தமல்லி யோடு
சாற்றியநல் வாலுளுவை குங்குமத்தின் பட்டை
இங்கிவையொன் றெருகழஞ்சு கரைத்துவடி மூழ்கி
லிடரான பீனிசநீர்ப் பாய்ச்சிலிவை போமே. 579

## மிளகெண்ணெய்

ஓதிய பீனி சங்க ளூற்றநீர்ப் பாய்ச்ச லோடு
தீதுசேர் நாசி பீடந் தீர்ந்திடு மாறு கேண்மின்
சாதியின் காய்வெட் பாலை தகுமுறை கழஞ்சு நான்கு
மேதகு மவினி ரண்டு மென்மையாய்ப் பொடித்துக்கொள்ளே.

வெய்யநன் மிளகு நாலு சிறங்கையொன் றிரண்ட தாகச்
செய்துநல் லெண்ணெய் நாழி சேர்த்துமண் கலயந்தன்னிற்
பெய்துசில் லிட்டு மூடிப் பேணிமண் சீலை நன்ருய்ச்
செய்துநெல் லவிக்கும் பாண்டஞ் சேர்த்ததை யவித்திடாயே. 581

நெல்லவிந் திட்ட பின்னர் நீக்கியேழ் முறைவ ழாது
சொல்லுமிவ் வண்ணமாகத் தொடர்ந்த வித்தெடுத்த வெண்ணெய்
முல்லைவெண் ணகையாய் தேய்த்து முழுகிட நசியம் பண்ண
இல்லையென் றுரைத்தார் முன்னே யியம்பிய நோய்க டாமே. 582

## கொதியெண்ணெய்

சீந்திநில வேம்புசிறு கீரை முத்தஞ்
சிற்றமட்டி தூதுவளை தேட்கொ டுக்கி
போந்தவட்டு நன்னரி யசுவ கெந்தி
பொருந்தியவோ ரிதழ்க்கஞ்சம் புகலும் வேர்கள்
வாய்ந்தவிர ணரியிரு சீர மேலம்
மதுரமில வங்கமிந்துப் பீர வுள்ளி
கூர்ந்தநறு நெய்யுரிநல் லெண்ணெய் நாழி
கொதிப்பிக்க நீர்ப்பாய்ச்சல் குலைந்து போமே. 583

## நாசியிலிருந்து இரத்தம் விழுதலுக்கு

வெள்ளாட் டின்பால் சர்க்கரையு மிகவே கலந்து தேனுடனே
அள்ளி மூக்கி லிடத்தீரு மாநெய் பிரமி யிலைச்சாறு
மெள்ள வெந்து தாளுள்ளி வேண்டுந் தேனி னுடன்கொள்ளக்
கள்ள மான மூக்கிரத்தங் கழன்று போகுங் காரிகையே. 584

மாதுளம்பூ, வெள்ளுள்ளி, மாங்கொட்டைப்பருப்பு, வெள்ளறுகு, இவற்றை அரைத்துப் பசுவின் பாலும் நெய்யுங் கலந்து காய்ச்சி வடித்து நசியமிட இரத்தம் விழுதல் பீனிசவரட்சி இவை தீரும்.

## கால பீனிசத்தின் குணம்

அல்லினின் மிகுந்து தோன்றி யஃகிடும் பகலிற் றும்மல்
சொல்லிய மூக்கி னுவிற் சுரந்துநீர் மிகுந்து காணும்
பல்லெயி றுடனேங் கண்ணும் பசபசத் தூருங் காலஞ்
செல்லினு முதல்வ ரண்டு சேர்ந்திடு மிருமலிளை. 585

## மருத்துவம்

### நொச்சியெண்ணெய்

அஞ்சிலை நொச்சிச் சாறு மாமணக் கதனி னெய்யும்
மிஞ்சிடா தொவ்வோர் நாழி வேண்டெருக் கிலையி னற்பால்
அஞ்சிடா தரைச்சி றங்கை யவற்றுட னிருசீ ருள்ளி
வஞ்சியே துரிசு துத்தம் வசம்புமா மலகக் கெந்தி. 586

இவையுடன் சுரைக்காய்க் கெந்தி யியல்பிலாப் பழத்தின் கெந்தி
அவையெலாஞ் சமனுய்க் கூட்டி யஞ்சிலை நொச்சிச் சாற்ருல்
திவமுற வரைத்துக் காய்ச்சி வடித்துற நசியஞ் செய்தே
கவையுடன் முழுக மூவாருன பீனிசங்கள் போமே. 587

### கபாலபீனிசத்தின் குணம்

தலையிடை வலித்துக் குத்துஞ் சாற்றிய விழியி னீரும்
அலைவுறக் குத்தி வீழு மங்கிபோல் வயிற ழற்றும்
வலுவறு முடம்பு மூளை வரட்சியு மதிக மாகும்
சொலுமண மதனி னேடு சுவையதுந் தோன்ரு தென்னே. 588

பீனிசம் முதலிய மூக்குநோய்களுக்கெல்லாம் மூளைநோய் செவிரோகங்களிற் கூறிய சிகிச்சைகள் பொருந்துவனவாம்.

நாசிரோகம் முற்றிற்று.

---

## தலைநோய் நிதானம்

ஐந்தாவது

### நயனரோகம்—66

சீர்மேவு நதிமதியும் பொதியுந் தூய
செஞ்சடைநஞ் சுடைகண்டன் றிருப்பா கஞ்சேர்
வார்மேவு களபமுலை மலைமான் கேட்ப
வண்மைபெற வுரைத்தமணி வாக டத்தைப்
பார்மேவு மரசர்குல திலக மான
பரராச சேகரன்மால் பருதி யேந்தி
ஏர்மேவு முலகுபுரந் தருளு நாளி
லிசைத்தனனை கரக்கரியை யிறைஞ்சலுற்றே. 589

தலம்புகழுஞ் சித்தவே தத்தின் முத்தி
தரும்பரம னுரைத்தருளுந் தகைமை யாலே
நலம்புனையு நயனவிதி மதியிற் றெள்ளி
நாவாணி யுரைப்பதன்றி நாமே யாமோ
விலம்பனைய நுதல்விழியாய் மொழியா நிற்கில்
விழியினிற்ருெண் ணூற்ருறு வியாதி தோன்றும்
புலன்கொளவை பகுத்துரைக்கி னிமையின் மீது
பொருந்துவன விருபத்தே ழிருந்த நோயே. 590

வெண்மணியிற் ருேன்றுபிணி பதினு ருகும்
விளங்குகரு மணியதிலெண் ணைந்தி னேடு
நண்ணுமிரண் டுள்ளிமையிற் பதின்மூன் ருகு
நன்குவிரித் திவற்றைநனி யுரைக்க வேண்டில்

கண்ணுறுசன் னிவாதபித்த காச நீல
காசஞ்சேற் பனகாச மத்தி கோபம்
பண்ணரிய வானெடுக்கண் கட்டி காசம்
பகருஞ்செவ் வரிசிவப்புப் படல மாமே. 591

சுக்கிரன்செஞ் சுடரதிமாங் கிஷம்பு கைச்சல்
சொருகண்சுற் றுக்குலேதல் சொறிகண் பில்லம்
மிக்கசுரோ ணிதமிழிக ணெழுச்சி பீளை
மிகுத்தசுரு ளுயர்ச்சிமுட மயிரெ ழும்பூ
நெக்குறுகண் புறுணியிமைக் குழிவு சுற்று
நீர்விழுத னேத்திரவாய் வந்தி சேர்மா
லைக்கணந்தி மாலையவி கண்மா சுக்க
ணும்விழிப்பி னுள்வலிப்பென் றறைவர் மாதோ. 592

விரிவுகண்சந் திரகாலன் குலாவு கின்ற
விழியடைசு மாங்ஷங்கட் கட்டி யுள்ளே
சொருகுவிழி சிம்புறுசண் ணெடுகண் காச
சொல்வரியோ டிமைப்புடைப்பாஞ் சுருங்கு கண்சேர்
எரிவுகண்மாங் கிஷவளர்ச்சி யோடு கண்ணே
விரண்டுகுவ ளையிலுமணி வளர்ச்சி வெண்மா
சுரியகரு மணிநெரிவு செங்க லங்க
லொடுக்கண்சதை யழுகல்பற்ப ரோக மாமே. 593

கருதிரண காசமுட னேம லங்கு
கண்ணுழைவு கண்திமிர காச மென்னச்
ரு வுமிவை யன்றியுநின் றவையும் பின்னர்ச்
சாற்றுவமிங் கேற்றகுணந் தானே தென்னில்
மருவுசன்னி வாதகா சத்தி னேடே
வருதிமிர காசநெருப் புரத்தஞ் செம்பூர்
பொருவுமயி லிறகின்கண் போன்று பொன்மை
புகும்பித்த காசமது புகலுங் காலே 594

இசைந்திடுசுற் றுப்புகைந்து வெண்மை யாகி
யிமையுதிரிற் சிலேற்பனகா சந்தா னெங்கும்
அசைந்துபிறை தானடுக்குச் சட்டி போல
வதுபலவாய்த் தோன்றல்விளக் காதித் தன்போல்
பிசைந்திடுசந் திரகாச மெழுத்தைப் பார்த்துப்
பின்புமனி தரைப்பார்க்கி லிருளாய்த் தோன்றும்
தசைந்தவொட்டுக் கண்ணீரும் பீளை தானுந்
தருமொடுக்கண் குணமினிமேற் சாற்று வோமே. 595

சாற்றியகண் மணிகுவளை புருவ மூக்குத்
தண்டுவலித் துச்சிவந்து தண்ணீர் பாயும்
ஏற்றிடிமை நாடோறுஞ் சுருங்குங் கண்டா
யிருங்குவளை மணிவளர்ச்சி யியம்புங் காலை
ஊற்றமிகு நீர்வடிந்து மேலே பார்க்க
வொண்ணாது கண்ணின்மணி யுள்ளே துன்னும்
மாற்றுமைவு கண்ணுவ துள்ளே பொன்றி
வலிக்குமினி மலங்குகண்ணின் வரவு கேளே. 596

கேளிரவி லிரண்டிமையுஞ் செம்மி விம்மிக்
கிளர்ந்துபக னீர்ததும்பிக் கிடந்து வீழும்
வாளிரண காசமது குளிர்ந்து கண்ணீர்
வழிந்தூர்ந்து வருமெனவே மதிக்கலாகும்
நீளியவுள் ளிமைவிளிம்பி லுரோமந் தோன்றி
நின்று சுருண் டேகிடந்து நெரிச லென்னக்
[1] காளவிழி யிற்றழும்பு காட்டு மீது
கருதுமுட மயிரெனவே கணிக்க லாமே. 597

இயம்பிடுகிற் கருமையாதா நீல காச
மேற்றவலை கட்டினபோ லிருக்கு மாகில்
பயம்பொருகண் கட்டிகா சமதா மீதே
பசாடுபடர்ந் திடுமதுவே படல மாகும்
நயம்புனையுஞ் செவ்வரிசெவ் வரியதாகு
நவிலுமதி மாங்கிஷமாங் கிஷவ ளர்ச்சி
சயம்புனைவேல் விழியாய்நீர் குத்திப் பாய்த
றயங்குசுற்று நீர்விழுத ருன தாமே. 598

ஆனவிழி சிவப்படைசு சிவப்ப தாகு
மனவரதம் புரள்வதுகண் புறுணி யப்பால்
ஈனமுறச் சொறிதல்சொறி கண்ணும் புண்ணு
யிமையிழித லிழிகணென வியம்ப லாகும்
ஆனவிழி யுட்சொருகல் சொருகு கண்ணு
மருவெரிக ணெரிப்பதந்தி மாலை யாவ
தூனமுற வருமந்தி மாலை தோன்று
துறுமாலைக் கண்ணிருளி னுறத்தோன் ருதே. 599

புண்ணுகி விரிவதுவே விரிக ணுகும்
புகைவதுறல் புகைச்சலெழும் பூவ தாவ
துண்ணுடுங் கருவிழியிற் பூவாய்த் தோன்ற
லோங்கியவெள் ளையிலெழுத லெழுச்சி யாகும்

---

[1] காளவிழி-கருவிழி.

கண்ணுர வவிதலவி கண்ணும் பில்லங்
கருதுமிமை யடியதனிற் கனத்துப் பைபோல்
வெண்ணுர மிகுமத்தி கோபஞ் சுத்த
வெண்மையதாய் நோமிகுந்து விளைந்த தாமே. 600

உள்ளிமை மடித்துப் பார்க்கி லுறத்தசை வளர்ந்து செம்மை
கொள்ளுமாந் தளிரிற்காட்டுங் கொடியதோர் பற்பரோகம்
நள்ளிமைக் குழிவுதனே யிமைக்குழிவாகு நாளும்
கள்ளவேல் விழியாய் வீக்கங் கண்காச மேறி வீங்கும். 601

ஏறுசெங் கலங்கல் செந்நீரிழிகுதன் மணியி னூடே
கீறுதல் காணுமாகி னெரிவெனக் கிளத்தலாகும்
ஊறுநீ ரமுகண் ணுகுமிமைகள்சிம் புறுதருனே
கூறுசிம் புறுகண்ணுகுங் குளிர்வது குலாவுகண்ணே. 602

## மருத்துவம்
## படிக உருண்டை

குளிர்பளிங்கோ டதிமதுரஞ் சங்கு நீறு
[1] குபேரனுப்புக் கோமருப்புக் குலவுஞ் சந்தம்
ஒளிருமனோ சிலைசமம்பி னுதிர வேங்கை
யுரைககுமுருக் கிவையிலைச்சா றூற்றி யூற்றி
நளிர்மதிய வதனியரைத் துண்டை யாக்கி
[2] நகிலமுதந் தனிலுரைத்து நாட்டத் திட்டால்
மிளிர்படல மவையனைத்தும் போகு மென்று
விளம்பினர் சித்தர்மறை யுணர்ந்த மேலோர். 603

## இளநீர்க் குழம்பு

செவ்விளநீர் திறந்தூற்றிப் பொன்னுங் காணி
சிறுகீரை கைத்தகரை சிறந்த வேரை
ஒவ்வோர்பிடி யிடித்திரண்டு நாழி நீர்வார்த்
துழக்காக்கிக் காய்ந்தவிள நீரி லூற்றிச்
செவ்வியந்திப் பிலிமதுர மிளகு கோட்டஞ்
சேரவரைத் தேயழவி வடித்துக் காய்ச்சிக்
கவ்வுபச்சைக் கருப்பூரந் துரிசு துத்தங்
கலந்தகுழம் பிடவிழிநோய் கழன்று போமே. 604

## இளநீர்க் குழம்பு

சீருறு கண்ணிற் சேருநோய் பலவும்
தீருநற் குழம்பு செப்புதுங் கேண்மின்
பொன்னுங் காணியொடு புகல்சிறு கீரை
மன்னிரு வேரும வருதிரி பலையிற்

---

[1] குமேரனுப்பு-இந்துப்பு. [2] நகிலமுதம்-முலைப்பால்.

தொலியிவை வகைக்குச் சொல்லு மோர்பலம்
மருவுறு சந்தன மதுரந் தேவ
தருமர மஞ்சள் கருதுசெண் பகத்தின்
முகிழிரு வேலி தகுமிலா மிச்சில
வங்கங் கோட்டஞ் செங்கழு நீரிற்
கிழங்கொடு தகரம் வழங்குமுக் கழஞ்சு
குறைவற விவையெலாங் கூட்டி யிடித்து
மறுவறு மிளநீர் வாரொரு குறுணி
பாதியாய் வற்றப் பண்புட னெரித்துக்
கோதினை யகற்றிக் கொண்டொரு பானையிற்
பெய்துநற் பாகாய்ப் பெட்புடன் காய்ச்சிக்
கோரையிற் பற்றக் கூறிய பதத்தில்
தால மொன்றினிற் றண்ணீர் வார்த்ததன்
மேலொரு தால மேவுற வைத்தே
இறக்கிய குழம்பினை யிதிலே விட்டுத்
திறம்பட வாற்றிச் சேர்க்கு மருந்து
துத்தந் துரிசு சொல்லுங் கடனுரை
பெற்றவி ராஞ்சனம் பீத ரோகிணி
மற்றிவை யெல்லாம் வகையரைக் கழஞ்சு
துளிதமா யிடித்துத் தூவிநற் குழம்பிற்
களிமயிற் சாயல் காட்டுநன் மாதே
அன்னதோர் குழம்பை யம்மியி லரைத்துப்
பின்னொரு கலய மன்னவே பெய்து
மேலொரு கலயமேலே வைத்துக்
கோற்றேன் விட்டுக் குழம்புறத் தேய்த்து
மேற்றான் வழித்தெடு மேலுங் கூறுவன்
வைத்தவிக் குழம்பு வருகழஞ் சினுக்குச்
சுத்தநற் பச்சைக் கர்ப்புரம் பணவெடை
பொடித்துமத் தித்தே யடைத்திடு கொம்புச்
சிமிழிலோர் துடுப்பா லமைவுற வெடுத்து
விழியி லெழுத வொழியும் பிணிகேள்
புகைச்சல்வெள் ளெழுத்துப் பொருதுநீர்ப் பாய்ச்சல்
மிகுத்திடு மெரிச்சல் வதத்திடு நீல
திமிர மெழுச்சி சேர்பல பிணியும்
கதிரைநன் னகர்வாழ் கதிர்வேன் முருகன்
பதமலர் நாளும் பணிந்து போற்றும்
அன்பினோர்க் குற்ற வன்பெரும் பவநோய்
தீர்ந்திடு மாறுபோற் றேய்ந்திடு மென்று
தெள்ளுசெந் தமிழின் றீஞ்சுவை தேரும்
அகத்திய முனிவ னருளின்
வகுத்துரை செய்த வாகடங் கூறுமே. 605

## இளநீர்க் குழம்பு 3.

திருவுறு மரமஞ்ச டிரிபலை யிவையோடு
மருவுறு [1] நல்லாரம் வகைவகை பலமொன்று
பருகுறு மிளநீர்சொற் படிமுறை யெட்டொன்ருய்
வருமுறை வடிபின்னும் வற்றிடு பாகானல் 606

பாகதி னிலவுப்பப் பன்னிய கர்ப்பூரம்
வாகுட னிவைதூவி வருமுறை தேனேடு
போகுற மத்தித்துப் புரிவிழி யதிநோய்கள்.
ஏகிட முன்போலே யெழுதுவை யியல்பாமே 607

## இளநீர்க் குழம்பு 4.

சந்தன நெல்லி கோட்டஞ் சண்பகங் கிராம்பு[2] சில்லி
தந்தவே ருடனற் கோரோ சனையிலா மிச்சுப் பொன்னின்
அந்தமாங் காணி நீர்ப்பொ ருவரை யரும்பு நேராய்
வந்தசெவ் விளநீர் தன்னி லரைத்துற வடித்துக் கொள்ளே.

உய்யவே வடித்திரண்டு முறைவெயி லுற்ருன் மற்று
நெய்யிலே விட்டுக் காய்ச்சி யிளஞ்சாந்துப் பதமே நேர்ந்தால்
பையவே யிறக்கிக் கண்ணிற் பரிந்திடப் பரிநீர்ப் பாய்ச்சல்
செய்யகண் புகைச்ச நீரச் செயுமிள நீர்க்கு ழம்பே. 609

## துத்த உருண்டை

துத்தமுடன் றுரிசுவெண் கலந்த ராவண்
[3] சுரிமுகஞ்சு ணும்புக்க லிவற்றின் முன்னே
வைத்தவிரு மருந்துமொவ்வொன் றிரண்டு மாவாய்
மற்றவையொவ் வொருமாவாய் வகுத்துக் கூட்டிச்
சித்தமுற முருக்கிலைச்சாற் றரைத்தே யுண்டை
சேர்த்தச்சாற் றுரைத்துவிழி தீட்டு வீரேல்
முத்தனைய நகைமானே கண்ணின் மேவி
மொய்த்தெழுந்த பிணியனைத்து முரிந்து போமே. 610

## கண்கோபத்திற்குப் பொடி

வில்வம்பிஞ் சொடுபுளியம் பிஞ்சு சுக்கு
மிளகுறுதிப் பிலிசரியாய் வேண்டிக் கொண்டு
பல்லத்தை நிகர்விழியாய் பொடிய தாக்கிப்
பரிவுறுமஞ் சனக்கோலிற் பாலிற் ருேய்த்து
மெல்லத்தன் விழியதனி லெழுது வீரேன்
மிகுகோப மாறுமென விளம்பி ஞர்முன்
மல்லற்றந் திரவிதியில் வல்ல ராகி
மருவிய சித்தர் மறை மகிமை யோரே. 611

---

[1] நல்லாரம்-நற்சந்தனம். [2] சில்லி-சிறுகிரை. [3] சுரிமுகம்-சங்கு.

### கண்படுவனுக்குச் சுரசம்

சிற்று மணக்கு முசுமுசுக்கை சேருங் குன்றி மணிக்கொழுந்து
வற்று முலைப்பா றனிலூட்டி மடியிற் பொதிந்து பிழிவீரேல்
பற்றுக் கண்ணிற்படுவனெலாம் பகலோன் முன்னர்ப் பனியெனவே
அற்றேயழகு தருமெனவே யறைந்தார் வேதமறிந்தோரே. 612

### தாம்பிராதி மாத்திரை

[1]கஞ்சமுடன் றும்பிரம் வெண் [2] டரள மிப்பி
[3] கம்பினெடு செம்பவளங் கபாலந் துத்தம்
அஞ்சனக்கல் [4] பரிப்பல் [5] வேசரிப்பல் [6] மாய
னவதாரத் தோன்கோடு மானைக் கோடும்
குஞ்சரப்பல் [7] லுழுவையுகி [8] ரிரலைக் கோடு
[9] குக்கிடத்தி னுரந்துரிசு குளத்தி னேர
லுஞ்சமஞ்சம் பிரச்சாற்றி லரைத்து ரைத்த
லுறுபடலம் புகைச்சல்பற்ப ரோகம் போமே. 613

### விரிவுகண் கிருமிக்கு

[10] வன்னிமுதற் றராசுநடு வுரலந் தந்தான்
வரவெடுத்துக் [11] குடல்செலுவை வரைந்து தள்ளிக்
கன்னியனு யுலர்த்தி நறுந்தூள தாக்கிக்
கடக்கவைத்து வெந்நீராற் கண்க ழுவச்செய்
துன்னிமையிற் சர்க்கரையைப் பூசி மேதி
யுற்ற வெண்ணெய் கலைதடவி யிமையின் மீப்போட்
டன்னபொடி மேற்றூவிக் கலையை வாங்கி
யறலிலிட விரிவுகண்ணிற் கிருமி போமே. 614

### இழிகண், முடமயிர், ஆணிப்பூவுக்கு

பூநாகப் பொடியொருநாற் கழஞ்ச தாகும்
புகழ்பீத ரோசனையின் பொடியீ தொக்கத்
தானுடை தனிற்றூவித் திரித்தா நெய்யிற்
சாரகத்தில் விளக்கேற்றித் தகுபுத் தோட்டில்
ஆனமை பற்றவெடுத் தரைக்கு முன்னே
[12] யறைந்தபொடி யிட்டுவெண் கலத்திற் றேய்த்துத்
தேனுநெய் யிற்குழைத்துக் கண்ணிற் றீட்டத்
தீருமுட மயிராணி யிழிக ணெல்லாம். 615

---

[1] கஞ்சம்-வெண்கலம். [2] தாளம்-முத்து, [3] கம்பு-சங்கு. [4] பரிப்பல்-குதிரைப்பல். [5] வேசரிப்பல்-கழுதைப்பல். [6] மாயனவதாரத்தோன் கோடு-பன்றிக்கொம்பு, [7] உழுவையுகிர்-புலிநகம். [3] இரலைக்கோடு-மான்கொம்பு, [9] குக்குடத்தினுரம்-கோழி நெஞ்செலும்பு. [10] வன்னி முதல்-வன்னி என்னும் சொல்லின்முதலெழுத்து வ; தராசுநடு - தராசு என்னும் சொல்லின் நடுவெழுத்து-ரா; உரல் அந்தம் உரல் என்னுஞ் சொல்லின் கடையெழுத்து ல்; எனவே வரால் என்றபடி. [11] செலும்-மீன்சிறை. [12] அறைந்த பொடி-மேற்கூறிய பூநாகம் பீதரோசனை இவற்றின் பொடி.

## தலைநோய்

### பச்சைமாத்திரை

துரிசுகபா லங்கழஞ்சு படிகஞ்சு [1] சுற்பஞ்
சொலுமூன்று கழஞ்சு [2] வழைச் சுருள்கு ருத்தே
அரையிரண்டு பிடியொரிதழ்க் கமலந் தேசி
யானகனிச் சாறுவார்த் தரைத்துச் செம்பிற்
பரிசுறவே தப்பியொரு மூன்று நாளிப்
படியரைத்துண் டையதாக்கிப் பாவை மார்தம்
உரியமுலைப் பாலிலுரைத் திடுவீர் பச்சை
யுண்டைகண்டால் விழிநோய்க ளொழியு மன்றே. 616

### கண்சிவப்புப்படுவனுக்கு

பொடிபடுவெண் கலஞ்செம்பு வெட்பூ லாவிற்
பொருந்தியவே ருடன்றுத்தம் புளியம் பூவும்
இடிபடுத்தி யெலுமிச்சம் பழச்சாற் றுலே
யினிதரைத்துண் டையதாக்கி யெழுதும் போது
படியுமுலைப் பாலிடச் சிவப்பி னேடு
படுவனிவை யகலுமென்பர் பகர்ந்த வெல்லாம்
நொடியிலொரு மாவரைமாப் புளியம் பூவே
நோக்குடையார் கண்டிதனை நோக்கு வீரே. 617

### அமரத்துக்கு

புறந்தோல்போக் கமுதவல்லி யதனி னேடு
[3] புன்குறிஞ்சி யிலையதுவும் பொருந்தக் கூட்டிச்
சிறந்தேமெத் தெனநருக்கிப் பிழிந்தோர் துள்ளி
திலதைலம் பசும்பூரஞ் சிறிதே சேர்த்து
மறந்தோய்வெண் கலப்புறத்தி லிட்டு மீதே
வகுத்த வட்டில் கொடுவரைத்து வழித்து வாங்கி
நிறந்தோயும் வேல்விழியாய் விழியின் மூன்று
நேரமிட வமரமெலா நிலைநில் லாவே. 618

### திரிபலைக் குழம்பு

திரிபலைசொல் விழாலரிசி வசம்பிந் துப்புத்
திரிகடுக மரிதாரம் படிகஞ் செம்பு
தருபொடியஞ் சனக்கல்வெள்ளி லோத்தி ரந்தான்
சமன்கொண்டு சீதுளாய்ச் சாறு தன்னல்
வரிசைபெற வரைத்துவழித் தெடுத்துச் செம்பு
வட்டிலிட்டு மூன்றுநாள் வாங்கிப் பின்னர்
கருமுகைக்கை யான்றகரை மாத ளம்பூக்
கருதுசா றிவற்றிலொவ்வோர் நாள ரைத்தே. 619

---

[1] சுற்பம்செம்பு. [2] வழை-சுரபுன்னை. [3] புன்குறிஞ்சி-சிறுகுறிஞ்சி.

காணவின்னம் வெள்ளாட்டுப் பால்ப சுப்பால்
களினுமொவ்வோர் நாளரைத்து மற்றை நாளிற்
பேணிமுது [1] பிரசமுடன் குழம்ப தாகப்
பிடித்தரைத்து வேய்ங்குழலி லடைத்துப் பின்னைச்
சேணிழிகண் படலமுட மயிர்வெண் மாசு
தினவுகண்ணின் புறுணிதிமி ரம்பூச் செங்கண்
நீணழுக ணமரஞ்செவ் வரிகண் பித்த
நீலகா சத்தினெடு நிகழ்த்து வோமே. 620

நிகழதி கோபங் கண்ணி னெரிவுசந் திரகா சங்கள்
இகல்செயு மாங்கி ஷத்தோ டெழுச்சியென் றிவைக ளெல்லாம்
புகழ்பெறு சேது மன்னன் பொருவில் செங் கோலின் முன்னர்ப்
பகையென வொழியு மென்று பகர்ந்தனர் முனிவரன்றே. 621

## கண்ணிற்கு மருந்தெழுதும் ஈயத்துடுப்புச்செய்ய

ஒருபலங்கா ரீயமது கொண்டா னெய்யி
லுருக்கியொன்ப தாக்கிவெள்ளாட் டின்பா னெய்தேன்
சுரபியின்பால் [2] சலமயஞ்சேர் பொன்னுங் காணி
துகளில்கையான் றகரைபுளி யிலைச்சாற் றேடு
திரிபலைதிப் பிலிமுத்தற் காசோ ரொன்று
செப்புகினுற் கழஞ்சுளக்காந் தேன்பால் சாறு
கருதுமருந் துடனெக்கக் கலந்து முன்னர்க்
காரீய முருக்கியதிற் கணித்துச் சாயே 622

சாய்த்திடுக வொன்பதுநன் முறைவ ழாமற்
றகடாக வுருக்கியதிற் சாய்த்து வாங்கி
வாய்த்துதென்றல் விழிக்குமருந் தெழுதுங் கோலாய்
வகுத்திடுவீ ரெனில்வண்மை வளரு மண்ணில்
பார்த்திவர்க ளேனுநோய் தொலைக்கு மீதே
பரராச சேகரன்மன் பணித்த செங்கோல்
காத்தபுவி யோர்களிரு ணீக்கு மாபோற்
கண்ணினிரு ணீக்குமிது திண்ணந் தானே. 623

## திமிரத்தின் குணம்

தேறிடு நயனந் தன்னிற் சிறக்கவே பீளை யூறிச்
சாறதாய் நயனந் தானுந் தயங்கவே கடுக்கு மென்க
ஊறிய வெள்ளை தன்னி லுற்றதோர் நீல மாகும்
சீறியே வலிக்கு முள்ளே தினவெழும் புடைப்ப துண்டே. 624

[1] பிரசம்—தேன். [2] சலமயம்—வெள்ளாட்டுச்சலம்

## மருத்துவம்

## மூலைப்பாலுருண்டை

திற்பலி யக்க ராவுந் திரிகடு கரத்தை கோட்டம்
முற்சிறு கீரைவேரு [1] முகுழிதந் துரிசு துத்தம்
நற்றரி தாரங் கஞ்சாங் கோரைநன் மூலைப்பா லுண்டை
அற்றநற் கண்ணி லிட்டா லமர்ந்திடுந் திமிரந் தானே. 625

## பொன்னுங்காணித் தைலம்

காரார் வாழை கழற்பொன் காணி கரிப்பா னீர்காடி
ஊரெள் ளெண்ணெ யதிமதுர முடனே நாறு கரந்தைப்பூச்
சீரார் தகர மாஞ்சி னற்சீர் சிறந்த கோட்டஞ் சந்த நெல்லி
நேராய் வடித்துச் சிரம்பூச நீங்குந் திமிரங் கண்ணேயே. 626

## படலத்தின் குணமும் மருந்தும்

கண்வெள்ளை தனிற்பா லாடை யாமென விழியுங் கன்றிப்
பண்ணிய பஞ்சு போலப் பசாடுறு மதனைத் தீர்க்க
எண்ணுசா ரணைநற் கஞ்சா வின்றிரி கடுகு துத்தம்
நண்ணுபச் சைப்பூ ரந்தா னயந்துண்டை கூட்டிப் போடே. 627

## செல்லுருபகத்தின் குணம்

ஊறிய வெண்கண் டன்னி லுற்றதோர் சலங்கள் கொள்ளும்
பாறிய பாசி நீர்போற் பகல்விளக் கொளிபோற் றேன்றும்
சாறிய பீளை யூறித் தடித்திமை யெரிப்பு முண்டாம்
சீறுசெல் லுருப கத்தின் றீமையிங் கிதுவென் றூரே. 628

## மருத்துவம்

## பொடி

வொள்ளைக்காக் கணம்வே ரோடு வெண்குன்றி வேரை வாங்கிப்
பள்ளக்கா டியிலல் லாது பசுப்பாலி லவித்து லர்த்தி
உள்ளதே னதனின் மூன்று பணவெடை யுரைத்தே யிட்டால்
கள்ளச்செல் லுருபகங்கள் கரைந்து கண் வெளியாங் காணே. 629

## குமரித் தைலம்

அத்தியின் பட்டை நீரு மணிவரிக் குமரிச் சாறும்
சித்திலா மிச்சுச் சீந்தில் சிற்றமட்டி யின்வேர் கோட்டம்
மித்திர மதுர மேல மிருவேலி யெண்ணெய் கூட்டி
வைத்திவை தலையில் வார்க்க மாறிச்செல் லுருப கம்போம். 630

---

[1] முகிழிதம்-சிறுகீரைப்பூ வரும்பு

### கண்ணீர்ப்பாய்ச்சலின் குணம்

சலமிகுந் தருட்சிகாட்டுந் தடித்திமை தினவுமுண்டாம்
கலைவிழி குமிறி நொந்து கனத்துட னெரிப்பு முண்டாம்
அலமருங் கண்சி வந்திட் டனலெழும் பொசியுந் தண்ணீர்
இலகிய கண்ணீர் மாற விடுமருந் ததனைக் கேண்மின். 631

### மருத்துவம்
### குளிகை

குற்றமி றுரிசு துத்தங் குதிரைப்பல் வரிக்கற் றுழை
முற்றும்வேர் வாகை தேனல் முலைப்பாலாற் கலந்த ரைத்து
நித்தநீர் பாயுங் கண்ணி னெறிப்பட மருந்தை யிட்டால்
வற்றிடுங் கண்ணீர்ப் பாய்ச்சல் மாறிட வெண்ணெய் பண்ணே.

### கையாந்தகரை யெண்ணெய்

கையான் றகரை கருவாழை கம்பந் திராய்காட் டிருவேலி
மையார் குட்டித் தக்காளி வருசா றெண்ணெய் நெய்சரியாய்
ஐயாமதுர மாஞ்சில் சந்த மரத்தை கோட்ட மஞ்சிட்டி
வைசீ தாரி குரும்பைகச்சோல் வசுவா சேலம் வார்சிரத்தே. 633

### அழிகண்ணுக்குக் குழம்பு

ஆவின் பச்சைப் பாறன்னி லமுதைக் குத்தி நெய்வாங்கி
மேவுந் துரிசு துத்தமெலு மிச்சம் பழத்தின் சாற்றரைத்துத்
தாவுங் கலத்திற் புறந்தேய்த்துச் சாரி யிவற்றைக் குழம்பாக்கிக்
கூவுங் குயிலே யழிகண்ணிற் கொண்டே யெழுதக் குணமாமே.

### கண்நோய் பலவுக்கும்
### அஞ்சனப் பொடி

சந்தனந் தேற்றுக் கொட்டை தன்னுடன் றுரிசு துத்தம்
வந்தநற் பீத ரோணி மதியுப்புப் பச்சைப் பூரம்
இந்தநல் லேழு மொக்கப் பொடித்துமே யிழைத்த தூளை
முந்தவே கண்ணிற் றூவ மொய்த்தபன் னேய்கள் போமே. 635

### அஞ்சன மை

துத்தத் தோடேயீ ராஞ்சன மஞ்சனம்
வைத்த பழம்புளி மதுரந் துப்பு
மண்டு கடுக்காய் வருமெழு மருந்தும்
பண்டைப் படியே பகரெழு கழஞ்சு
வேப்பிலை புளியிலை விரையம ருப்பிலை
மூப்பிலா முருக்கிலை முதுதேட் கடையிலை

கையான் றகரை கடுஞ்சா றடையிலை
வெய்ய வியங்கிலை விரைந்துடன் பறித்துச்
சாறெரு படியே தனித்தனி கொண்டு
ஊறிய சீலையி லூட்டி யுலர்த்தி
இதுதிரி யாக்கி யெள்ளெண்ணெய் வார்த்து
முதிய விளக்கெரி யதின்மை பற்றும்
பற்றிய மையும் பார வெருமையில்
உற்றநல் லெண்ணெயு முரைத்தவேழ் மருந்தும்
இத்தனை யெல்லா மிதம்பெறக் கூட்டிச்
சேரச் சேர்த்துச் சிமிழி லடைத்திட
அழிகண் பிலல மவைநே ருள்ளது
வெளியின் முயன்று விழிக்கவொண் ணாதது
ஓயாம லேநீ ரொழுகி விழுமவை
பாவையைப் பற்றிய படலம் படர்ந்தவை
இவைதா மகலு மினன்மு னிமம்போல்
பூவார் வயல்சூழ் பொதுவைகு மன்னன்
பாலரு வரியன் பயின்றவை யாமே. 636

## ஆணிப்பூவுக்கு

[1] தந்தியின் றந்த மேனத் தந்தங்குக் குடத்தி னெஞ்சு
வந்த [2] கச்சபத்தி னோடு [3] வல்லியத் துகிர்நல் வெள்ளி
முந்திசெந்தேனினோர்செய்தரைத்துண்டையுருட்டிக்கண்ணில்
உந்திடு மாணிப் பூவுக் குரைத்திட வொழியு மன்றே. 637

## மாலைக்கண்ணுக்கு

கொங்குறு தாழை யேநற் குளவிந்தங் கோயின் சாரம்
திங்களி னுப்பி னோடு சிறுதேக்கு மரைக்கா லாகும்
அங்கவற் றெடுகர்ப் பூர மதுவுங்கால் தேனி னாலே
மங்கையே யரைத்துத் தீட்ட மாலையின் றேஷம் போமே. 638

## வெள்ளெழுத்துக்கு

தேற்றுறு மரிசி சங்கு திப்பிலி யோடிந் துப்புச்
சாற்று புங்கரிசி யல்லாற் றகுமர மஞ்ச ணெல்லி
கூற்றறு கடுக்காய் தான்றி கூறுநீ ராலரைத்துப்
போற்றுறு விழுயிற் றீட்டப் புகன்றவெள் ளெழுத்துப் போமே.

## கடுக்காய்க் களிம்பு

நவபாண்டந் தனிற்கடுக்கா யிட்டு மூடி
நலம்பெறமண் பூசியெரி மூட்டிப் பின்னர்க்
கவையுடனே பலமொன்று துரிசு துத்தங்
காட்டுமெகி னிற்பொருக்குச் சுட்ட சாம்பல்

[1] தந்தியின் றந்தம்-ஆனைப்பல்லு, [2] கச்சபத்தினோடு-ஆமையோடு.
[3] வல்லியத்துகிர்-புலிநகம்.

அவை சமமாய்ப் பலமொன்று கலத்தி லிட்டே
யாவெண்ணெய் கூட்டிமறு கலத்தா லாட்டிச்
சிவனருளாற் கண்ணிலிட விழிகண் காந்த
நீருமுட மயிரெரிச்ச லெழும்பூ வாதி. 940

## திமிரத்துக்குச் சூத உருண்டை

கருத்துமிகு சூதமுட னீயந் துத்தங்
காட்டுசுரி முகஞ்செம்பு காண வெல்லாம்
உரைத்தபடி சுத்திமிகச் செய்து கொண்டே
யொன்றினுக்கொன் றிரட்டியதா யுவந்து கூட்டிப்
பருத்தவெலு மிச்சையினிற் புளியி னுலும்
பனைமட்டைச் சாற்றினினிலும் பரிந்த ரைத்தே
தெரித்தமுறை விழியிலிடப் படலங் காசந்
திமிரமுத லானவெலாந் தீரு மன்றே. 641

## சதை வளர்ச்சியின் குணமும் மருத்துவமும்

கண்ணதுவு மிகச்சிவந்து நொந்து வீங்கிக்
கருமணியுள் ளேறிநீர் கதிக்க விழும்
திண்ணமுறச் சதைவளர்ந்து விழியை மூடித்
தினவுடனே வலியுண்டா மிமையும் வீங்கும்
புண்மிகவாய்ப் பழுத்துடைந்து சியனீ ரோடும்
பொல்லாத நோயிதுவும் புழுவே கொள்ளில்
பெண்மணியே விரிவுகண்ணிற் கிருமி தீரப்
பேசியநன் முறைபுரிந்து பின்னர்க் கேண்மின். 642

மல்லார்திண் புயக்கொடுஞ்சூர் கிளையை மாய்த்த
வடிவேல னிருசரண மனத்துட் கொண்டு
வில்லாரு நுதன்மடவாய் சீனப் பாகு
வேண்டிமிகச் சுத்திசெய்து துளிதமாகச்
சொல்லார்தே னதிற்குழைத்து நாற்பா னுளுந்
துய்க்கவுறு பத்தியமாய்ப் புளிக சப்பு
நல்லானெய் முதனீக்கி யுண்டு முன்னே
நாட்டியவஞ் சனமெழுத நன்மை யாமே. 643

## இரணதாம்பிராதி உருண்டை

படிசேரு மிரணதாம்பி ராதி யுண்டை
பகிர்ந்திடுகிற் றுரிசுதுத்தம் பவளமுடன் றரளம்
வடிசேருங் கருவளையல் வெண்கார நீல
மணியுடனே சவர்க்காரங் கணவா யோடு

துடிநேரு மிடைமடவாய் சமமாக நிறுத்துத்
தூக்கியரைத் திடுமிரிசம் பழச்சாற்றி லடைவாய்
விடிவேறு வெயின் முகத்திற் காட்டாம லுலர்த்தி
விரைகமழ்செப் பினிலடைத்து விழியிலுரைத் தெழுதே.

விழியிலிடு மதுபானம் புழுக்கடிசெவ் வரிதான்
மேவுதசை வளர்ந்திருட்சி மிகின்முருக்குப் புளியில்
இழிகணுட னீர்ப்பாய்ச்சல் கூச்சமிவை போகு
மிடுகொடுப்பை யிலைச்சாற்றி லியைந்து கண்ணீர்
வழியநெரி வுண்டாகி னெருஞ்சிவெண்ணே
மருவுகினிம் பத்திலையில் வரியினெடு புகைச்சல்
ஒழியவிடு பூவுக்குத் தும்பையிலை படல
முற்றிடிற்கை யான்றகரை யிலையாமென் றுரையே. 645

உரைபயிலு மருந்திடுகிற் சொற்கேளாம
லுட்டணமா யழற்றியன லெரிப்புண் டாகில்
தரைபயிலு மோரிதழ்வேர் கொடுப்பை சில்லி
........................................
........................................
துரிசு துத்தமீ ரிரண்டே யாக
அரையணைக் கலப்புறத்தி லப்பி வைத்தே
யதுவுலர்ந்து பொருக்காறு லெடுத்திடாயே. 646

ஆயிழையா யெடுத்ததனின் முலைப்பா றன்னை
யடைவாக விட்டரைத்துச் சீலை யூட்டி
மேயநிழ லுலர்த்தாக வுலர்த்தி யேதான்
விரைந்தொழுக்கி னயநத்தி லெழுச்சி தீரும்
தூயமதி போற்குளிர்ந்து கண்ணி லேதான்
றேன்ருத வியாகணமுந் தோன்றும் பின்னை
மேயவிதன் பேர்தாம்பிராதி யென்று
மோதினியோர் தமக்கறிய விரித்திட் டாரே. 647

## ஆணிப்பூ பில்லத்துக்கு

விரித்திடும்வேர் கொடுப்பைசா ரணையே சில்லி
வெட்பூலா வெள்ளைக்காக் கணத்தி னேடு
தெரித்திநற் புளியாரை செம்ப ராவுஞ்
சேர்கஞ்சந் தராவின்சத் துடனே ரண்டம்
பரித்திடுமுட் பருப்பிவைக ளோர்க ழஞ்சாய்ப்
பான்மையுறு துரிசுதுத்த மிரண்டே யாக
அரைத்திடுவீர் மிரிசத்தின் பழச்சாற் ருலே
யாணிப்பூத் தழும்புபில்ல மனைத்தும் போமே. 648

### நீர்ப்பாய்ச்சல் சொறிவுக்கு

புளியியங்கு முசுமுசுக்கை மாதளைபாற் சோற்றி
புன்குறிஞ்சா வுடன்சிற்ற மட்டிவலம் புரியும்
அழிவிலிலை சமன்கொண்டு குடலைதனிற் பொதிந்தே
யடுப்பினுறு சாம்பல்புதைத் தவிந்தபதத் தெடுத்துக்
கழிவிறுத்தந் துரிசு பச்சைக் கர்ப்பூரஞ் சரியாய்க்
கலப்புறத்தி விட்டுவட்டில் களிம்புறநன் கரைத்தே
இழிகண்ணீர்ப் பாய்ச்சலொடு சொறிவுபல கண்ணோ
யிவைதமக்குக் குழம்பாக்கி யிடுகமட மானே. 649

### கண்ணோய் பலவுக்கும்

தலையோடு துத்தமொடு துரிசிந் துப்புச்
சாற்றுகினு லிரண்டோடு கால ரைக்கால்
விலைமேவு மெலுமிச்சம் பழச்சாற் றுலே
வியந்தரைத்துக் கண்ணிலிடு வேறு துத்தம்
தலையோடு செம்புகலஞ் சதாநா றுத்தஞ்
சரிகழஞ்சு வெட்பூலா நாலு மேலும்
நிலைமேவு புளியம்பூக் கழஞ்சச் சாற்று
னீயரைத்திட் டிருவிழிநோய் நீக்குவாயே. 650

### நவரத்தின பூபதி

இயம்புநவ ரத்தினத்தோ டைந்து லோக
மெருமைபரி யாடேனங் கழுதை யெண்கு
நயம்புனையுஞ் சுரபிகளி றிவற்றின் றந்த
நாடிரலை யின்கோடு கூர்மத தோடு
சயம்புனையுந் திரிகடுகு மாலின் றேவி
சங்கரனப் பிரகமஞ்சள் கபாலந் துத்தம்
வயங்குகட னுரையிந்து பீத ரோணி
மனோசிலையிங் கிவைசமனுய் வகுத்துப் பின்னர். 651

வகுத்தசம் பழஞ்சாற்றுலு மாதுளங் கனிச்சாற் றுலும்
தொகுத்தபன் னீரி னுலுஞ் சுகம்பெற வரைத்த பின்னர்ப்
பகுத்துண்டை யுருட்டி மேலாம் பண்புற நிழலு லர்த்தி
மிகுத்தசெப்பினிலே வைத்து மேலினி யுரைப்பக்கேண்மின்.

நகிலத்துறு மமுதத்தி னிலுரையிட்டிடு நயனத்
திகலுற்றிடு பிணிவிட்டிடு மியல்புத்தமி ழறிஞர்
புகல்பெற்றிடு மரசர்க்கிறை படைமுற்படு திசையோர்
அகலுற்றிடை தரமுட்டிடு மதுவொப்பதோர் திறமே. 653

## புறவளையம்

காட்டுமெகி னுற்றதுளி ரதனி னேடு
கருவேலந் துளிர்மதுரங் கடுக்காய் நெல்லி
நாட்டுமிவை விரைநீக்கிக் குமரி யுற்ற
நன்மடலிற் பொதிந்துசுட்டு வெந்த பின்பு
கூட்டுமுலைப் பால்வார்த்தே யரைத்து மேலுங்
கூறனலிற் சிறுசூடாய் விழியைச் சூழச்
சூட்டுபிற வளையமிட விழிநீர்ப் பாய்ச்சல்
சொலுஞ்சிவப்பு முதற்பலநோய் சுகமாங் காணே. 654

## புறவளையம் 2

உப்பிட்ட ஓடு, நெல்லிக்காய் இவை இரண்டும் பொடிசெய்து புளியமிலை, வெட்பூலாவிலை, கற்ருழை ஆகியவை ஒருங்கு துவைத்து எடுத்த சாற்ருலரைத்துக் கரைத்துக் குழம்புப் பருவத்திற் காய்ச்சிப்புறவளையமிடுக.

## 3

கடுக்காய், சுக்கு, தேற்ருவிரை சமன் கொண்டு எலுமிச்சம் புளியில் அரைத்து உருட்டி வைத்துக் கொண்டு, மண் வெட்டியைச் சிவக்கக் காய்ச்சி மேற்படி உருண்டையை எலுமிச்சம் புளி விட்டுரைத்துப் புறவளையமிட நலமாம்.

## மாதுளம்பழச் சாற்றிலெண்ணெய்

சாற்று மாதளை தோடை பூசினி சாம்பல் வாழையு நெல்லியும்
சாரு நற்கனி யிங்கி வற்ஞெடு தாழை நீள்விழு தத்துடன்
போற்று தாமரை மூல மிக்கிள நீர்மு சுக்கை கொடுப்பையும்
பொங்கு மாவி னறும்ப யங்குமரி போது கைத்தகரையானவும்
தோற்று சாறிவை வகைக்கி ரண்டுபடிசோர்விலாதெடுபின்னையுஞ்
சுரபிமேவுதனி நெய்யுமவ்வளவு சொல்லுமெண்ணெயொருநாலுமே
ஏற்ற நாரியிரு வேலி கூவிளை யியைந்த முத்தமுசி ரைந்துமே
யேறு தூணிபய மெட்டி லொன்றுவடி யேல மோடுவசு வாசியே.

சிறுநாகஞ் செவ்வள்ளி குலக்காய வங்கஞ்
செண்பகப்பூ மஞ்சிட்டி தேவ தாரம்
முறைசேரும் விழாலரிசி கோட்டம் வெட்டி
மோதமிரு சீர்பச்சை கிராம்பு கச்சோல்
நறையாரம் பொற்காணி வேர்வ கைக்கு
நாற்கழஞ்சு பொடிதூவி நான்கா நாளின்
முறுகாத பதம்பார்த்து வடித்து ஞாழன்
முதன்மைபெறு புனுகுபச்சைப் பூரஞ் சேரே. 658

சேர்த்து வடித்தே முழுகுவை தீரும் பிணி கேளாய்
நேத்திர வெப்புச் செவ்வரிபடல நீர்ப்பாய்ச்சல்
தீத்திற முற்றே யுச்சியின் மேவுந் திமிர்சூடு
வேர்த்திடு பித்தம் வாயுறு புண்ணும் விரைந்தேபோம். 659

இதைக் குழம்பாகச் செய்வதற்கு; நல்லெண்ணெய் கூட்டாது நன்னாரி இருவேலி முதலிய வேர்களும் மற்றைச் சரக்குகளும் வகைக்கு இரண்டு கழஞ்சு. அவற்றுடன் முக்கடுகு, கசகசா, மதனகாமியப்பூ, திற்பலிகாமியப்பூ ஆகியவை வகைக்கு 2 கழஞ்சு, நிலப்பனைக் கிழங்கு, எள்ளு, உழுந்து, பயறு, கஞ்சா வகைக்கு 2 பலம். கூட்டி இடித்து, மேற்படி சாறுகள் வகைக்கு 1 படி. பால் 2 படி சர்க்கரை 1 பலம். பாகுபதத்தில் சரக்குத் தூள் தூவி நெய் தேன் செல்லத்தக்க அளவு விட்டு, அபின், குங்குமப்பூ, கோரோசனை வகைக்கு 2 கழஞ்சு. பொடித்துத் தூவிப் பதத்தி லிறக்கவும். கண்ணுக்கு மருந்திடுங்காலங்களில் இம் மருந்தை உடல் வலுவுக்கு ஏற்ற அளவில் உட்கொண்டு மேற்படி எண்ணெய் வைத்து தலைமுழுக நன்மையுண்டாம். உள்வெக்கை, எலும்புச்சூடு, இருமல், காசம், வயிற்றுப்புண், நெஞ்சுநோய், முதலிய பல வியாதிகள் தீரும். மாதளை, தோடை, சாம்பல் வாழைப் பழங்கள், கரும்பு என்னும் இவற்றின் சாறுகளைத் தவிர, மற்றைச் சாறுகள் வகைக்குப் படி 1 ம், நெய் படி 1-ம் கூட்டிக் காய்ச்சிப் பதத்தில் வடித்து அந் நெய்யைச் சேர்ப்பது உத்தமம். இக்கு-கரும்பு. [வங்கம்-இலவங்கம்]

### கண் நோயாளிக்கு ஆகும் பத்தியங்கள்

கண்ணுறு நோயி னோர்க்குக் காட்டிடும் பத்தி யங்கள்
மண்ணினிற் றுவரை நெய்பால் மறுவறு முருங்கைப் பிஞ்சும்
உண்ணலாஞ் சிறிய கீரை யுவந்தநற் பொன்னுங் காணி
எண்சிறு பயறு மற்று மேற்பள் கொள்க வென்றும். 660

### ஆகாதன

மீனுட னிறைச்சி யாகா வேண்டுப்புப் புளியு மாகா
ஆனதோர் மலசலத்தை யடக்குத லென்று மாகா
ஈனமாம் புகையு மாகா தெழுசினங் கொள்ள லாகா
தேனன மொழியா யென்றுந் திடுக்கிட நடக்க லாகா. 661

### செய்ய வேண்டுவன

மலபந்தம் நீக்கற் கேற்ற வழியறிந் தியற்றல் வேண்டும்
சொல்லுநற்பூ லுருவி யாதி தோன்றிடு மிவற்றுற் றந்தம்
நலமுறக் கால மூன்று நாடியே தேய்த்தல் வேண்டும்
வலதுகை மேலதாகத் துயிலலும் வேண்டு மாதோ. 662

மானின்றேல் புலியின் றேலால் வகுக்குகபாத ரட்சை
ஈனமி னிம்ப மாதி யேற்பவுங் கொள்ள லாகும்
ஆனவிம் முறைவ ழாம லாற்றியே மருந்து செய்யில்
தானறும் விழிநோ யென்று தவமுனி யுரைத்த தாமே. 663

பரராச சேகரம் என்னும் பெயரின் கீழ் கண் நோய்களைப் பற்றிக் கூறிய வேறுஇரு பகுதிகள் உள்ளன. இவை மூன்றும் முன்னர்ச் சிலரால் வெளியிடப் பெற்றிருப்பினும், வெளி வந்த அப் பகுதிகள் அனேக செய்யுட்கள் விடப்பட்டும், பல வேறுபாடு களோடு கூடியுங் காணப்படுதலாலும், ஒவ்வொன்றிலும் முக்கிய மான வெவ்வேறு பொருட்கள் கூறப்பட்டு இருத்தலாலும் ஏனை இரு பகுதிகளையும் இதிற் சேர்த்து வெளியிடுதல் அவசியமாகுமென்று அறிவுடையோர் சிலர் கூறியதற்கிணங்கி, இங்குப் பதிப்பிக்கப்படு கின்றது. அவ்விரண்டினுள் ஒன்று; கற்பார்க்கு எளிதிற் பொருள் விளங்கும் வண்ணம் நன்கு பிரித்தும் விரித்தும் விளக்கிச் செல்லு தலும், மற்றொன்று மிருகங்கள் பறவைகளின் கண் நோய்களுக்குச் சிகிச்சை கூறுவதும் குறிப்பிடத்தக்கன.

வேக மாநெறி சேரும் வினைகளும்
தாக மோகம் விடாத தளர்ச்சியும்
சோக வாரியி னுல்வருந் துன்பமும்
போக வானை முகத்தனைப் போற்றுவாம். 664

திருவுறு கைலை மீதிற் சேர்ந்திடு மமல மூர்த்தி
உருவுறு நந்திக் கந்நா னுரைத்திடு சித்தர் வேதத்
தருவிழி யதனி னோய்க ளவைபெயர் குணஞ்சி கிச்சை
தெரிவுறு மிரட்சை யாதி யறிந்தவா செப்பலுற்றும். 665

மாதுமை பாகன் சொன்ன மாமறை மூல மாய்ந்து
தீதுக டீர வென்று திருவுளங் கொண்டு வெற்பில்
ஆதிமா முனிவன் கூறு சித்தர் வேதத் துள்ளே
நாதனுர் தெரித்து ரைத்த நயனமாம் விதியி தன்றே. 666

## நோயற்ற கண்ணின் இயல்பு

இந்துவை யொத்த வண்ண மியல்வது நயனங் கண்டாய்
உந்திடு மொளியி னுள்ளே யுன்முகம் விளங்கித் தோன்றி
அந்தமி லொளியாய் நிற்கி லதனினோ யில்லை யென்று
செந்தமிழ்ப் புலமை யோர்கள் தேர்ந்திது செப்பினரே, 667

வெள்ளையிற் சிவப்புத் தோன்றி விளங்குநற் படிகம் போன்று
தெள்ளிய சோதி தன்னிற் சிறந்தரி வண்ண மாகி
உள்ளொளி பெற்று மங்கே யுன்முகம் விளங்கித் தோன்றில்
ஒள்ளிய நயன மீதி லுறுபிணி யில்லை யென்றூர். 668

தெளிவுற வொளியாய் நிற்குந் தீங்கிலை முப்ப தென்னில்
ஒளியறப் புகைந்து சற்றே யொதுங்கிடு நாற்பத் தைந்தில்
வெளியுறப் புகைந்து காட்டு மேவிய வைம்ப தென்னில்
அழிவுற விருளுங் கண்ணு மாண்டது நூறதாமே. 669

## கண்நோய் வருதற்குக் காரணம்

கண்ணிடை நோய்கள் சேருங் காரணங் கழறக் கேண்மின்
நண்ணிய புனலண் ணுந்து நசைமிகப் பருகை யாலும்
திண்ணிய முடியின் மீது தேய்த்தெண்ணெய் போகா தாலும்
உண்ணுறு பொருளின் மேவி யுறுங்குண பேதத் தாலும் 670

கடுகிய வெயிலி னுலுங் கனன்றடிச் சுடுகை யாலும்
தடியடி படுகை யாலுந் தலையுறு சுமைக ளாலும்
முடுகவே யெண்ணெய் தேய்த்து முயன்றுபின் விடுகை யாலும்
படியெழு கூர்மை யாலும் பரந்திடு நோக்கி னேயே. 671

மனமிடை தன்ளி னுலு மாதர்மே லாசை யாலும்
கனபழ மலஞ்செ றிந்து கவித்திடு பார்வை யாலும்
தனமிகக் கெடுகை யாலுந் தணிவிலா நடையி னுலும்
சினமிகு கோபத்தாலுஞ் செறிந்திடு நோக்கி னேயே. 672

செப்புறு வாத பித்த சேற்பன முதல மீதே
வெப்புறு கோபத் தாலும் மிகுதியாற் குறைத லாலும்
மைப்புறு குழனன் மாதே தந்தைதாய் மருவுங் காலத்
தொப்புறு கலைக ளைந்தும் விழிநிலா தொதுங்க லாலும். 673

கெர்ப்பத்தில் வளரு ஞான்று கிருமிக ளருந்தி னுலும்
சொற்பற்று மன்னைக் கேழாந் திங்களிற் றுலங்கு செங்கண்
பொற்புற்ற விழிக்கா காத பதார்த்தங்கள் புசித்த லாலும்
கற்பனை யாகக் கண்ணி னேய்பல சேருங் காணே. 674

## கண்ணுக்கு மருந்திடும் முறை

திருந்தவே யவிழ்தங் கண்ணிற் றிகழமுன் னிடத்தி லிட்டுத்
தெரிந்திட வலத்திற் பின்னைத் தெளியவிவ் வடைவே விட்டால்
வருந்துநோய் கடுக மாறி மாசறத் தீரு மென்று
பெருந்தவ முனிவன் கூறும் பெற்றியை யுணர்ந்து கொள்ளே. 675

மருந்திடு நயனந் தன்னின் மகிழ்ந்திரு நேர மிட்டால்
திருந்திடு மிருள்க ணீங்கித் தீர்ந்திடு நோய்க ளென்றும்
பரிந்திடு நேர மொன்றிப் பண்பினல் விடிய லாகா
விரைந்திடு மந்தி நேரம் விளையறு மறிவை நீயே 676

ஒருபொழு திடுமருந்து வுகந்தந்திக் கால மாகும்
இருபொழு தெழுந்து நோக்கி லிருளறுத் துரோகம் வாரா
மருளுறு காலை யிட்டு மருந்தந்திக் கிடாயே யாகில்
வரிபரந் திருந்த கண்ணில் வருமிடி தீரா தன்றே. 677

## பாதத்தில் நெய்பூச

பாதமே கல்லி லுற்றுப் பலகாலுந் தேய்த்துப் பின்னைச்
சேதமே பண்ணி யிங்ஙன் செறியநெய் பூசு மாகில்
சீதமே விழியி லுற்றுச் சிறந்தொளி விளங்கு மென்று
வேதமே யுரைக்குங் கண்டாய் மெய்யிது வாகவன்றே. 678

## அமுத யோகம் 5

உண்டுகைத் துளிபிழி முகத்து நீரெறி
கண்டிடு மதியமுங் கருது மஞ்சனம்
விண்டிட விரவிய தந்த சுத்திசெய்
அண்டுறு கண்ணினுக் கமுத யோகமே. 679

அமுதமா யோக மென்னும் வகையிது கண்ணுக் காகக்
குமுதமா யருந்த வத்துக் கொற்றவ னருளிச் செய்தான்
விமுகமாய் மருந்துங் கூட விரவியே விதம தாகச்
சமுகமாய்ச் சார்ந்து நிற்குந் தான்வகை கூற லுற்றேன். 680

## அமுத யோகம் ஐந்தின் வகை

## 1. பல் தேய்க்க

சீர்பெறு நயனந் தன்னிற் செறிந்து நோய் வாரா வண்ணம்
கார்செறி குழலி னுளே கருதிடுந் தந்த சுத்தி
நீர்திக ழாலெ ருக்கு நிறைந்தவேன் மருது பூலாப்
பேரிடப் பாக முந்தித் தேய்த்திடு வலத்திற் பின்னே. 681

## 2 முகத்தில் நீரெறிய 3. அஞ்சனந் தீட்ட

வாயினி னிரம்ப நீரைக் கொண்டுற விழித்து நோக்கி
நீயிரு கையி னாலே நீர்முகந் தன்னி லப்பத்
தீவிய [1] கணமிந் துப்புத் திரவிய பூரங் கூட்டி
மேவிடு மஞ்ச னந்தான் வினையற நயன மீதே. 682

## 4. சந்திரனை நோக்க 5. கண் பிசைய

கைவிர றன்னைக் கோத்துக் கவிந்துபல் கணிபோல் விட்டுத்
திவ்விய மதியுந் தன்னைத் திகழவே நோக்க மற்றும்
வெய்யென வுண்டு நீயும் விரவிய கையி னீரைத்
துய்யமா கண்ணி லிட்டுத் துவக்கறப் பிசைந்திடாயே. 683

[1] கணம்-திப்பிலி.

இப்படிச் செய்யி லிந்த வமுதமா யோக மைந்தும்
மெய்ப்பொரு ளாக நின்று விளங்கிடு நயனங் கண்டாய்
தப்பிடா வண்ண மிங்குத் தணிந்திடுங் கிரியை சொன்ன
அப்படி யறிந்து நீயு மதன்வழி செய்தி டாயே. 684

தின்னர் பன்னட் சிறுகீரை திராயை மறவார் மீன்மறவார்
பொன்னுங் காணி கறிகூட்டார் பூசார் பாத நெய்கொண்டு
பன்னுண் மதியந் தலைப்பாரார் பால்வார்த் துண்ணு பற்றேயார்
என்னே குருட ராவாரை யாமே தெருட்டக் கடவோமே. 685

## மருந்திடுலினல் கண்ணழற்சி தோன்றில்

மருந்துகள் கண்ணி லங்கு மகிழ்ந்துநீ யிட்டபின்பு
திருந்துகண் கரிப்பு முண்டாய்த் திகழநீ ரிழியு மாகில்
நிரந்திடு மவைகள் போக வனலுறு நீரான் மாற்ற
இருண்டெழு குழலி னளே யியல்பிது கண்டிடாயே. 686

கண்ணது பலகா லுந்தான் கலங்கியே யழன்று வந்தால்
நண்ணிய வுள்ளங் காலி னறுநெய்யை மிகவு மூட்டித்
திண்ணிய தவிட்டின் மாவாற்றெளியவே பூச்சறுத்துக்
கண்ணிய காடி யாலே கழுவிச்சந் தனத்தை யப்பே. 687

## கண்ணுக்கு மருந்திடுவோர் செய்யத் தகாதன

கடுகிய வெயிலி னேடு கருகுதீக் காய்த லாக
விட [1] மது வுண்ண லாகா [2] வீண்டுயில் கொள்ள லாகா
முடுகுநீ ராட லாகா முயங்குத லோட லாகா
இடுமபத் தியங்க ளாகா வென்றனரியல்பு ணர்ந்தோர். 688

இவ்வகை யுரைத்த வெல்லா மியல்பினு லறிந்துகொண்டு
செவ்விய மருந்து செய்யிற் றீர்ந்திடு நயன ரோகம்
எவ்வமார் நோய்கள் பேருங் குணங்களுஞ் சிகிச்சை யாவும்
நவ்வியு மழுவு மேந்த நம்பன தருளாற் சொல்வேன். 689

## கண்ணில் நோய் 96-ன் வகை

கருமணி தன்னில ரோகங் கலந்திடு நாற்பத் தைந்து
மருவிய வெள்ளை தன்னில் வந்திடு மிருப தென்க
பெருகவே யிமையி னிற்கும் பேர்பதி னைற தாகும்
பருவமாங் கடையி ரண்டில் பன்னைந்து தோடங் காணே. 690

தோன்றிய காச மெட்டுப் படலமேழ் குமுத மூன்று
வான்விழி யுத்தன் மூன்று திமிரமேழ் வரியு மூன்று
மூன்றவை நெரிசல் குந்த மோதுசுக் கிரனே யைந்து
மான்விழிப் பூவு மூன்று மணியிஞேய் நாற்பத் தைந்தே. 691

---

[1] மது என்றது வெறிப் பொருட்கள், [2] வீண்துயில்-பகல் நித்திரை.

## அவற்றுள்

### 1. காசம் எட்டின் பெயரும் குணமும்

### சாத்தியம் 3. அசாத்தியம் 5

வந்துறு காச மெட்டின் பெயர்வாத பித்த காசம்
உந்துசேற் பனத்தின் காச மோதிய வால நீலம்
சிந்துமந் தாரங் கெர்ப்பஞ் சேர்ந்திடும் விரண காசம்
முந்திவை யெட்டின் பேரு மொழிந்தனர் கலைவல்லோரே. 692

மணிதனில் வண்டு போல வன்னங்கள் பலவு முண்டாய்த்
தணிவிலா வாத காசந் தரியாம லோடி நிற்கும்
பிணியெனும் பித்த காசம் பிறங்கிய பச்சை போலாம்
மணிதனி லத்தி யாக வந்துறுஞ் சேற்ப காசம். 693

கூறிய வால காசங் கொழும்புகை யலர்த்தல் போலாம்
மாறிடு நீல காசங் கருவிளை யதின் பூ வண்ணம்
சீறுமந் தார காசஞ் செம்பச்சை மேகம் போலாம்
வேறுள விரண காசம் வெண்டழும் பாகுங் காணே. 694

சொன்னதோர் கெர்ப்ப காசந் தோன்றிடு கருமை போலாம்
மின்னனுய் பித்த காசம் விளம்புமந் தார காசம்
பின்னுமோ நீல காசம் பேசிய விந்த மூன்றும்
மன்னுறு சாத்தி யங்கண் மற்றைந்து மசாத்திய மாமே. 695

## மருத்துவம்

### 1. நெல்லிக்காய்த் தைலம்

சொல்லுநெல் லிக்காய்ச் சாறு துலங்கிய கையான் சாறு
அல்லியங் கமல வேரிற் சாறுடன் கொடுப்பைச் சாறு
புல்லுபேய்ப் புடோலின் சாறு பொருந்திய சில்லிச் சாறு
நல்லெலு மிச்சங் சாறு நவிலும்பா லிளநீ ராமே. 696

இவையிங்ங னுரைத்த வெல்லா மெண்ணெய்க்கு நாலு கூட்டி
நவையிலா மதுரந் தார நாகணங் கோட்ட மேலம்
சுவையுமுந் திரிபே ரீஞ்சு தோன்றுநற் சந்தஞ் சாதி
அவைசமன் கலந்து காய்ச்சியரும்பதத் திறுத்துக் கொள்ளே 697

கொண்டதோர் தைல மூன்று நாழியிற் குறைத்தி டாதே
மண்டலஞ் சிரத்திற் றப்பி மாலையின் முழுகு வோர்க்குப்
பண்டைநோய் கண்ணி லுள்ள பகர்ந்திடு காசம் போகும்
வண்டமர் குழலாய் மூளை வரட்சியு மாய்ந்து போமே. 698

### 2. அசன வில்வாதித் தைலம்

வில்வம்வேர் வேங்கைவே ரமுக்கு ராவேர்
வேலியுடன் வெட்டியின்வே ரிலாமிச் சம்வேர்
நல்லகுறுந் தொட்டிவேர் குமரி யின்வேர்
நன்னரி வேர்வனச வளையம் பத்தும்

சொல்லிலொன்று பலம்பத்துத் தண்ணீர் தூணி
தூளாகத் தறித்திடித்துப் போட்டுக் காய்ச்சி
முல்லைநகை மானேகேள் குறுணி யானல்
மூலிகைபொன் னுங்காணி யிளநீர் பாலே. 699

ஆம்பலிலை செங்கழுநீர்க் கிழங்கு நெய்த
லாமலக் கனிதாழை விழுதி னேடு
நாம்புகலுஞ் சம்பீரப் பழமி தெல்லா
நாழிசா றெவ்வொன்று மெண்ணெய் நாலு
சோம்புபடா திவைகூட்டித் தேவ தாரஞ்
சொற்கோட்ட மாஞ்சில்சிட்டி தூய வேலம்
காம்புறழும் புயமானே கிராம்பு சாதி
கன்னூர்செண் பகமொட்டுக் கருதிக் கொள்ளே. 700

இலவங்கந் திரிகடுகு பலைகர்ப் பூர
மினியசந்த மகரப்பூப் புழுகு சட்டம்
குலவுகிளி யூறல்கஸ் தூரி மஞ்சள்
குங்குமப்பூ வதிடயங் கழஞ்சு நான்கு
பலமொன்றக் கூட்டியரைத் தேக லக்கி
பண்புறுநற் பதமாக வற்றக் காய்ச்சி
நலமுறவே முழுகிவரக் கண்ணிற் றேன்று
நாலிரண்டு காசமது நாசங் காணே. 701

### 3. சந்தனாதித் தைலம்

நல்ல சந்த மகில்வில்வ நாரி தேவி யிலாமிச்சுச்
சொல்லுந் திரிபலை யிருவேலி தூய மிளகு கோட்ட [1] முசிர்
புல்லு நற்சீ ருடன்தேற்றுப் பொன்னு விரைவேர் மலைதாங்கி
முல்லைநகையீரிவையொன்றுமுன்னேபலம்பத்தாய்க்கொள்ளே

கொள்ளுந் தூணி நீர்விட்டுக் குறுகக் காய்ச்சி யெட்டொன்றுய்
விள்ளு மிளநீர் முலைப்பாலு மேய பசுவின் பாலதுவும்
எள்ளி லெண்ணெ யுடன் கூட்டி யியனீர் வள்ளி வல்லாரல்
வள்ளை பசளி சிறுகீரை வனச வளையங்காணி நெய்தல். 703

மாதளம் பழநீர் போந்தை மடல்தெங்கு நெல்லி தாளி
தூதவி ழாம்பல் முத்தந் தழைமுல்லை முசுட்டை வீழி
கோதையே யொன்று நாழி சாறிவை கூட்டிக் கொண்டு
பேதமில் கற்க மேலம் பெறுநெரி யரிசிப் பாலே. 704

பச்சைக்கர்ப் பூரந் தாளிச பத்திரி மதுரங் கன்னூர்
பச்சைநற் கிராம்பு கோட்டம் பகர்கிளி யூறல் தாரம்
நச்சிடும் புனுகு கோரோ சனைநற்சீ ரகங்கு லக்காய்
இச்சமங் கூட்டிக் காய்ச்சி யியல்புற வடித்துக் கொள்ளே 705

---

[1] உசிர்-வெட்டிவேர்.

## 4. இரத்தினாதி யுருண்டை

நவமணி யேழு லோக நாகொடு சோகி பீங்கான்
இவுளியின் பல்லு மாவின் பல்லொடு பசுவின் பல்லுக்
கவையடி மேதிப் பல்லுக் கமடத்தி ஞேடு பன்றி
நவையறு கோடு நன்னீர் முதலைப்ப லொட்டைப் பல்லே. 706

கலையின்கொம் புருத்தி ராக்கங் காளைப்பல் கழுதைப் பல்லு
நலமுறு பீதரோணி நற்சூதந் துரிசு துத்தம்
குலவிந்து சந்தந் தாரங் கோவின்ரோ சனையே கோட்டம்
இலகிய சீனக் கார மினியமுக் கடுகு கொள்ளே. 707

உறுதிரி பலைதேற் ருவித் தோரிதழ் மூலஞ் சீரம்
பெறுசிலை சமனுய்க் கூட்டிப் பெட்புடனரைக்கக் கேண்மின்
இறுமெலு மிச்சஞ் சாற்ரு லேழுநா ளுறவரைத்து
மறுபடி கோழி முட்டை வண்கரு வதைவிட்டாட்டே. 708

கொண்டதோர் மருந்து சற்றுங் குறுணனின் றிடாத வண்ணம்
உண்டை செய் திரும ருங்குஞ் சுழிவிழா துறத்தி:ரட்டி
மண்டல நிழலு லர்த்தி வளர்கையான் பொன்னுங் காணி
ஒண்டொடி முலைப்பானெய் தேனிவற்றினிலுரைத்துப்போடே. 709

## 5. காச உருண்டை

சங்கு திப்பிலி மிளகு சுக்கரி தார மோடதி மதுரமும்
புங்க வித்தொடு பீத ரோகிணி புதிய துத்த மனேசிலை
அங்க ரைத்திடு நந்தி பத்திரி தேன ளாவிய குளிகைகொள்
கங்குல் பற்றிய விழியி லிட்டிடு காச மேற்பட லங்கள்போம். 710

## 6. கையாந்தகரைக் குழம்பு

கையான் றகரை நெல்லிக்காய் கமல வளையங் காணிபுடோல்
தொய்யில் புளியிலை சீதேவி துலங்குஞ் சாறென் றெருபடிகேள்
நெய்யார் சந்த மகிழுர நெல்லி தான்றி கடுதேற்ரு
உய்யும் வெட்டி யிலாமிச்சோ டொக்கச் சமனெட் டொன்ருக்கே.

இனிய சாறுமுடன் கலந்தே யிளநீர் மடனீர் சரிகூட்டிக்
கனியச் காய்ச்சி யியல்பானுற் கருதும் பீத ரோணி துத்தம்
முனியுஞ் சீனக் காரமுடன் முதிருந் துரிசென் றிருகழஞ்சி
நனிசேர்தேன் விட்டளாவியதினவி லும்பொடியைமேற்றூவே. 712

தூவிப் பரணி தன்னிலிட்டுச் சொல்லும் விழியி லெழுதிவரக்
கோவித் தெழுந்த காசமுடன் கொள்ளும் புகைச்ச லுட்டணமும்
காவிக் கடைக்கண் மடமானே கண்ணி லனேக தோஷமறும்
பாவித்திதனைச் செய்யுமெனப்பகர்ந்தார் பழையமறையாய்ந்தே.

## 7. பொன்னுங்காணி நெய்

சொல்லுபேய்ப் புடோல்கொ டுப்பை தூயவல் லாரல் [1] காணி
நல்லபூ சினிக்காய் [2] வேழ நறியநீர் வள்ளி தாழை
புல்லுவெள் ளரிக்கா யோடு போதுமா தளஞ்சம் பீரம்
மெல்லவே யொன்று நாழி சாறிவை விரையக் கூட்டே. 714

குமரிவேர் சிற்ரு மட்டி கொவ்வையின் தண்டு முத்தம்
கமுகுவேர் வனச வேருங் கருதுசீ தேவி வேரும்
நமது [3]செங் கழுநீர் வீச நன்னுரி சீந்தில் வேலி
அமரவே யொன்று பத்துப் பலமெட்டி லொன்ருய்க் காய்ச்சே. 715

காய்ச்சிடு நீருஞ் சாறுங் கலந்துநெய் நாழி விட்டுப்
பீச்சிடு மான்பால் நாலு படிவிட்டுப் பேசக் கேளாய்
வாய்ச்சிடு சந்தந் தார மதுரஞ்செங் கழுநீர்க் கோட்டம்
கூச்சமில் கூகை நீறு குலவிய கிராம்பு சாதி. 716

சாதிபத் திரியோ டேலந் தகரங்குங் குமமே கோட்டம்
பேதித்த சிவதை ரோணி கேசுகர்ப் பூரம் பத்ரி
தாதுற்ற மகரப் பூவுஞ் சாற்றுமுந் திரிபே ரீஞ்சு
வேதிக்குங்கழஞ் சொவ்வொன்று வெந்துபின் சீனிதூவே.

காலமே கடுகி னேடு கரண்டிநாற் பதுதாட் கொள்ளச்
சாலமே பித்த ரோகம் தலைக்கிறு கிறுப்பி னேடு
மூலவுட் டணங்கண் ணேவு மொழிந்திடுங் காச மாலை
மேலுநீர்ப் பாய்ச்சில் கண்ணில் வியாதிக னனேகம் போமே. 718

### காசம் மிகுந்தால் குத்தி நீர் வாங்க

தோன்றிய நாலா மாண்டு தூய்விழிச் சூழ்ச்சத் துள்ளே
ஊன்றிய துளிபோ னின்றே யொள்விழி யடைத்துக் கன்றி
நான்றிமை நீக்கிப் பார்த்தா லகன்றுபி னடுவே நிற்கில்
தோன்றுளிக் குழலாய் காசங் குத்துமிச் செய்கை கேளே. 719

கூரிய கருவி நீள நால்விர லாகக் கொண்டு
நேரிய முனைய தாக வகலநெல் வடிவ தாகும்
சீரிய கடைக்க ணூக்குந் தெளிகரு விழிக்கு மத்தி
சாரவே பூன்றுந் தாழ்வு சணல்விரை யளவதாமே. 720

குத்திய கருவி வாங்கிக் கோதையே செம்பி னலே
மற்றுநால் விரலி னீளம் வடிவமா முனைநெல் நீளம்
முற்றிய விரலிக் காய்போன் முனையின்முப் பட்டமாக
உற்றிடு முருட்சி [4] மாடத் தளவதா யுரைப்பக் கேளே. 721

---

[1] காணி-உத்தாமணி. [2] வேழம்-கரும்பு, [3] செங்கழுநீர்வீசம்-செங்கழுநீர்க்கிழங்கு. [4] மாடம்-உழுந்து.

புளியினைக் கொண்டு தேய்த்துப் புழைவழி கரத்தைச் சாய்த்து
நழுவிடா தேற்றி னுக்கா னல்விழி நடுவே விட்டுக்
கொழுவிய சலாகை கொண்டு குறித்ததில் வலமே சுற்றி
இளகிய நீரை மெல்ல வழித்திடிற் காசம் போமே. 722

நடுவிழி யதனி னின்ற காசனீர் நாடா தோடில்
கடுகவே முன்னே தோன்றும் பதார்த்தங்கள் காண லாகும்
இடருறக் காணு தாகி லெஞ்சினீர் தங்கும் நிற்கும்
அடைவிலே யாய்ந்து நோக்கி யவ்விழி விஷநீர் மாற்றே. 723

சோதினை மத்தம் பூவின டுவல்லித் [1]தணடி சோரி
வேதனை யறவே குத்துங் கோன்முனை மிகுத்திடாமல்
ஓதில்வெள் ளரியின் வித்தின கலமே யத்தி னீளம்
தீதிலா வெள்ளை போலச் செய்திடுங் கருவி கொள்ளே. 724

## குத்தி நீர்வாங்கியபின் செய்யவேண்டிய மருத்துவம்

மேவிய விடநீர் மாற்றி வேதனை மிகுத்தி டாமல்
ஓவிய மணியாய் கண்ணி லொழுக்கிடு மருந்து கேளாய்
ஆவினெய் யதனிற் றுத்த மவின் சீனக் காரங் கூட்டிக்
கூவிட வலிக்குங் கண்ணி லூற்றியே [2]குளத்திற் பூசே. 725

பூசிய நெற்றி மீது புதியவெண் பஞ்சைக் கட்டிக்
கூசிடா திமையின் மீது கூறிய வெள்ளைச் சீலை
மாசறக் கட்டிப் பின்னை மறுபடி மூன்று நாளும்
வீசிடும் விழிகன் ருமை யனல்காட்டி விழிக்கச் சொல்லே. 726

விழித்திடும் போது குத்தி வேதனை தோன்று மாயின்
கழித்திடு மெட்டு நாளுங் கண்ணுளே யொழுக்கு நெய்கேள்
தெளித்திடு மதுரந் தாரஞ் சிப்பிநீ ரவின்சீர் கூட்டி
துளிப்பட வொழுக்கும் போது விழிவலி துணுக்கும் போமே. 727

காசம் முற்றிற்று

---

## 2. படலம் 7

விழியுறு படல மேழாய் விளம்புவர் தசையி ரத்தம்
மொழியுநீர் வரியெ மூச்சி முறைமைசாத் தியமா நான்கும்
கழிபசு விழியே மிக்க கருநாகப் படலத் தோடு
குழியதி மாங்கி ஷந்தான் கூறுசாத் தியமா மன்றே. 728

---

[1] தண்டி-அளவு. [2] குளம்-நெற்றி.

தசைப் படலம், இரத்த எழுச்சிப் படலம், நீரெழுச்சிப் படலம், வரியெழுச்சிப் படலம், பசுவிழிப் படலம், கருநாகப் படலம், அதிமாங்கிஷப் படலம் என, படலம் ஏழு. அவற்றுள்; தசை, இரத்தம், நீரெழுச்சி, வரியெழுச்சி நான்கும் சாத்திய மாவன. ஏனை மூன்றும் அசாத்தியமாவனவாம். 729

### அவற்றுள் சாத்தியம் நாலில்

### 1. தசைப் படலத்தின் குணம்

தெளிவுறு கறுப்பி னுள்ளே சிவந்துநின் றுறுத்தி நோவாய்
வெளியினை யடைத்துக் கன்றிப் படலம்வேய்ந் திடுமே யாகில்
அளியுறு குழலி னுளே யதுதசைப் படல மென்று
மொழிவதா மாயுள் வேத முறைமையை யறிந்து கொள்ளே. 730

### 2. இரத்த எழுச்சிப் படலத்தின் குணம்

கரித்திடுங் குமிறுங் காந்துங் கனத்திடும் பீளை சாடும்
எரித்திடுங் கண்ணி லெங்கு மிரத்தமே யெழுந்து காட்டும்
நெரித்திடும் புருவ நெற்றி பிடருச்சி நீங்கக் குத்தும்
இரத்நமாம் படல மீதென் றியம்பினர் முனிவர் தாமே. 731

### 3. நீரெழுச்சிப் படலத்தின் குணம்

சாலவே சிரத்திற் குத்துந் தாழுநீர் விழுங்க னக்கும்
மூலமாங் கறுப்பின் மீது முகில்போல மயக்க முண்டாம்
ஆலவேல் விழியி னுளே யருவிநீர் மிகுந்து வீழும்
மூலமா முனிவன் கூறு முறைமைநீர்ப் படல மன்றே. 732

### 4. வரியெழுச்சிப் படலம்

கருமணி யதனின் மீது கவர்போல வளர்ந்து காட்டி
அருவிநீர் பாய்ந்து குத்தி யழன்றுநொந் துறுத்துங் கண்டாய்
முருகவிழ் குழலி னுளே மொழிவிழி புகைச்சலுண்டாம்
வரியெழு படல மென்று வகுத்தனர்கலைவல் லோரே. 733

### அசாத்தியம் மூன்றில்

### 1. பசுவிழிப் படலம்

வசையறு கறுப்பி னுள்ளே மரகதம் போன்று கட்டித்
தசைபரந் திழியு நீருந் தழலது போலக் காந்தும்
இசையவே யொளியு மங்கு மிக்குணங் காணுமாயின்
பசையறு மசாத்திய யத்திற் பசுவிழிப் படல மன்றே. 734

## 2. கருநாகப் படலம்

இந்திர தனுவே போலு மியனிறம் பலவுமுண்டாய்
அந்தமாஞ் சூழ்ச்சந் தானு மதிர்ந்திடக் குத்தி நோவாய்ச்
சிந்துநீர் மிகுந்து காட்டித் தெரிவிழி யுந்துங் கண்டாய்
கந்தவார் குழலி னுளே கருநாகப் படல மாமே. 735

## 3. அதிமாங்கிஷப் படலம்

ஊச்சின தசைநீர் போலக் கருமணி யதனி லூறும்
கூச்சமு மிடியு முண்டாங் கொதித்துநீர் மிகுந்து வீழும்
தீச்சுடர் விழிநல் லாளே சிரம்பிட ரிசிய வாங்கும்
ஆச்சுதிக் குணங்கள் கண்டா லதிமாங்கிஷப் படல மாமே. 736

### மருத்துவ பொடி

சீனக் கார மொரு கழஞ்சு சிவந்த காவி யரைக்கழஞ்சு
மானே யவினும் பணவிடைகொண் மத்தித்திதனைப் பொடியாக்கித்
தேனுர் முலைப் பாறனில் கலக்கித் தீயி லழற்றி விழியொழுக்கப்
போனுர் கண்ணிற் படலமெலாம் போகுமெனவே புகன்றனரே.

### நத்தை நெய்

நறுநெய் யுழக்கு நத்தைசிப்பி நவிலு நீருஞ் சரிகூட்டி
உறுநற் சீர மதிமதுரந் தோடு தேவ தாரமவின்
நறிய சீனக் காரமிவை நாட்டு முருங்கைப் பூநீரால்
குறையாதிதனைக் கூட்டிவெந்து குளிரத்தாரைகொள்ளுகவே. 738

### குளிகை

செப்பிய துரிசு துத்தந் தேற்ருவித் துடனே பச்சைக்
கர்ப்புர மாமை யோடு கராவின்பல் லானைத் தந்தம்
ஒப்பறு வெள்ளி சேவ லென்புநல் லுழுவை தன்னிற்
தப்பறு முகிருந் தேசிச் சாற்றினு லரைத்துக் கூட்டே. 739

அரைத்திடு குளிகை கூறு மரிவையர் முலைப்பால் கூட்டி
உரைத்திடு கண்ணிற் றீட்ட வுறுதசைப் படல மாதி
பெருத்திடு காச மாணிப் பூவுடன் பேசிற் றெல்லாம்
விரைக்குழன் மானே தீர்ந்து விளியொளி மேவுங் காணே. 740

### புறவளையம்

அரிதகி மதுரஞ் சாந்த மகில்வில்வ [1] மரத்த சந்தம்
உரியநற் சுக்குத் தார முடன்றெறுங் கரியின் பல்லும்
அரிவையர் முலைப்பால் விட்டே யரைத்தவின் கலந்து காய்ச்சித்
தெரிவிழி சுற்றிற் பூசத் தீர்ந்திடும் விழிநோ யாவும். 741

[1] அரத்தசந்தம்-செஞ்சந்தனம்

இரும்பது சிவக்கக் காய்ச்சி யெலுமிச்சம் புளியை விட்டே
உரம்பெறு கடுக்காய் சுக்கு முகந்தவின் காய்ச்சுக் கட்டி
நிரம்பிடத் தேய்த்துச் சூழ நிமையின்மேற் பூசு வீரேல்
அரும்பொடு நீரு மாறி யகலருஞ் சிவப்பும் போமே. 742

கடுக்காய் நெல்லி யதிமதுரங் காணும் புளியின் றுளிர்கருவேல்
அடுத்த விலையுஞ் சமன்கொண்டே யரிய குமரி மடறன்னில்
அடைத்துத் தீயில்வெந்தபின்ன ரரிவைமுலைப்பால்விட்டரைத்தே
எடுத்து நிமையின் மேற்பூச வெரிவு முதலா யேகிடுமே. 743

சோற்றுப் பற்றும் வெண்ணீறும் தோகையனையார் முலைப்பாலால்
வேற்றுப்பற்றைத் துடைத்திட்டு வேறோர்கலத்தீற்புறந்தேய்த்துக்
காற்றுப் படாமற் கலத்திட்டுக் கண்ணைச் சூழ விழைப்பீரேல்
தோற்றுப் போகும் விழிநோவு சொன்ன வுண்மை பார்த்தறியே.

### இரட்சை

இவைசெய மாரு தாகி லியன்றிடு [1] மடங்கலென்னம்
நவையறு கருவியாலே நடுநரம் பறிந்து கொண்டு
[2] குவையுறு மிரண்டின்மீது கொதித்தெழு மிரட்சை செய்யச்
சவையுறு முனிவர் சொன்ன தாரணை யறிந்து கொள்ளே. 745

அறிவுசெய் தேழு நாளு மழுந்தவே புண்ண தாக்கிக்
குறியுற முன்னே சொன்ன மருந்தொடு [3] தாரை கொண்ணீ
மறுவிலா விழிபி னுள்ளே வந்திடும் படலம் போகும்
நறைகமழ் குழலி னுளே நாடிநீ யறிந்து கொள்னே. 746

## 5. குமுதம்—3

### சாத்தியம் 1 அசாத்தியம் 2

கூறிய குமுத மூன்றின் பெயருடன் குணங்கள் கேண்மின்
சீறுசெங் குமுதத் தோடு தெளிகருங் குமுத மற்று
மீறுவெண் குமுத மூன்றில் விளங்குசெங் குமுத மொன்றும்
மாறிடு மற்றி ரண்டு மசாத்திய மென்ன லாமே. 747

### செங்குமுதத்தின் குணம்
### இது சாத்தியம்

சிவந்திடு குமுதந் தானே செய்குறி யியம்பக் கேளாய்
உவந்தநற் கறுப்பின் மீதே யுற்பல மலர்போற் றேன்றித்
தவந்த்திடுந் தசையு நீருந் தழலென வெரித்துக் குத்தும்
குவிந்திடு தனமின் னுளே குறித்திதை யறிந்து கொள்ளே. 748

---

[1] அடங்கல் என்னும் கருவி இடைவெளி இன்றிய பொட்டுச் சூட்டுக்கருவி

[2] குவையுறுமிரண்டின் மீது என்பது புருவ நடுவில் இரண்டங்குலத்தின் மேல் என்க. அது 'புருவத்தின்நடுவாங் கண்ணில் ஊனமில் குலவுக்கப்பா லங்குல மிரண்டிலூன்றே' என்று பின் வரும் இரட்சைவிதிச் செய்யுளா லறியப்படும். [3] தாரை-முற்சொல்லிய நத்தைநெய்.

## அசாத்தியம் இரண்டில்

### 1. கருங்குமுதத்தின் குணம்

கொள்கருங் குமுதமத்தின் குணத்தினைக் கூறக் கேண்மின்
தெள்கரி விழியின் மீது செறிந்திடுங் குவளை போல
அள்ளிலை வேற்கண் மானே யரம்போன்று விரண முண்டாய்
நள்ளிருள் போல மூடு மசாத்திய மென்ன லாமே. 749

### 2. வெண்குமுதத்தின் குணம்

மீறுவெண் குமுத மத்தின் குணமது விளம்பக் கேண்மின்
சீறிடும் பஞ்சு போலச் சிதறியே வெள்ளை யாகும்
வீறெனக் கொதித்துக் குத்தி வேதனை மிகவு முண்டாம்
மாறிடா திடிக்குஞ் சூழ்ச்சி மசாத்ய மாமே. 750

## மருத்துவம்

ஆவின்பல் லதனை நன்று யாம்பற்பூ நீரை வார்த்து
மேவியே யரைத்து வட்டாய் விளம்புநாற் பதுநாட் சென்றால்
கூவுவெண் சாவ லென்புங் கோட்டங்கோ ரோசனையே யிந்து
தாவுபொன் வெள்ளி கஞ்சத் தராவொடு துரிசு துத்தம். 751

சொல்லிய சீனக் காரந் துலங்குமோ ரிதழின் மூலம்
நல்லசா ரணைவேர் சந்த நவிறிரி பலையின் வித்தும்
அல்லியங் கோதை நல்லா யோரொன்று கழஞ்சு கூட்டிப்
புல்லுசம் பீரச் சாற்று லரையெழு பொழுது மின்னே. 752

எழுபொழு தரைத்து ருட்டி யின்நிழ லுலர்த்திக் கொண்டு
விழியுறு குமுதங் காசம் வேறுள படல மல்லாற்
பழியுறு திமிர மெல்லாம் பாவையர் முலைப்பால் கூட்டி
எழுதிடத் தீர்ந்து கண்ணு மெழில்பெற விளங்குங் காணே. 753

### 2. பொடி

துரிசெலி மருந்து சீனக் காரஞ்சொன் மருந்து மூன்றும்
ஒருசரி யோட்டின் மீதே யுருக்கிப்பின் னுற விட்டு
மிருதுவாய் நுணுக்கிப் பின்னர் விளப்பிய குமுத மூன்றில்
ஒருதினை யளவு பத்துப் பொழுதிட வோடிப் போமே. 754

### 3. குழம்பு

கடனுரை துரிசு சங்கு கருதிந்து மிரிசு தேறு
மடலுறு துத்த மேழு மருவுமா வெண்ணெய் கூட்டி
அடர்குழி யம்மி யிட்டே யரையொரு சாமஞ் சென்றால்
இடர்செயுங் குமுத நீங்க வெழுதிட வியம்பி னரே. 755

குமுதம் முற்றிற்று.

———

## 4. விழியுந்தல் 3

விழியெழு குமுதத் தாலும் வேறுள வியாதி யாலும்
தெளிகரு விழியி னுள்ளே செறிந்திடு நீரி னாலும்
ஒளிமிக மயக்க முண்டா யுந்திடு மூன்று ரோகம்
அளியிறு குழலி னாளே யசாத்திய மூன்று மாமே. 756

### இரட்சை

காக்கையின் காலே போலுங் கருவியைச் சிவக்கக் காய்ச்சி
நோக்கிநீ நுதலின் மத்தி நுவன்றிடு பெருந ரம்பில்
தாக்கவே பிடரி ரோமஞ் சந்தித்த மைய மீதும்
வீக்குவார் முலைநன் மானே விழியிரு புறத்துந் தானே. 757

தானமாய் வைத்த ழற்றிச் சங்கொடுகரியின் றந்தம்
தேனமர் தேவதாரஞ் செஞ்சந்தங் கடுக்கா யைந்தும்
ஊனமின் முலைப்பால் விட்டே யுரைத்தவின் கூட்டிக் காய்ச்சி
மானமர் விழியாய் நெற்றி பிடர்சுற்று மதித்துப் பூசே. 758

விழியுந்தல் முற்றிற்று

---

## 5. நெரிசல் 3

கண்ணிலுட் டணத்தி னாலுங் கடுகிய மருந்தி னாலும்
உண்ணிறை சிவப்பி னாலு மொதுங்கிய நீரி னாலும்
திண்ணமாய் நெரிச லுண்டா மவைபெயர் செப்பக்கேளாய்
எண்ணுநீர் நெரிசல் சோரி யுட்டண மென்ப மூன்றே. 759

நீர் நெரிசல், இரத்த நெரிசல், உட்டண நெரிசல் என மூன்று. அவற்றுள் இரத்த நெரிசலொன்றும் அசாத்தியம். ஏனை இரண்டும் சாத்தியமாம்.

### நெரிசல் மூன்றின் குணம்

உட்டண நெரிச ருனே யுருண்டெழும் வெளுத்துக் காட்டும்
மட்டுநீர் நெரிசன் மையங் குளிர்ந்தெள்ளின் வடிவு போலாம்
கட்டிய விரத்தத் தாலே கனத்திடு நெரிச ருனே
மட்டவிழ் குழலி னாளே மஞ்சாடி வடிவ மாமே. 760

### மருத்துவம்—நெய்

குருதியி னெரிசருனே யசாத்திய மென்று கூறும்
தெரியிரு நெரிச லுக்குஞ் செய்மருந் ததனைக் கேளாய்
உருகிய நறுநெய் தன்னி லூரிநீர் முருங்கைப் பூவும்
மருவுநற் சீரஞ் சீனக் காரமு மவினுங் கூட்டே. 761

கூட்டியே கொதிக்க வைத்துக் குறித்திரு போதுந் தாரை
நாட்டமாய் விட்ட வாறே நவின் றிடு நெரிச னேவு
மீட்டுமக் குத்துச் சூடு மிகுமிடி போமே யென்று
கேட்டுநீ முன்னோர் கூறுங் கிரியையே யறிந்து கொள்ளே. 762

நெரிசல் முற்றிற்று

---

## 6. வரி 3

கூர்கரு விழியின் மீது கொண்டிடு வரியின் செய்கை
நீரிணு லிமையி னுள்ளே நிகழ்ந்திடும் வடுவி னுலும்
கார்குழன் மானே சோரி கடுகியே செறிந்த தாலும்
நேர்வரி மூன்றுண் டாகு மக்குண நிகழ்த்தக் கேளே. 763

### வரி மூன்றின் குணம்
### சாத்தியம் 1 அசாத்தியம் 2

நீர்வரிக் குணங்க டாமே வெண்மையாய் நெடுகிக் காணும்
சேரிமை வடுவினுலே செறிவரி பிறையே போலாம்
கார்குழன் மின்னே சோரி வரியிரு கடையுந் தாவும்
பாரிலிக் குணங்க ளெல்லாம் பண்புற வறிந்து கொள்ளே. 764

சொல்லிமை வடுவி னுலே தோன்றிடும் வரியு நீராற்
புல்லிடும் வரியு முன்னோர் புகலசாத் தியமா மென்பர்
ஒல்லையி லிரத்தத் தாலே யுறுவரிதீரு மென்று
பல்கலை தெரிந்தோர் கூறும் பண்பினை யறிந்து கொள்ளே. 765

### மருத்துவம்
### அஞ்சனம்

விளம்புநற் றுத்தந் தன்னை நுணுக்கிவெள் ளாட்டுப் பாலை
வளம்பெற நாழி விட்டு வற்றவே காய்ச்சிக் கொண்டு
துளங்குசம் பீரச் சாற்றி லரைத்தடை பிடித்துலர்த்தி
விளங்கிழை மின்னே சட்டி மீதுவைத் தெரிந்து கொள்ளே. 766

கொண்ணிறம் வெண்மை யானுற் கூறுவெண் கலத்தி லிட்டுத்
தண்ணுறு சங்கி னுலே சாரமத் தித்துக் கொண்டு
திண்ணமா யெழுதும் போது சேர்ந்திடும் வரிசி வப்புக்
கண்ணிடை நில்லா தோடுங் கருதிநீ யறிந்து கொள்ளே. 767

## 7. சுக்கிரன் 5
### விரணசுக்கிரன், கரியசுக்கிரன்

அள்ளிலை நெடுவேற் கண்ணுய் சுக்கிர னைந்தே யென்ப
ஒள்ளிய மணியின் மீதே யுறுவது விரண சுக்ரன்
தெள்விழி சுற்றிற் றேன்றிச் சினத்திடு முழுந்து போல
உள்ளது கருமை கண்டாற் கரியசுக் கிரனென்றேதே. 768

### விழிவிழுங்கிச் சுக்கிரன்

ஓதிய கருவி ழிக்கீழ் வரியிடை யொள்ளி தாக
மோதுவெண் டுசீபோல முழிதெரி யாதே மூடும்
வேதனை மிகுதியாக வெரித்திடு மிடியு மாரு
ஈதுசொல் விழிவி ழுங்கிச் சுக்கிர னென்ன லாமே. 769

### எழுச்சி வெண்சுக்கிரன்

நடுவிழிப் பக்கத் தின்மே னனிபனித் துளிபோ லுந்திச்
சுடுமணல் போலே காந்தித் தோன்றிடு மெழுச்சி யோடு
கடலுறு சோகி போலுங் கருவிழி மறைத்துத் தாக்கில்
இடர்செயும் வியாதி தானே யெழுச்சிவெண் சுக்கிரன்ருன். 770

### அனற்சுக்கிரன்

பானலங் கண்ணி னுள்ளே பகர்கரு விழியை விட்டுத்
தானமென் மேலதாகத் தழலது போலே தோன்றும்
ஊனமா மிடியுண் டாகி யுள்ளழல் போலக் காந்தும்
தேனவிழ் குழலி ஞளே யனற்சுக்ர னென்று செப்பே. 771

### அசாத்தியம் 3 சாத்தியம் 2

செப்பிய ரோக மைந்துஞ் செய்குண மறிந்து மேலும்
துப்புறு மசாத்தி யங்கள் சாத்திய முரைப்பக் கேளாய்
ஒப்பிய மணியின் மீதே யுறவெழும் விரண ஞேடு
வெப்புறு கருமை பின்னும் விழியினை விழுங்கி யாமே. 772

ஆகிய விந்த மூன்று மசாத்திய மென்ன லாகும்
தோகையே வெண்மை யோடு துலங்கன லிவ்வி ரண்டும்
வேகமார் சாத்ய மென்று விளம்பின ரிவைக டீர
ஓகையாய் மருந்து செய்யு முறையினை யுரைப்பக் கேண்மின்.

### மருத்துவம்

### மூன் 128 பக்கத்திற் கூறிய புறவளையமிட நன்று 2 பொடி

சீனக் கார மதைநன்ருய்த் திரளப் பொரித்து முக்கூறு
மானே யவினற் சிரகமு மதறகுப் பாதி வடிகாவி
தான்கால் கூட்டி மிகநுணுக்கித் தளரா முலைப்பா றனிற்கலக்கி
மானே நயனந் தனிலொழுக்க வருத்து மிடிகண் மாய்ந்திடுமே.

### 3. சுவர்ண பூபதிக் குளிகை

கனகங் கழஞ்சு வங்கமிரு கழஞ்சு பீத ரோகிணியும்
இனிமுக் கழஞ்சு துத்தமுநா லிந்து துரிசு மைங்கழஞ்சு
முனியுஞ் சீனக் காரமறு கழஞ்சோ ரிதழின் மூலமுமேழ்
நனிசேர் பன்றிக் கோடெட்டுக் கழஞ்சு கரிப்பல் நாலைந்தே. 775

கலையின் கொம்பு பதின்கழஞ்சு கார மைந்தோ டறுகழஞ்சு
நலமார் மதுரம் பனனிரண்டு நவிலுந் தாரம் பதின் மூன்று
குலவுஞ் சாவ னெஞ்செலும்பு கூட்டே மிரண்டு முதலைப்பல்
சொலவே பத்தோ டைங்கழஞ்சு சோகி பதினறிவைகூட்டே. 776

கூட்டி யரைநீ சம்பீரப் பழச்சா றேழு நாள்கொடுப்பை
ஈட்டுஞ் சாற்றி லெழுநாளு மிளநீர் தன்னி லேழுநாள்
நாட்ட முடனே யரைத்துருட்டி நாரி முலைப்பாறனிற் போட
வாட்ட முறுஞ்சுக் கிரன்படல மயங்குங் காச மிவைபோமே. 777

## 4. கற்பூராதிப் பொடி

பச்சைக்கர்ப் பூரந் துத்த மனேசிலை பீத ரோணி
நச்சிடுந் துரிசிந் துப்பு நாகொடு சோகி பீங்கான்
துச்சிடுங் கோழி முட்டைத் தோடுகாக் கணத்தின் மூலம்
வைச்சவோ ரிதழின் மூலம் வளர்வெண்சா ரணைவேர் சீதை 778

சிறுகீரை வேரொவ் வொன்று சேரமுக் கழஞ்சு கூட்டி
உறுமெலு மிச்சஞ் சாற்றி லரைத்துண்டை யோட்டின் மீது
மறுபடி வைத்தெ ரித்துப் பொடிசெய்து மானே கேளாய்
தெறுகனல் போலெ ழுந்த வியாதியி லிடவே தீரும். 779

## இரட்சை

விரணமே தீரா தாகின் மேலினி யுரைப்பக் கேண்மின்
மறிவுசெய் பொய்க்கண் மீது மணிநுத னரம்பின் மீதும்
குறியுற விரட்சை செய்து குறித்துமுன் சொன்ம ருந்து
நெறியுடன் செய்யும் போது நீங்குஞ்சுக் கிரனு மன்றே. 780

சுக்கிரன் முற்றிற்று.

---

## 7. திமிரம் 7

மின்னய் திமிர தோஷ வியல்பிணை விளம்பலுற்றேன்
மன்விழி சமரத்தோடு மற்றைவெள் ளெழுத்து மல்லாற்
பின்னுமந் தார மூளை வரட்சிசெய் பித்தஞ் சேற்ப
மன்னுநீர் வாயு மேக மேழிவை வகுக்கக் கேண்மின் 781

சமரம், வெள்ளெழுத்து, மந்தாரதிமிரம், மூளைவரட்சித் திமிரம், நீர்த்திமிரம், வாயுத்திமிரம், மேகத்திமிரம், எனத் திமிரம் ஏழு. அவற்றுள், சமரம், வெள்ளெழுத்து, மந்தாரம் மூன்றும் அசாத்தியம். ஏனைய சாத்தியமாவனவாம்.

## அசாத்தியம் மூன்றில்

### 1. சமரத்தின் குணம்

முப்பதிற் கப்பா லென்று மொழியுறு புகைச்ச லாகும்
ஒப்பது நாற்பத் தைந்தி லுள்ளவெள் ளெழுத்துத் தோன்றும்
தப்பிலா விதன்மே லுண்டாஞ் சமரத்தின் றிமிர மென்பர்
இப்படி வருங்கு ணங்க ளியல்புட னறிந்து கொள்ளே. 782

## 2. வெள்ளெழுத்து

கூர்விழி மணியி னுள்ளே கொழும்புகை முகிலே போலக்
கார்கிழிந் தொதுங்கி நிற்குங் காண்பது மஞ்சள் போலாம்
வார்முலை மானே யன்று வைத்தநேர் தப்பிக் காணும்
தேர்குணங் கண்ட வாறே வெள்ளெழுத் தென்று தேரே. 783

## 3. மந்தார திமிரத்தின் குணம்

சேர்கரு விழியின் மீதே செறிந்திடும் பஞ்சு போலக்
கூரிரு ணேர மானுற் குழம்பியே யுலையுங் கண்டாய்
சீரொரு சாமஞ் சென்ருற் றெளிவுறு மிக்கு ணங்கள்
தேருசொன் மந்தா ரத்தின் றிமிரமென் றுரைக்க லாமே. 784

சாத்தியம் நாலில்

## 1. வரட்சித் திமிரத்தின் குணம்

மூளையிற் பித்த நின்று முதிரவே வரட்சி யானல்
நாளிலே விழியு மந்த நடுநரம் புருளக் குத்தும்
பீளையு நீரு மாரு திக்குணம் பெருகக் கண்டால்
வாளைவென் றிட்ட கண்ணுய் வரட்சியாந் திமிர மென்னே. 785

## 2. தீர்திமிரத்தின் குணம்

கபமது மூளை மீதிற் கதித்துநீர் மிகுதி யானல்
நவிலுமூக் கடைத்தே யுண்ணுக் கதுமிகப் புண்ணே யாகும்
குவையிரு புறத்துங் குத்தும் கூர்விழி புகைச்ச லுண்டாம்
அவைகப நீரால் வந்த திமிரமென் றறிந்து கொள்ளே. 786

## 3. வாயுத்திமிரத்தின் குணம்

உந்தியில் வாய்வொ துங்கி லுச்சியிற் குத்த லுண்டாய்
முந்திய விழியு நொந்து மூடிய விருள்போ லாகும்
வந்தது விழியின் மீது வாயுவாத் திமிர மென்று
சுந்தர வதன மாதே தொகுத்துநீ யறிந்து கொள்ளே. 787

## 4. மேகத்திமிரத்தின் குணம்

ஆக்கைபிற் ருது கெட்டே யடர்நரம் புகண்மெ லிந்து
நோக்கிடும் விழியுஞ் சுற்றி நொய்மைசே ரொளிம ழுங்கி
வீக்கிடுங் கணன்மி குந்து விருயினி லெரிவுஞ் சுாணில்
தேக்கியன் மொழியாய் மேகத் திமிரமென் றுரைக்கலாமே. 788

மருத்துவம்

## 1. குழம்பு

ஆவின்பா லுரியிந்துப்புப் பலமதி னுள்ளே யிட்டு
மேவியே சுவறக் காய்ச்சி மேலிடு மருந்து கேண்மின்
தாவுவெண் கலத்தின் சார்வு தலையோடு துரிசு சங்கு
நீவிரைந் தொருக ழஞ்சு நிகழ்த்துமா வெண்ணெய் கூட்டே. 789

கூட்டி யரைத்துப் பணவிடையாய்க் குறித்துப் பத்து நாளெழுத
ஆட்டுந் திமிரப் படலமுத லனேக வியாதி தீரு மெனக்
கேட்டுச் செய்ய முனியுரைத்த கிரியைப் படியே செய்வீரால்
நாட்டந் துலங்கு மெனசித்த வேத நவிலு முறைமையிதே. 790

## 2. தாம்பிராதிக் குளிகை

படிகம் பணில நிமிளைதுத்தம் பஞ்சலோக மவற்றுடனே
கடிய கரிபல் லேனப்பல் கடலிற் சோகி நீற்றுக்கல்
அடலி லாமை யோட்டொடுசீ ரகமோ ரிதழின் மூலமுடன்
திடமா முதலைப் பல்தேற்றுச் சிறுகீ ரையின்வேர் காக்கணமே. 791

மேவுஞ் சீனக் காரமுடன் மிக்க பீத ரோகிணியும்
கூவுஞ் சாவ னெஞ்செ லும்புங் குலவு பீங்கான் கடனுரையும்
ஆவின் பல்லுங் கலைக்கொம்பு மாக வோரொன் றரைக்கழஞ்சு
பாவுந் துரிசு பதின்கழஞ்சு பரிந்தெலு மிச்சம் பழச்சாறே. 792

சாற்றி லேழு நாளரைத்துத் தயங்குங் கோழி வெண்கருவில்
நீற்றி யரைத்துக் குளிகையாய் நீளா தளவுங் குறுகாமல்
போற்றுங் கோவின் சுழியுறவே பொருந்தவுருட்டிக் கொண்டிதனை
ஏற்ற முலைப்பா னெய்தேனி லெழுதத் திமிர மேகிடுமே. 793

## பச்சை உருண்டை

சங்கு தலையோ டோரிதழின் ருமரை மூலம் வான்மேவும்
திங்க ளுப்பு நீற்றுக்கல் சிறந்த சோகி கமடவென்பு
பொங்கு துத்தங் கழஞ்சுடனே பொரியுந் துரிசு மறுகழஞ்சு
தங்க நிறுத்துச் சம்பீரச் சாற்று லரைத்துக் குளிகை செய்யே. 794

குளிகை திரட்ட முன் சொல்வன் கோழிமுட்டை வெண்கருவில்
நெளிய வரைத்தங் குண்டைதனை நீளா தளவுங் குறையாமல்
சுழியா யிருக்க விருபுறமுந் தோகை யனையார் முலைப்பாலில்
பிழிய வெழுத நயனமதிற் பெருகுந் திமிரம் போய்விடுமே. 795

## சந்தனாதியுருண்டை

நற்சந்த மகில்செஞ் சந்த நவிலதி மதுரந் தாரம்
வைச்சவோ ரிதழின் மூலம் வளர்பிச்சி யாரும் கோட்டப்
பச்சிலை பீத ரோணி பகர்சீனக் காரந் துத்தம்
நச்சிடு புனுகு கோரோ சனைமுத்தற் காசு தேற்று. 796

தாவுங்கோள் சங்கு லிங்கஞ் சாத்திர வேதி பச்சை
மேவிய விருபத் தொன்றும் விளம்பவொன் றிருகழஞ்சாம்
பூவையர் முலைப்பால் சேர்தெங் கிளநீர்தண் புகலும் பன்னீர்
நீவிரைந் தரைத்த வுண்டை யெழுதிடத் திமிர நீங்கும். 797

திமிரம் முற்றிற்று.

---

## 8. குந்தம் 3

குறித்திடு குந்த மூன்றின் குறிகுணங் கூறக் கேளாய்
உறுத்திடு தசையி னேடே யுதிரமொன் றுடனீ ரொன்று
மறுத்திடு மிவைகண் மூன்று மசாத்திய மாகு மென்பர்
செறுத்திடு மணியை விட்டுத் திரண்டிடிற் றசைநீர் தீரும். 798

### மருத்துவம்

### மெழுகு

ஒள்ளல்போ லேயெ ழுந்த வுதிரத்தின் குந்தந் தன்னைத்
தள்ளசாத் தியமா மென்று தசைநீராங் குந்தந் தீர
அள்ளிலை நெடுவேற் கண்ண [1] யளைபீத ரோணி துத்தம்
துள்ளெலி மருந்தி னேடு துரிசுநற் சீனக் காரம். 799

கடனுரை சங்கு சோகி கருதுமொன் பான்ம ருந்தும்
அடலுறு நந்திப் பூவி னீரிஞ லரைத்து லர்த்தித்
திடமுற வெளுக்கச் சுட்டுத் தேனின்மத் தித்துக் கொண்டே
உடனெழு குந்தந் தன்னி லெழுதிட வோடிப் போமே. 800

சரக்குகளை மேற்படி சாற்றுல் அரைத்து வில்லைசெய்துலர்த்தி ஓட்டில் வைத்து மேலோடி மூடிச் சீலைமண் செய்துலர்த்திக் கெசபுடமிட வெளுத்து நீறும். அதைத் தேனல் மத்தித்துக் கண்ணிலிடுக.

குந்தம் முற்றிற்று.

---

## 9. பூ 3

பூவையே பூமூன் றென்று புகல்வரங் கவற்றைக் கூறில்
தாவுவை சூரி யாலுந் தழலெழு வியாதி யாலும்
மேவிய நீரி னலும் விழியிடை மூன்றுரோகம்
கூவிய வாணி யுந்தல் குழம்பிய புகைபோன் மூன்றே. 801

மூன்றினி லானி யுந்த லசாத்திய மென்பர் முன்னேர்
ஊன்றுவெண் புகையாமொன்று மொழியுமென் றறிந்துகொண்ணீ
கான்றெழு பூமூன் றுக்குங் கழறிய குணத்தைக் கண்டு
சான்றிடு மருந்து தன்னைச் சாற்றக்கேள் தையன் மின்னே. 802

### குளிகை

தந்தி யெயிறு தனைப்பொடியா யெடுத்துக் கொண்டு தானதிலே
அந்தஞ் செறிந்த புளியாரை யதனைக் கூட்டி யரைத்துவட்டாய்
முந்தைமுனிவோர் மொழிந்தபடி முழுமண்டலமேமுதற்கிடந்தால்
கந்தஞ் செறிந்த குழலாளே கருதி யரைக்கும் படிகாண்மின். 803

---

[1] அளை - சங்கு.

காணீர் துத்தங் கழஞ்சுடனே கனகஞ் செம்பின் பொடிகழஞ்சு
பேணி யரைத்துக் குளிகைசெய்து பேசு மிச்சம் பழச்சாற்ருல்
ஊணி யுரைத்து விழியெழுத வொழியும் விரண சுக்கிரனும்
ஆணிப் பூவு மதிலுண்டா மரிய நோயு மடராதே. 804

கருமணியில் நோய் 45-ம் முற்றிற்று.

---

## II. வெண்மணியில் நோய்—10

மின்னனுய் வெள்ளை தன்னின் மேவுநோ யிருப துக்கும்
மன்னுபேர் குறிகு ணங்கண் மாற்றிடு மருந்தி ரட்சை
அன்னதின் செய்கை யாவு சித்தர்வே தத்தெ டுத்துப்
பன்னுநற் றமிழான் முன்னே ருரைத்தவா பகரக் கேண்மின்.

சொல்லிய வெழுச்சி யைந்து துளக்குறு படர்த்தி மூன்று
புல்லிய நெரிசன் மூன்று புற்ரெடு குமிழ மூன்று
நல்வரி மூன்று மாக நாலைந்து நோயின் பேர்கள்
வல்லியே யெழுச்சி யைந்தின் குணங்களை வகுக்கக் கேளே.

### 1. எழுச்சி—5

### அவற்றின் குணம்

### அசாத்தியம் 2 சாத்தியம் 3

தோன்றிய வரியெ ழுச்சி சுணங்குபோன் றுருண்டு காட்டும்
கான்றெழு விரணெ ழுச்சி கருங்குன்றி போன்று காட்டும்
ஊன்றிய குவையெ ழுச்சி யுழுந்தது போல வாகும்
ஆன்றநீ ரெழுச்சி தானே யப்பினிற் றுளிபோ லாமே. 807

ஆகுமே யுந்தெ ழுச்சி யன்றெழும் பருத்திக் காய்போல்
தோகையே யெழுச்சி யைந்திற் ரேன்றிய வுந்தெ ழுச்சி
வேகமாம் விரணெ ழுச்சி யிரண்டுமே மீளா வென்று
மோகமின் முனிவன் கூறு முறையினை யறிந்து கொள்ளே. 808

ஓங்கிய வரியெ ழுச்சி யோடுநீ ரெழுச்சி மற்றும்
வீங்கிய குவையெ ழுச்சி மூன்றுமே மீளு மென்க
ஈங்கிவை குறிகு ணங்க ளியல்பினு லாய்ந்து கொண்டு
பூங்கொடி மானே செய்யு மருந்தினைப் புகலக் கேளே. 809

### மருத்துவம்

### சுரசம்

திரிகடு தேற்ருக் கொட்டை தெளிசீனக் காரந் துத்தம்
அருமருந் தாறுங் கொண்டே யவைசம னுணுக்கிப் பின்னர்
மருவுவெட் பூலாச் சாற்றிற் கரைத்ததைத் தெளித்துக் காய்ச்சி
இருவிழி யொழுக்கக் கூறு மெழுச்சிநோய் மாய்ந்து போமே. 810

### தாரை

வெண்ணெயி லவினிந் துப்பு மேவுநற் சீர மூன்றும்
நண்ணுறக் கூட்டிக் கொண்டு நற்கொதிச் சோற்றிற் கூட்டி
ஒண்ணிறத் துணியி லிட்டே யொழுக்கிடத் தாரை யாகக்
கண்ணிடை யெழுச்சி ரோகங் கடுகவே யொழியுங் காணே. 811

### புறவளையம்

பழகிய காடு நீரிற் பழம்புளி தனைக்க ரைத்தே
இளகிய வவினிந் துப்பு மிட்டதை யிளகக் காய்ச்சி
மழையென நீர்த தும்புங் கண்ணிடை வளையப் பூச
அழலெழு விழியெ ழுச்சி யிடிவலி யாறிப் போமே. 812

### இரட்சை

புள்ளடிக் கருவி தன்னை யணைத்துநீ புருவத் தின்மேல்
துள்ளிட வைத்த முற்றித் தோய்த்திட வழுத்தி யேழ்நாள்
உள்ளது கழித்த வாறே யெண்ணெயா லுட்பு ணூற்றிக்
கொள்ளவே விழியெ ழுச்சி குலைந்திடு மென்று தேரே. 813

எழுச்சி முற்றிற்று.

---

## 2. படர்த்தி—6

### அவற்றின் குணம்

விளம்பிய தசைப்ப டர்த்தி மெத்தெனத் தடித்துக் காட்டும்
வளம்பெறு வரிப்ப டர்த்தி வலையென வளைந்து காட்டும்
விளங்கிழை மின்னே சோரிப் படர்த்தியு மிகக்கு ழம்பும்
உளங்கொளிக்குணங்கண் மூன்றில் வரியொன்றுஞ்சாத்யமாமே.

### மருத்துவம்

### அமுதாஞ்சனப் பொடி

சீந்திற் றண்டு நற்கடுக்காய் தேற்றுக் கொட்டை காக்கணம்வேர்
போந்த கொடுப்பை சிறுகீரை புகலோ ரிதழின் மூலமுடன்
ஆய்ந்தோ ரொன்று சமன்கூட்டி யரைநீ பழைய காடியினுல்
ஏந்து முலையாய் துரிசுதுத்த மினிய சீனக் காரமுமே. 815

மேவு மவின்சுண் ணும்புக்கன் மிக்க நிமிளை சோகிசங்கு
பாவு மருந்து முக்கழஞ்சு பகர்சம் பீரப் பழச்சாற்றில்
தாவி யரைத்தே யடையாக்கித் தழலி லெரித்து நுணுக்கவதைக்
கோவித் தெழுந்த படர்த்தியினி லிடவே குணமாம்விழிதானே.

## 3. நெரிசல்—3

### தசை, நீர், இரத்தம் என மூன்று

### மருத்துவம். 1-தாரை

துளியுத்து விரண மூன்றுஞ் சொல்லிய நெரிச லின்பேர்
மொழிவது மூன்று மாகு மொழிந்திடு மருந்து கேளாய்
தெளியு நெய்யோ டிந்துப்புத் திரிகடு துரிசு துத்தம்
அளியுறு குழலாய் கூட்டி யழற்றியே தாரை வாரே. 817

### 2. பொடி

சீனக் கார முக்கழஞ்சு செறியு மிந்துப் பரைக்கழஞ்சு
பானற் றுரிசு காற்கழஞ்சு பகர்கர்ப்பூரம் பணவிடை கொள்
தேனேவெ துப்பிப்பொடிசெய்து தெரிவை முலைப்பா றனிற்கலக்கி
மானே யழற்றி விழியொழுக்க வருத்து நெரிசன் மாய்ந்திடுமே.

நெரிசல் முற்றிற்று.

---

## 4. புற்று—3

அன்னதோர் தசையின் புற்று மரும்புநீர்ப் புற்றி னேடு
வன்னமா மனலின் புற்று வருத்திடு ரோகமூன்றில்
முன்னர்சொற் றசையின் புற்று முந்திடு நீரின் புற்றும்
அன்னவை சாத்தி யங்க ளனலொன்று மசாத்ய மாமே. 819

### அவற்றின் குணம்

தசைவளர்ந் தெழுந்த புற்றுத் தடித்திடு மிரத்த மொன்றும்
பதையுநீர்ப் புற்றின் செய்கை பருத்துவெண் குன்றி போலாம்
விதனமா மனலின் புற்று விம்பம்போன் றெழுந்து காட்டும்
அதையுணர்ந் தவைக்குச் செய்யு மருந்தினை யறையக் கேளே.

### மருத்துவம்

### அஞ்சனப் பொடி

உமுரிச் சார நவச்சார மோதுந் துரிசோ டெவாச்சாரம்
அமையுஞ்சத்திச்சாரமைந்துமடுத்தோ றொன்றுகழஞ்சுகொண்டு
குமைய வரைத்துச் சம்பீரங் குலவுஞ் சாற்று லடையாக்கி
அமுதமொழியாயோட்டினில்வைத்தனலால்வெளுக்கப்புடம்வையே. 821

வையே யெடுத்து வெண்கலத்தில் வைத்து வளையான் மத்தித்து
மெய்யே யிதுவு மெள்ளளவு விழியி லெழுதப் புற்றினுடன்
எய்யும் படலம் வரிசிப்புத் தோன்று மெழுச்சி யாமிவைகள்
தொய்யின்முலையாய்தீருமெனச்சொன்னன்மலையின்முனிவனுமே.

## இரட்சையும் மருந்தும்

இதுசெய மாறு தாகி லிரட்சையு மருந்துங் கேண்மின்
முதியநன் மத்தம் பூவி னடுவல்லி யளவு கூறும்
அதைமுனை யுழுந்து போலு மளவொரு பொட்ட தாக்கி
விதனமார் விழியிற் புற்றின் மேலெள்ளுப் புதைய வையே. 823

ஏந்திழை மின்னே கேளா யேழுநா ளளவுஞ் செய்யும்
சாந்தமாய் மருந்து தானே சாரணைக் கிழங்கிந் துப்புச்
சேர்ந்திடு மஞ்சள் துத்தந் துரிசெலி மருந்தோ ராறும்
காந்திடா தனனில் வெந்து கபிலையின் வெண்ணெய் கூட்டே. 824

கூட்டியே யரைத்தெ டுத்துக் கூறுமோர் திணையின் தண்டி
வாட்டடங் கண்ணின் மேலே வளர்ந்திடும் புற்றில் வைக்க
நாட்டிய புற்று ரோக நசித்திடு மென்று முன்னர்ப்
பாட்டியற் றமிழில் வல்ல பழமுனி யருளிச் செய்தான். 825

புற்று முற்றிற்று.

---

## 5. குமிழம்—3

கொடியிடை மானே முன்னர்க் குறித்திடு குமிழ மூன்றும்
வடியுநீ ரோடி ரத்த மாங்கிஷ மிவையா மென்பர்
திடமுற வறிந்து கொண்ணீ தீருநீ ரிரத்த மற்றும்
இடர்செயு மாங்கி ஷந்தா னசாத்திய மென்று தேரே. 826

## அவற்றின் குணம்

நாரியே நீரி னாலே நலிந்தெழு கொப்பு ளந்தான்
கூரிசங் கம்ப ழம்போற் குமிழிக்கு மிரத்தத் தாலே
சேருமக் கொப்பு ளங்கேள் செங்குன்றி வடிவ மாகும்
பார்தசைக் கொப்பு ளந்தான் பணைத்தெழுங் கருமையாமே. 827

## மருத்துவம்

### குழம்பு

இந்துப்புத் துரிசு துத்த மெழுகட னுரையு ரோணி
முந்துநற் சீனக் கார மொழியுமா வெண்ணெய் கூட்டி
நத்தினுற் கஞ்சத் திட்டு நையமத் தித்துக் கொண்டு
முந்துறு குமிழத் திட்டாற் றிர்ந்திடு மென்பர் முன்னோர். 828

குமிழம் முற்றிற்று.

---

## 6. வரி—3

அம்புய விழியின் முன்னே யறைந்திடு வரிகண் மூன்று
பம்புவெள் வரியி னோடு பகர்நீல வரியு மாகும்
வெம்பிய விரத்த மென்ன விளம்பினர் தமிழி னாலே
நம்பிநீ யறிவை நீல வரியசாத் தியமா மன்றே. 829

### அவற்றின் குணம்

விளம்புவெள் வரியின் செய்கை மீன்செலு வெழுதல் போலாம்
விளங்கிழை மின்னே நீல வரியது துரிசு போலாம்
தளம்புறு மிரத்தத் தாலே சார்வரி சிவப்ப தாமென்
றுளங்கொணீ யிதற்குச் செய்யு மருந்தினி யுரைக்கலுற்றேன். 830

### மருத்துவம்
### துரிசுப் பற்பம்

துரிசினை யெலுமிச் சின்றன் பழத்தினீர் துலங்க விட்டே
அரையடை பிடித்து லர்த்தி யதுபுதுச் சட்டி யிட்டு
எரியொரு சாமஞ் சென்று லெடுத்துமத் தித்துக் கொண்டு
வரியினி லெள்ளிற் றண்டி வைத்திட மாய்ந்து போமே. 831

வெண்மணியில் நோய் 20-ம் முற்றிற்று.

———

## III. இமையில் நோய்—16

சுற்றிய விமையைப் பற்றித் தோன்றுநோய் பதினு றுக்கும்
உற்றிடு பெயர்கு ணங்க ளோதுநன் மருந்தி னேடு
முற்றிடு மசாத்தி யங்கள் சாத்திய முறையே காட்டி
வெற்புறு முனிவ னந்நாள் விளம்பினன் றமிழி னுலே. 832

ஆனவை மூன்று பில்ல மடுத்திடு மிமைத்த டிப்புக்
கான்முட மயிரி ழிச்சற் கண்பற்ப ரோக மூன்றும்
ஈனமாங் கழலை மூன்றே டிமையினீர் சுற்று நீங்கல்
மானனுய் புழுவு யர்ச்சி வகைபதி னுறுந் தானே. 833

பில்லம்-3, இமைத் தடிப்பு, முடமயிர், இழிச்சற்கண் பற்ப ரோகம்-3, கழலை-3, இமையில் நீர்ப்பாய்ச்சல், சுற்றுக்குலைவு இமையிற்புழு, இமையுயர்ச்சி என இமையில் நோய் பதினறு வகைப்படும். அவற்றுள்;—

### 1. பில்லம்—3
### சாத்தியம் 1 அசாத்தியம் 2

சொல்லிய பில்ல மூன்று சொரியுநீ ரதனி னேடே
புல்லிய வமரப் பில்லம் பொருகுடற் பில்ல மென்ப
முல்லைவெண் ணகையாய் மூன்றின் மொழிந்திடு நீரினுகும்
பில்லமிங் கொழியு மற்றுப் பேசிய விரண்டுந் தீரா. 834

### நீர்ப்பில்லத்தின் குணம்
### இது சாத்தியம்

மெல்லிய விமையு மூர்ந்து வீழுநீர் மிகுதி யாகும்
கல்லெனக் கனத்து வீங்கிக் கண்சுற்றுப் புருவ முச்சி
சில்லென விடித்து நோவாய்த் திமிர்த்திடு மிக்கு ணங்கள்
கொல்லைமான் விழியாய் நீரிற் குறித்திடு பில்ல மாமே. 835

## அசாத்தியம் இரண்டில்
## 1. அமரபில்லத்தின் குணம்

சொல்லிய விமையி னுள்ளே சோரிபோற் றசையுந் துன்னிப்
புல்லிடு மொளிம யங்கிப் போதநீர் வடிந்து காட்டி
எல்லையி லிமைமடிந்து கீழிமை யுறுமே யாகில்
அல்லியங் கோதை நல்லா யமரத்தின் பில்ல மாமே. 836

## 2. குடற்பில்லத்தின் குணம்

இமையடி புருவ முற்றே யிளகிய நீரு மீறி
அமைபசு நரம்பு துன்னி யதுகனத் திடுமே யாகில்
குமுதநேர் விழியி னுய்கேள் குடலுறு பில்ல மென்று
தமையுணர் முனிவர் சொன்னூர் தான்புறப் பில்ல மாமே. 837

## மருத்துவம்
## துத்தாஞ்சனம்

இவ்வகை முன்னோர் கூறு மியல்பிணை யறிந்து கொண்டு
செய்வகை மருந்து சீதை சாரணை சிறிய கீரை
கவ்வுமோ ரிதழி னேடு காக்கண மென்று கூறும்
ஐவகை வேர்வ ழாதே யவைவகை பலமொன் ருமே. 838

ஆமிவை யணைத்து மொன்ரு யறுதிங்கட் காடி நீரால்
தோமறக் கழுவிப் பின்னைச் சொல்லிய மடலின் றுத்தம்
மாமயி லாளே வேர்க்குச் சமனுற மருவிக் கொண்டு
காமுறு சம்பீ ரத்தின் கனிச்சாறு கூட்டி யாட்டே. 839

ஆட்டிப்பின் வில்லை தட்டி யஃதொரு பாண்டத் திட்டு
மூட்டியே யெரித்தெ டுத்து முதியநற் சங்காற் றேய்த்து
நாட்டநீர்ப் பில்லத் திற்கு நயந்துநீ பத்துப் போது
போட்டிட மாய்ந்து போகு மென்றனன் பொதியின் மேலோன்.

## தசையொடுவுக்கு சத்திரமும் மருந்தும்

உள்ளிமை தசைவ ளர்ந்து தடித்தொடுப் பாயு மானல்
ஒள்ளிய கருவி யாலே யுந்திய தசையை நீவித்
தள்ளியே கருவி நீக்கித் தருகடுப் பொடியைத் தூவி
மெள்ளவே தேய்த்து நாண்மூன் றதற்குமேன் மருந்துகேண் மின். 841

## கடுக்காய்ப் பொடி

வெள்ளைக் கடுக்காய் விரைபோக்கி வறுத்துநுணுக்கி மேலவினும்
துள்ளுந் துத்த மிந்துப்புந் துரிசும் வெதுப்பிப் பொடியாக்கி
உள்ள கடுக்காய்ப் பொடி நேராய்க் கூட்டி யிரத்தப் பில்லமதில்
அள்ளி யிடவே குணமாமென சித்தர் வேத முரைப்பதுவே. 842

## துத்தப் பொடி

சொல்லு மிதற்கு மாறுதேற் றுத்தம் பலமொன் றதைநுணுக்கி
முல்லை நகையீ ராவின்பான் மொழியு நாழி யதிலிட்டு
மெல்ல வெரித்துச் சுவறியபின் மிகுசம் பீரச் சாறரைத்து
வெல்லு மடையைச் சட்டிவைத்து வேகச் சுட்டுப் பொடிசெய்யே. 843

செய்தே யெடுத்துப் பில்லமதிற் சேரு மரைமண் டலமிடவே
தொய்யுந் தசைக ணீர்ப்படலந் தோன்று தோடிப் போமென்று
பொய்யர்க் கெட்டாக் கதிரைமலைப் புனிதன் பொற்றாள் பூசிக்கும்
மொய்சேர் தவத்துக் கும்ப முனி முன்னு ளருளிச் செய்ததுவே.

## குடற்பில்லத்துக்கு நீர் குத்தி வாங்க

இமையது புருவ முற்று மிகந்துறப் புடைத்து விம்மிச்
சமையவே பிடித்துப் பார்த்தாற் சலமது திரண்டு காட்டும்
அமையவே யிதனை நீயு மறிகுடற் பில்ல மென்று
நிமையது கருவி கொண்டு நீகுத்தி நீரை வாங்கே. 845

இருவிர றன்னைக் கொண்டே யிமையடி விம்மப் பண்ணி
உருவவே புடைத்து நிற்குங் குத்திடு கருவி கொண்டு
விரவியே நெட்டி போல விரைந்தெழு மதனை வாங்கிப்
பரவிய வெண்ணெய் நெய்யிற் பதம்பட வொற்று வாயே. 846

பதம்பட வொற்றியேதான் பச்சைக்கர்ப் பூர மிட்டு
விதம்படு நெய்யிற் சீலை விம்மாமற் கட்டிப் பின்னை
இதம்பெறு நெய்மேற் பூசி யெட்டுநா ளிந்த வண்ணம்
மிதம்படு முறைவ ழாது மெதுவாகச் செய்ய நன்றே. 847

நன்றிது செய்த பின்னை நற்றரி கடுகைத் தூளாய்
மன்றவே தேய்த்துக் கொண்டு வருபழம் புளியைக் காய்ச்சி
வென்றிசேர் நிமையைச் சூழப் பூசிட நிமையிற் பில்லம்
பொன்றிடு மெண்ணெய் வைக்கும் பரிசினிப் புகலக் கேளே. 848

## மிளகுத் தைலம்

செய்ய மிளகு படியிரண்டை யிடித்துச் சீலை தனிற்கட்டித்
தொய்யுந் தண்ணீர் குறுணி விட்டுத் துலங்கவெரித்தே யிருநாழி
பைய வடித்து மேன்மருந்து பகருங் கையான் பாலிளநீர்
உய்யு மெண்ணெ யிருநாழி யுகந்தே கூட்டுங் குறுந்தொட்டி. 849

மேவு வேரிற் பதின்பலமு மிடித்துப் பதக்குநீர் விட்டுத்
தாவ வெரித்தே யிரண்டுபடி யானு லெண்ணெய் தனிற்கூட்டிப்
பாவுந் தேவ தாரமிரு பலமு மிடித்துப் பொடித்தணைத்துத்
தூவிப் பதத்தில் வடித்திதனை முழுகப் பில்லந் தோன்றுதே. 850

### இரட்சை

குறித்திடு புருவ மையங் குவைபிட ரிவையின் மேலே
நெறிப்படி [1] பொட்டி னாலே நீநரம் பறிந்து கொண்டு
திறப்பட விரட்சை செய்து சேரவே புண்ண தாக்கில்
செறுத்திடு விழியி னுளே பில்லநோய் தீர்ந்து போமே. 851

பில்லம் முற்றிற்று.

———

## 2. இமைத் தடிப்பின் குணம்

ஐயரி பரந்து கண்ணிற் பரபரப் பதிக மாகி
வெய்யநீர் ததும்பி விம்மித் திமிர்த்திடும் விருவிருப்பாய்
உய்யிமை விளிம்பு மெத்தக் கனக்கிலொண் டொடியே கேளாய்
செய்யிமைத் தடிப்பா மென்று செப்பினு ரசாத்தி யந்தான். 852

### மருத்துவம்

### அஞ்சனப் பொடி

சீனக் காரந் துரிசுதுத்தஞ் செய்ய நிமிளை மனேசிலையும்
தானத்தெடுத்துச் சம்பீரப்பழத்தின் சாற்ரு லரைத்துவட்டாய்க்
கானக் குழலீர் சட்டிவைத்துக் கனலே மூட்டி வெளுத்துதெனில்
ஊனுற் றிடுமவ் விழியெழுத விமையின் றடிப்பு மோடிடுமே. 853

### திரிபலையெண்ணெய்

திரிபலை வேங்கை காதல் செய்யகூ விளைவேர் சீந்தில்
மருவிலா மிச்சுச் சிற்ற மட்டிநன் னாரி யோடே
தருவெட்டி [2]மிளகுதான்றி சாற்றிடு மசுவ கந்தி
மருவுமிப் பன்னி ரண்டும் வகைக்குநாற் பலமாய்க் கூட்டே. 854

ஒக்கவே யிடித்து நாலு குறுணிநீ ருவந்து விட்டே
அக்கினி மூட்டி யெட்டொன் றுய்வடித் தெண்ணெய் நாழி
தக்கபா லிளநீர் கையான் சதாவேரி கொடுப்பை சங்கு
மிக்கசம் பீர மற்றும் வெற்றிலை கொற்ரு னெல்லி. 855

இவையொன்று சாறு நாழி யெண்ணெயி னேடு கூட்டிச்
சுவையொன்று மதுரங் கோட்டஞ் சுக்கொடு தேவதாரம்
நவை பொன்று நாகப் பூவு நாகண மேல மாஞ்சில்
குவையொன்று சாதி பத்ரி குலவுசந் தனங்க ராம்பே. 856

கச்சோலங் கார்கோ லோடு கருதுவெட் பாலை வங்கம்
வைச்சோரொவ் வொன்று மூன்று கழஞ்சுகொண் மாசி லாதே,
வெச்சென விடித்துத் தூவிப் பதத்திலே வெந்த வெண்ணெய்
இச்சையாய் முழுகு வோருக் கிமைத்தடிப் பேகுங் காணே. 857

இமைத் தடிப்பு முற்றிற்று

———

[1] பொட்டு என்பது பணம்போல இடைவெளியின்றிய பொட்டுக் சூட்டுக் கருவி. [2] மிளகுதான்றி யென்பது மிளகரணைபோலும்.

## 3. இழிச்சற்கண்ணின் குணம்

கூரியாவிமைவி ளிம்பு கொழுகொழுத் ததினீ ரோடி
ஊரிடும் புண்ண தாக்கி யொடுவது மாறா தாகில்
பார்விழி திறக்கக் கூசும் பலபல விதனங் காட்டும்
தேருமிக் குணமி ழிச்சற் கண்ணிது தீர்ந்தி டாதே. 858

### மருத்துவம் நவச்சாரக் களிம்பு

நவசாரந் துரிசிந் துப்புச் சமனுறக் கூட்டி நன்றாய்ச்
சுவைபெறு வெண்ணெய் கூட்டிச் சொல்லுவெண் கலத்திலிட்டே
அவையினைச் சங்கு தன்னா லரைத்துமத் தித்துக் கொண்டு
குவையுறு மிழிச்சற் கண்ணி லெழுதிடக் குணம தாமே. 859

இழிச்சற்கண் முற்றிற்று.

---

## 4. முடமயிரின் குணம்

பொருந்திடு மிமைம டிந்து நீரினாற் புண்ணே யாகிச்
சரிந்திமை யுரோம முள்ளே சாய்ந்தது குத்தி நோவாம்
தெரிந்திடு மணிவெ ளுத்துத் திமிரமே சேருங் கண்டாய்
முருந்துறு முறுவ னல்லாய் முடமயி ரசாத்தி யம்மே. 860

### கிரியை

சாய்ந்திடு முரோம மூல வொழுங்கினைத் தவறு நீக்கி
ஏந்திமேன் மறித்துக் கொண்டே யெள்ளிடை தசையை நீவி
மாய்ந்திட வேரி னோடே களைந்துமே லிமையின் மானே
சேர்ந்திட வெடுத்துக் கட்டத் தீருமென் றுரைத்தார் முன்னோர்.

### இரட்சை

அறுத்திடு முரோம மூல மளவிலோர் கருவி செய்து
செறுத்திடும் விழியி னாலே திரிந்துள்ளே வளைந்த கம்பி
குறித்ததை யழற்றிக் கொண்டு கூரிமை விளிம்பில் வேக
மறித்துவை தீரு மென்று மாமுனி யருளிச் செய்தார். 862

### சோமனாதிக் குழம்பு

சோம னாதி முக்கழஞ்சு துரிசைங் கழஞ்சா யிவையிரண்டும்
தாமே வெதுப்பி யெடுத்துப்பின் றகுமா வெண்ணெய் தனிலிட்டுச்
சாம மரைத்து முடரோமஞ் சாரு மிமையி லெள்ளளவு
காம விழியா யெழுதிடுகிற் சரியு முரோமங் கழிந்திடுமே. 863

முடமயிர் முற்றிற்று.

---

## 5. பற்பநோய் 3
## அசாத்தியம் 1. சாத்தியப் 2.

சொல்லிய பற்ப ரோக நீர்சதை சோரி மூன்றும்
அல்லியங் கோதை நல்லா யசாத்தியஞ் சதையா மொன்று
புல்லுநீர் சோரி தானும் போகுமே குணத்தி னோடு
நல்லதோர் சிகிச்சை ரட்சை நாடியே யுரைப்பக் கேண்மின். 864

### குணம்

நீருறு பற்ப ரோகக் குணங்கண்ணீர் மிகுதி யாகிச்
சோருமே யிமைக ரைத்துத் தோன்றிடு மிரத்தத் தாலே
சேருமவ் வுரோகச் செய்கை யிமையகஞ் சிவந்து செந்நீர்
வாருமாங் கிஷந்தா னுள்ளே தடித்தது வளருங் காணே. 865

### இரட்சை

புருவத்தின் மைய மீது பொருந்திடும் பெருந ரம்பில்
மருவிய குடோரி யிட்டு வடியுநீ ரிரத்தம் போக்கில்
இரியுநீர்ப் பற்ப ரோக மிமைக்கனப் பதுவு மாறும்
தெரிவைபி னிரத்த பற்பந் தீர்ந்திடுஞ் சிகிச்சை கேளே. 866

### மருத்துவம்

ஒள்ளிய விமைத டித்துக் கனத்தெழு முதிரந் தன்னில்
அள்ளிலை நெடுவேற் கண்ணு ய மதமாங் குடோரி யிட்டுக்
கொள்தசை யுரோகந் தன்னி லுப்பினுற் குழையத் தேய்த்தே
உள்ளுறுஞ் சதைநீர் போக்கி யிடுமருந் துரைப்பக் கேண்மின். 867

### திரிபலாதி அஞ்சனப்பொடி

திரிபலை கடிய காணந் தேறுமோ ரிதழின் மூலம்
கருவுறு முட்டைத் தோடு காட்டுசா ரடைவேர் சங்கு
மருவிய மடலின் முத்தம் வருசிறு கீரை சீதை
பொரியுறு சீனக் காரம் புகலுமுக் கழஞ்சொவ் வொன்றே. 868

இவையெலு மிச்சஞ் சாற்று லியல்புட னரைத்து லர்த்திக்
கவையுறு சட்டி யிட்டுக் கனலெரி வெளுத்து தானல்
குவையுறு சங்காற் றேய்த்துக் குறிபற்ப ரோகத் திட்டால்
நவையறத் தீரு மென்று நவின்றனர் முனிவ ரம்மா. 869

பற்பரோகம் முற்றிற்று.

---

## 6. கழலை 3
## அசாத்தியம் 1 சாத்தியம் 2

இயம்பிய கழலை நீரா லிரத்தத்தாற் றசையி னுலே
வயங்கிமை மேலே ழுந்து வளர்ந்திடு முரோகங் கண்டால்
தயங்கிய விரத்தத் தாலே சார்ந்திடுங் கழலை தீரா
தியங்கிய தசைவு நீருந் தீர்ந்திடு மியல்பிற் ருமே. 870

### சத்திரஞ்செய்ய

இமையுறு கழலை தீர்க்கு மியல்புகேள் கருவி யாலே
அமையநேர் பிளந்து தோன்று முளையினை யகற்றி யிட்டு
நமையுறு மிரத்தங் கண்டா னுட்டிய வெண்ணெய் நெய்யால்
சமையுறத் தாரை குத்தி வேதனை தணித்தி டாயே. 871

கழலை முற்றிற்று.

---

## 7. நீர்ப்பாய்ச்சலின் குணம்

சிரமதிற் சேற்ப நின்று செறியுநீர் விழிந ரம்பில்
மருவியே கனப்பா யூர்ந்து மதர்த்துமேற் றமிர்த்து வீங்கும்
முருகவிழ் குழலி னாளே மொழியுமிக் குணங்கள் கண்டால்
தெரியுநீர்ப் பாய்ச்ச லென்று செப்பினர் கலைவல் லோரே. 872

### மருத்துவம்

### அசனவில்வாதித் தைலம்

வேங்கை வயிரம் வில்வம்வேர் மேவுஞ் சீந்தி னன்னாரி
பாங்கார் சிற்று மட்டியின்வேர் பலமொவ் வொன்று மூன்றாக
வாங்கி யிடுநீர் பதக்கிலிட்டு வற்றக் காய்ச்சி யெட்டொன்றாய்
ஓங்கும் பச்சிலை கச்சோல முறுநல் வேல மதிமதுரம். 873

மதுரங் கோட்டங் கொத்தமல்லி வளர்நா கம்பூச் சதகுப்பை
இதமாங் குலக்காய் செவ்வள்ளி யிலவங் கத்தோல் வெந்தயமும்
கதமார் மிளகு சீரகமுங் கையான் சாறு தானுரியும்
முதுசம் பீரச் சாறுழக்கு முறையா யெண்ணெய் கூட்டுகவே. 874

வைத்த தைலம் பதம்வந்தால் மருவ வடிக்கு நேரமதில்
சுத்த மிளகோர் பிடிபொடியாய்ச் சொல்லு மவின்காற் கழஞ்சிட்டு
நந்தி வடித்து வெந்நீரா னலமாய் முழுகி வரநிமையில்
உத்த நீரின் பாய்ச்சலுட னெழியு மண்டைச் சேற்பனமே. 875

---

## 8. சுற்றுக்குலையின் குணம்

அன்னமே யிமையு ரோம முதிர்ந்தது புண்ணே யாகும்
பன்னிடு நீரும் பாயும் பல்லடி வலிக்குங் குத்தும்
கொன்விழி மயக்க மாகுங் கொழுகொழுத் திழியும் பீளை
இன்னவாங் குணங்கள் கண்டா லிதுசுற்றுக் குலைவென்றோதே. 876

### மருத்துவம்

### இலவணக் குழம்பு

அஞ்சுப்புப் பொரியுங் கார மருந்துரி சிவைக ளேழும்
மிஞ்சவோர் கழஞ்சு கொண்டு கோவுறும் வெண்ணெய் கூட்டி
எஞ்சிடா தரைத்துக் கண்ணி லெழுதிட நிமையின் மேவித்
துஞ்சிடு மயக்கஞ் சுற்றுக் குலைமுட ரோமம் போமே. 877

---

### புழுக்கடியின் குணம்

உள்ளிமை விளிம்பி னூரு முரோமமு முதிரும் புண்ணுய்
ஒள்ளழல் போலக் காந்து மொடுப்பாயுஞ் சீயி ரத்தம்
வெள்ளிடை சிவக்க வீங்கித் தடித்திடு மிக்கு ணங்கள்
அள்ளிலே நெடுவேற் கண்ணுய் புழுக்கடி யாகு மன்றே- 878

### மருத்துவம்

#### மை

நாணுங் கள்ளி வடக்காக நாடும் வேரைப் பறித்து லர்த்தித்
தானே சீலே தனிற்சுருட்டித் தக்கா மணக்கி னெண்ணெயினுல்
ஆனு தெரித்து வெண்கலத்தின் மையயே பற்ற வைத்திதனை
மானேர் விழியி லெழுதிவர மாறிப் போகும் புழுக்கடியே. 879

---

### 10. இமையுயர்ச்சி

வாத தோஷம் வைசூரி வருத்தும் விதன வியாதிதனில்
ஏது வாக விமையுயரு மியம்பு நோயு மசாத்தியமென்
ருதி முதல்வ னுரைத்தருளு சித்தர் வேதத் துண்மைதனைப்
போத முணர்ந்த முனியுரைத்த பொருளா லறிந்து தெளிவீரே. 880

இமையில் நோய் 16-ம் முற்றிற்று.

---

## IV. கடைக்கண்ணில் நோய் 45

கண்ணுறு கடையின் தோடங் கண்ணெடு படர்த்தி மூன்று
நண்ணுபூ சாந்தி ரத்தோ டிமைக்குரு நாடுங் கண்ணேக்
கண்ணுறு வாதம் வாயு கண்குவை மூன்று பின்னும்
எண்ணுவிற் புருதி சேருங் குமிழொடு பருவா மென்ப. 881

கண்ணெடு; நீர்ப்படர்த்தி, இரத்தப்படர்த்தி, தசைப் படர்த்தி எனப் படர்த்தி 3, பூசாந்திரம், இமைக்குரு, கண்ணே, கண்வாதம், கண்வாயு; நீர்க் குவை, இரத்தக் குவை, தசைக்குவை எனக் குவை 3; விற்புருதி, குமிழொடு, விரணப்பரு எனக் கடைக்கண்ணில் நோய் கரு வகைப்படும்.

### 1. கண்ணெடு இது அசாத்தியம்

மூக்கடிக் கடையி னுள்ளே முளைத்தெழுங் குமிழ மாகத்
தாக்கியே சவ்வு மூடி வெடித்திடிற் சலமும் வீழும்
நோக்கியே தீரா தென்று நுவன்றிடு சித்தர் வேதம்
வீக்குவார் முலையி னுளே கருவியால் விடுவித் தாற்றே. 882

### 2. படர்த்தி 3. இவை மூன்றும் சாத்தியம்

இளகிய கடையி னுள்ளே யிளகிநீர் தசையி ரத்தம்
அழலெனப் படரு மானே யசாத்திய மல்ல மூன்றும்
வழுவற விதற்கு முன்சொல் பொடிமருந் தவற்றுற் றீரும்
மழவிடை யுயர்த்தோன் சொன்ன வாகடத் தியல்பு தானே. 883

### 3. பூசாந்திரம் இது சாத்தியம்

இளகிய பீளை நிற்கு மிடத்துக்கு மெள்ளின் மேலே
வளமுறு பருத்தி வித்துப் போலெழு மானே கேளாய்
உளைவுறு மொடுவும் பாயுஞ் சாத்திய முணர்ந்து கொண்ணீ
விழைவுறு கருவி யாலிவ் வேதனை தீர்த்தி டாயே. 884

### 4. குவை 3

சொல்லுநீர் தசையி ரத்தந் துன்றியே குன்றி போலக்
கல்லெனப் புடைத்தெ ழுந்து கடையிரண் டவற்றிற் றேன்றும்
முல்லைவெண் ணகையி னுளே கருவியான் முளையை நீவிப்
புல்லிடுந் துரிசான் முன்சொற் பொடியினை யெழுதப் போமே. 885

### இரட்சை

### 5. கண் வாதம்

### இது அசாத்தியம்

கண்ணிடை மிக்க வாத தொந்தமே கதித்து நின்ருல்
நண்ணிமை யுயர்ந்து கோடி நடுக்கிடுங் குறைக்கண் ணுகும்
அண்ணலா ருரைத்த செய்தி யசாத்திய மதற்குத் தானே
திண்ணமாய்ப் புருவத்தின்மே லறிவுசெய் திடவே தீரும். 886

### 6. விப்புருதி 7. விரணப்பரு

### பரு அசாத்தியம்

கடைவிழி யதனிற் றேன்றுங் கடியவிப் புருதி யோடும்
இடர்செயும் பருப்புண் ணிற்கு மிணங்கிய மருந்து கேண்மின்.
அடையவிந் நிதானத் துள்ளே யறைந்திடு மருந்து கண்டு
தடையறச் செய்க புண்ணிற் பருவசாத் தியமா மன்றே. 887

### 8. கண் வாயு

நயனத்தில் வாயு நின்று நவில்புரு வத்திற் குத்திச்
செயல்பட விதன முண்டாய்த் திரண்டுநீர் மூக்கில் வீழும்
இயலுறு குணங்கள் கண்டே யிவ்வுரோ கத்தை மாற்ற
வியனுறு முனிவன் கூறு முறையினை விளம்பக் கேளே. 888

### குடோரி எண்ணெய்

நடுநரம் பதிற்கு டோரி செய்திடு நயந்தி ரத்தம்
கடுகவே பாய்ந்து போனற் கருதுவேப் பெண்ணெய், நாழி
உடன்வசம் புள்ளி சன்னி நாயகன் முசுடு முட்டை
அடைவிலே நாங்கூழ் கோழிக் காரமும் வசம்பு மாமே. 889

ஆந்திரி கடுகு வெட்பா லரிசிபன் னென்றுந் தானே
போந்திடுகழஞ்சொவ்வொன்று பொடியிட்டுவெந்தவெண்ணெய்
சேர்ந்தநேத் திரத்தில் வாயு தீர்ந்திடச் சிரத்திற் றப்பிக்
காய்ந்தநீ ரதனி னலே கழுவிடக் கடுகிப் போமே. 890

### 9. கண்ணோய்

உட்டண மதனினலு முறுவெயில் காற்றினலும்
கட்டமாஞ் சுமையி னலுங் கடுகிய நடையி னலும்
மட்டவிழ் குழலி னளே வந்திடும் விழியி னேவாம்
இட்டமா யறிந்து பின்னை யிதற்கிடு மருந்து கேளே. 891

### குளிகை

ஆறு கூறு கடுப்பருப்போ டைந்து கூறு கனமிளகு
தேறுந் திப்பிலி முக்கூறு தேற்று விதையு மிந்துப்பும்
ஏறு மேழு நாளரைத்தே யுருட்டிக் கண்ணி லிடுவீரேற்
பாறிக் கண்ணோ வுள்ளதெல்லா மோடு மென்று பணித்தனரே.

### துரிசுச் சீலை

சம்பீ ரத்தின் சாறுழக்குச் சாருங் கறியி னுப்புழக்கு
வம்பார் குழலா யிந்துப்புத் துரிசுங் கழஞ்சு மத்தித்துச்
செம்பா லியன்ற கலமதிலே சேர்த்துச் சீலை தனிற்றுவைத்துத்
தன்பாற் றப்பி வெயில்வைக்கச் சாரும் பச்சை நிறமாமே. 893

சீலை பணத்தி னளவெடுத்துத் தேனர் முலைப்பா றனிற்கரைத்தே
ஆல மெனநோம் விழியதனி லழற்றி யொழுக்க வலியிடிகள்
மேலுஞ் சிவப்பு நீர்ப்படல மெல்லாந் தீர்க்கு மிதுவென்று
சீல முனிவர் கோமானுந் தெரித்த வுண்மை பார்த்தறியே. 894

### சேங்கோட்டைக் குளிகை

சேங்கொட்டை பீத ரோணி திருகுகள் ளியின்வே ரிந்து
பாங்குறக் கருக்கிப் பின்னர்ச் சம்பீரப் பழத்தின் சாற்றுல்
ஆங்கரைத் துருட்டி வைத்தே யரிவையர் பாலிற் றேய்த்துத்
தீங்குறு கிருமி சுற்றுக் குலைவுக்குந் தீட்டப் போமே. 895

### ஒத்தணம்

ஆவின் பாலு மிருநாழி யதனிற் புளியிலை யிரண்டுபிடி
காவி யனைய கண்மடவீர் கடுகாய் திரளக் காய்ச்சியபின்
சீவிச் சீலை தனிலிட்டுத் திரள்பொட் டணமா யொத்திவர
கூவி வலிக்குங் கண்வலிதான் குணமா மென்று கூறினரே. 896

## புறவளையம்

சோற்றுப் பற்றுந் திருநீறுந் தோகை யனையார் முலைப்பாலும்
காற்றுப் படாம லரைத்தழற்றிக் கண்ணைச் சூழ வளைவீரேல்
சீற்றங் கொள்ளுங் கண்ணோவுஞ் சேரும் வலியுங் கண்சிவப்பும்
கூற்றைக் கடந்த தவமுனிவன் குணமா மென்று கூறினனே. 897

## கண்டூஷம்

சினத்துறக் கனத்து நொந்து சேர்ந்துநீர் பீளை சாறில்
நினைத்துற விதற்கு மங்கே நேர்ந்துகண் டூஷம் பண்ணு
கனப்புறத் தலையி னுசி கரிப்புற்று நீரே கொண்டால்
மனத்துற வறிந்து நீயு மருவிய நசியம் பண்ணே. 898

தக்கநன் மருந்து நாவிற் சார்ந்துகண் டூஷம் பண்ண
மிக்கதோர் கடுக்காய் சுக்கு மிளகுகிப் பிலியுமுப்பும்
பொக்கமில் தேசிச் சாற்றுற் புரையற நருக்கித் தேனும்
ஒக்கவே கூட்டி நாவி லடக்கிநீ ரூற வையே. 899

வைத்துநீ ரூற நீக்கி மறுபடி வெந்நீர் கொண்டு
சுத்தமாய்க் கொப்ப ளித்துச் சுகமுற மாற்றிப் பின்னை
மெத்தென வெண்ணெய் நெய்யு மிடற்றினி லொற்றுமென்று
வித்தக முனிவன் கூறும் விதமது கண்டு கொள்ளே. 900

நெற்றியு நெஞ்சுதானு நீண்டிடு கன்னத் தோடு
மற்றுறு கண்ட முச்சி மருவிட வெண்ணெய் பூசி
ஒற்றிடு மோடு காய்ச்சி யுறுமிது செய்த பின்னர்
உற்றிடு நசியந் தன்னை யோதுவ னினிது கேண்மின். 901

## நசியம்

மருவுறு பச்சைப் பூர மன்னுவேர்க் கொம்பி னோடு
பருகுறு சீனி தானும் பாவையர் முலைப்பா றன்னிற்
தெரிவுற வரைத்துக் கொண்டு சேர்த்ததிற் கலக்கி யேதான்
பரிவுறு கபநீர் தம்மைப் பாற்றிட நசியம் பண்ணே. 902

மார்கழி தையி ரண்டா மாசிபங் குனிக்கு மூன்றும்
சீர்பெறு மேட ராசி சிறந்தவை காசி யைந்தாம்
ஆரவே யானி யாடி யாவணி கடிகை யாறும்
வாரிடு மெண்ணெய் தன்னை மாறவே கடிகை மூன்றே. 903

அறுபலங் கபம தாகு மாருத நால தென்க
உறுகய பித்தந் தானு மொருபல மென்று கொள்க
செறிமலர்க் குழலி னுளே செப்புவ னசியஞ் செய்தே
எறுதிரி தோஷந் தன்னை யிப்படி வாங்கிடாயே. 904

தோன்றிய தோஷ நாலிற் றொடர்ந்துகண் டூஷம் பண்ணி
ஏன்றிடு மதின்மி குத்தே யிடருற நயன நோயில்
சான்றவ ருரைத்த வண்ணந் தகுமுறை நசியம் மேவி
ஊன்றிய மருந்தை யிட்டே யுறுபுற வளையம் பூசே. 905

### பத்தியம்

குடிப்பது வெந்நீ ராகுங் கொள்ளுநற் சாறு தானும்
பொடிப்புறு மிளகி னுகும் பொருந்தொரு போது கொள்க
தடிப்புள தயிரு மோருந் தாமிவை மிகவு மாகா
வெடிப்புள மீனி றைச்சி மேவவு மாகா தென்னே. 906

சுக்கது நீரிற் காய்ந்து சுகம்பெறக் கொள்ள லாகும்
தொக்கறைக் கீரை யோடு திராய்வழு துணங்காய் நீக்கிப்
புக்கது சிறிய கீரை புனன்முளி முருங்கை காணி
தக்கது பயறு பாலுந் தாமிவை கறிகள் கொள்ளே. 907

பங்க யக்கண் ணதுநொந்தாற் பருக்க வுறுத்தி நடவார்கள்
தங்கு மிரண்டை யடக்கார்கள் சாரும் மாங்காய்க் கறிகொள்ளார்
அங்கை யில்வெற் றிலையேந்தா ரருகி ருந்தா ருடன்பேசார்
மங்கை தருமின் பினின்மருவார் மருந்து முட்கொள் வதுமபாலே. 908

### கபாலநீரினுற் கண்மறைதல்

அன்ன மிகுந்த படியாலு மரிவை முயக்கந் தன்னுலும்
மன்னுந் தண்ணீர் மிகக் குடித்து வருவதாலு நடையாலும்
பொன்னை மறைத்தகாளிதம் போற்புருவ நிலையைப்புகார் மறைக்கும்
கன்ன வடியிற் பெருநரம்பு கபால முறைந்தாற் கண்மறையும். 909

### இரட்சை
### இரத்தம் குத்தி வாங்க

நாலா யிரத்து நானூற்று நாற்பத் தெட்டு நரம்புக்கும்
மேலா யிருக்கு மொருநரம்பு விளையு மதிலோர் கூறுவிட்டுக்
கூருய் மிகுதி நல்லோர்கள் குணபா டத்தின் படியாக
நாரா சத்தை நடுநிறுத்தி நயன விதியின் படிபாரே. 910

கழுத்தைக் கட்டிக் கண்புரளக் கண்ட நரம்பி லிருமூன்றிற்
பிரித்தே யறிந்து நடுநிலையிற் பின்னி விழுந்த நரம்பினிலே
குறித்த பொழுதே சத்திரத்தாற் குத்தி யிடவே யிரத்தம்போம்
மறைக்குங் கபாலம் வாராது மறைந்த கண்ணுந் தெரிந்திடுமே.

### மருத்துவம்
### நயனபூபதி உருண்டை

கொடுப்பையின்வே ரதிமதுரங் கூவிளங்காய்ச் சதையுங்
குலமிளகிந் துப்புடனே கோகனக வேரும்
அடுத்தகடுக் காய்ப்பருப்பு நெல்லியின்காய்ச் சாற்றி
லரைத்துருட்டி யாயிழைபா லாலெழுது வீரால்

எடுத்துவிழிக் கொண்ணுத கண்ணும்வெளி யாகு
மிருமாலே யிமைத்தடிப்பு முடமயிருந் தீரும்
படைத்தசிவ னருள்பேனும் பழையவடி யார்கள்
பாவமெனத் திமிர்காசம் படுகடலில் விழுவமே. 912

## நயனபூபதித் தைலம்

சித்தாமுட்டி பேராமுட்டி சிறுகீரை முசுமுசுக்கை சீந்தில் வில்வம்
முத்தமுசிர்நற்பசளேயோரிதழ்த்தாமரைகுதிரைமொழிநீர்ப்பூலா
சித்தமகிழ்சீதேவிசெங்கழுநீரிருவேலிசீர்பொற்காணி
மெத்துநிலக்குமிழிவைவேரொனறிரண்டுகழஞ்சாகவிரும்பிக்கொள்ளே.

கொள்கையாநெடுவடலியதிற்குருகுகோகனகவளேயந்தானும்
விள்ளுசதாவேரியெலுமிச்சையினிற்பழமிவைசள்வேண்டுஞ்சாறு
தெள்ளுமிளநீர்பசுப்பாலீர்படியாமற்றவையோர்படியாய்ச்சேர்த்தே
எள்ளெண்ணெமிரண்டுபடி யொருபாண்டத்திட்டதிலேகற் கங்கேண்மின்.

ஏலமிலங்கமதிமதுரமொடுநாகமுகை யெழில்வாசிகோட்டமுடனே
மேலுமுறுசண்பமுகைசதகுப்பையிருவேலிவேண்டுகிளியூறலதுவும்
கோலமுறுகுங்குமமரத்தையிருசீரகங்கொத்தமலிவேவதாரு
சீலமுறுதிப்பிலியின்மூலமொடுசெவ்வள்ளிசெஞ்சந்துகணிதவேதி.

சந்தனங் கிராம்பு ஞாழல் சரக்கிவை சமம தாகச்
சிந்திடா திடித்து மெல்லச் செவ்விள நீராலாட்டி
அந்தநற் றயிலத் திட்டே யடைவினிற் காய்ச்சி மேலாய்
வந்துறு பதந்தப் பாது வடித்துநன் மிளகுத் தூளே. 916

ஒருபிடி யிடித்த ரித்தவ் வெண்ணெயி லுறக்க லக்கி
வருமுறை தேய்த்து மூழ்க வகுத்திடுங் கபால ரோகம்
தெரிவிழி யுரோக நாசி சேர்ந்தநீர்ப் பாய்ச்ச லாதி
ஒருவுமென சித்தர்வேத முரைத்திடு முண்மை யாமே. 917

## நயனசஞ்சீவித் தைலம்

புள்ளிக் குமரி மடறன்னிற் பொருந்துஞ் சாறு பசுவின் பால்
பொன்னுங் காணி சிறுகீரை புகலுங் கோவை யோரிதழ்நீர்
வள்ளிக் கிழங்கு போந்தைமடல் வனச வளேயங் கர்ப்பூர
வல்லி தாழை யின்விழுது வழுத்துந் தொங்கின் குரும்பைநீர்
அள்ளிக் குடிக்கு மதிலிளநீ ரரிய குணஞ்சேர் கரிசாலே
அவைபன் மூன்று மொருநாழி யாகக் கூட்டி யவற்றுடனே
எள்ளேக் கழுவி யெடுத்திடுநற் றயில மாறு படியாகு
மியனற் சந்தம் வெட்டியின்வே ரிலாமிச் சறுகு சிற்றுமுட்டி.

சீந்திற் றண்டு கூவிளேவேர் சேரு முத்த நன்னரி
சீதை கோட்ட மதிமதுரந் தேவ தார மகிலேலம்
ஆய்ந்து வகைக்குப் பலமைந்தா யவற்றை யிடித்தே யிருதூணி
யறலே விட்டே யெட்டொன்று யடைவிற் கூட்டி யதிற்கற்கம்

சாந்து மஞ்சண் மரமஞ்சள் தகரங் கோட்ட மிருசீரஞ்
சாதிக் காயோ டிலவங்கந் தக்க கிராம்பு செண்பகப்பூ
ஏந்து முலையாய் வெட்டியுசி ரியலா றேரிசி நாகப்பூ
வெழில்சே ரமரர் தாருவகி லினிய மதுரம் பச்சிலையே. 919

இவையோ ரொன்று கழஞ்சாரு யிடித்துக் கரைத்து நற்பதத்தி
லிறக்கி வடித்து மேற்பொடிக ளினிய ஞாழல் புனுகுசட்டம்
குவைசேர் பச்சைக் கர்ப்பூரங் கோரோ சனையே கத்தூரி
கோட்டம்வகைக்குக்கழஞ்சிரண்டுகூட்டிப்பொடித்துமேற்றுவி
நவசே ராது முழுகிவர நயன ரோக மவற்றுடனே
நாடு மண்டை வரட்சியது நாசி ரோகம் பீனிசமும்
சிவனுர் நெற்றி விழியில்வருஞ் சேயோற் குரிய கதிரைமலை
சேருந்தவத்தர்வினைபோலத்தீர்ந்தேபோமென்றுரைத்தனரே.

நயனரோகம் முற்றுப்பெற்றது.

———

## தலைநோய் நிதானம்

### ஆறுவது

### வாய்நோய்

### 1. உதடு

உதட்டில் தசை, இரத்தம், நீர், மேதை என்னும் நான்கினும் வாதம் முதலிய முப்பிணிகளும் தனித்தனி கூடுவதாலும், அவை தம்முள் ஏறிக்குறைந்து தொந்திப்பதாலும் பலவகை நோய்கள் பிறப்பனவாம். அவற்றுள்:—

1. வாதம் அதிகரிப்பின் உதடு வெடித்து மரத்தலும் கரிய நிறம் தோன்றுதலும் உண்டாகும்.

2. பித்தம் அதிகரிப்பின் சிவந்த அல்லது மஞ்சள் நிறமான கொப்புளங்கள் தோன்றி உடைதலும் அழற்சியும் உண்டாகும்.

3. சிலேற்பனம் அதிகரிப்பின் உதடு வீங்குவதோடு வெண்ணிறமான கொப்புளங்கள் தோன்றி உடைதலும் புலால் நாற்றத்தோடு சீழ்வடிதலும் உண்டாகும். இனி அவற்றில்:—

தசை புறப்படுதலும், இரத்தம் மிகுந்து தோன்றுதலும், நீர் மிகுந்து தோன்றுதலும், நெய்த்தன்மையோடு கூடிய பளபளப்புத் தோன்றுதலும் ஆகிய இவற்றுல் தசைநோய் முதலிய நான்கன் வேறுபாடுகளையும் முறையே உணர்ந்துகொள்க.

அவற்றேடு அதரகுட்டம்-5 அதரபிளவை-5 முதலியவற்றை முன்னர்ச் செவிநோய் முதலியவற்றிற் கூறியவாறு பற்றி ஓர்ந்துணர்க. இவ்வாறு கூறியவற்றுள்,

சிலேற்பனம் தசையைப்பற்றி அதிகரிப்பதனுல் தோன்றும் கபசிங்கி என்பதும், அதரபிளவை ஐந்தனுள் வாதசிலேற்பனம் அதிகரித்துத் தோன்றும் அதரசிங்கி என்பதும் அசாத்தியமாவன. அன்றியும் சிலேற்பனமும் வாதசிலேற்பனமும் அதிகரித்துத் தோன்றும் அதரரோகங்க ளனைத்தும் தீர்தற்கரியன.

வாதம் முதலிய மூன்றும் இரண்டிரண்டாகக் கூடியேனும், மூன்றும் கூடியேனும் தொந்திப்பதனுல் அவ்வக் குணங்கள் கலந்து ஏறியும் குறைந்தும் தோன்றும் வேறுபாடு உய்த்துணரத்தக்கது.

## மருத்துவம்

### 1. ஈருள்ளி எண்ணெய்

ஈருள்ளிய நொச்சி பின்னு மியம்புகர்ப் பூர வள்ளி
காரெள்ளி லெண்ணெ யோடு கருதுசா றவையெ லாமும்
நேருள்ளி விட்ட ளாவி நிம்பத்தின் பட்டைத் தூளும்
சேருள்ளி யிரண்ட தான சீரகங் குக்கி லோடே. 921

தரைபயில் கீழ்காய் நெல்லி சமூலமுங் கலந்து காய்ச்சி
உரைபயில் பதத்தி றுத்தே யுதட்டினிற் பூசு வீரால்
கரையறு தசைநீ ராதி காட்டிய ரோக மெல்லாம்
விரைவினி லகலுமென்று விளம்பினர் முனிவ ரம்மா. 922

### 2. வெண்ணெய்க் களிம்பு

துத்தந் துரிசு குந்திருக்கஞ் சூதத் தோடு முடிதாரம்
மெய்த்தே யிவைகள் சமனெடையாய் வேண்டிப் டசுவின் வெண்ணெயினில்
வைத்தே யரைத்துத் தண்ணீராற் கழுவிச் சிமிழில் வைபூசப்
பத்து முதட்டு ரோகங்கள் பலவுந் தீரும் பான்மையிதே. 923

### 3. துத்தக் களிம்பு உதட்டுப் புண்ணுக்கு

ஒருபங்கு துத்தத் தோடே யுறுநிம்பப் பிசினும் பாதி
தருபங்கு பொடித்துக் கொண்டு சம்பீரப் பழத்தைச் சுட்டு
வருமந்தச் சாறு தன்னை வார்த்தரைத் தேரண டத்தின்
பொருமெண்ணெய் தனிற்கு ழப்பிப் போடப்புண் ணுறு மன்றே.

வெயின்முகத்தில் வைத்துப் பின் பூசுக.

### 4. அழற்சிக்கு

உமிப்பசளி என்று அறியப்படும் நிலப்பசளியை அரைத்துப் பசுவெண்ணெயிற் குழப்பிப் பூச அழற்சியோடு கூடிய கொப்புளம் முதலியன தீரும்.

### அதரகுட்டத்தின் குணம்

உதடு கருகி வெடித்துப் புண்ணுய் முளைகொண்டு வளரும், அழற்சி குத்து வலியோடு இரத்தம் சொரியும், வாயூறும் கண்டம் நொந்து அவ்விடத்திலும் தோன்றும்.

## மருத்துவம்

### 5. கடுக்காய்க் குழம்பு

கடுக்காய் 50 விதைநீக்கிப் பசுமூத்திரத்தில் இட்டு நாலொன்ருய்க் காய்ச்சி வடித்து, இருவேலி, சதகுப்பை, கோட்டம் வகை 1 பலம் பொடித்துத் தூவிக் குழம்புப்பருவத்தில் காய்ச்சி யெடுத்துப் பூச அதரகுட்டம் முதலியன தீரும். உள்ளுக்கும் உண்க.

### 6. கெந்தகத் தைலம்

புங்க மரத்தின் வேரதனிற் பொருந்தும் பாலோர் நாழியுடன்
தெங்கி னெண்ணெ யொருநாழி சேர்த்துத் துடரி புல்லாந்தி
தங்குங் கரிய சூரையுடன் செங்கத் தாரி யிவைவேர்கள்
பொங்குங் கெந்தி யெண்கழஞ்சு போதக் கரைத்து நாலாநாள்.

மெழுகுபல மொன்றரையை விட்டுப் பதத்திற்
பழுதின்றி யேவடித்துப் பாவாய்—மொழிவதுகேள்
சீலையிலூட் டிப்புகையைச் சேர்க்க வதரகுட்டம்
கோலமுடன் போமே குறி. 926

இந்நோய் கண்டவுடன் செப்புக்கம்பியினுற் சுட்டுக் கருக்கித் துரிசுக்காரம் போட்டு மேற்படி புகையைப் பின்விடுக. ஆயினும் இது தீராநோய் என்று கூறப்படுகின்றது. நாக்கு நோயில் கூறப்படும் நாராயண தைலம் முதலியன இந்நோய்களுக்குப் பொருந்துவனவாம்.

———

## 2. பல்

பல்லில்; பற்சுற்று, பல்லரணை, பற்புற்று, பற்குத்து, பல்வேவி, பற்சூலை, பற்புழு, பல்வாயு, பல்வாதம், பற்சுரோணிதம், பற்சியல், பல்லுதிர்வு, பற்சிராய், பல்லசைவு, தந்ததாளி, பல்நோக்காடு, பற்சாரம் முதலிய பலவித நோய்கள் தோன்றும். இவ்வாறு பல்லீறுகளிலும் அறிக.

(முன்னர்க் கூறியவைகொண்டு உதடு, பல், எயிறு, அலகு, கதுப்பு முதலிய இடங்களில் பிறக்கும் நோய்களை அறிந்து கொள்ளுதல் எளிதாகும் என்னும் கருத்தால் ஆசிரியர் அவற்றை விரித்துரையாது விடுத்துச் சிகிச்சைகளை மாத்திரம் கூறிச் சென்றனர் போலும்.)

பற்சந்திகள்தோறும் புட்பித்து துர்நாற்றத்தோடு கூடிய சீழ் வடிந்து கொண்டிருக்கும் தந்தபுட்பம் என்பது தீராதாம் (இந்நோய் பிரதிகளில் தந்தபுற்பம் என்று காணப்படுகின்றது.)

அலகு, கதுப்பு முதலிய இடங்களில் உண்டாகும் சூலை பிளவை அரணை முதலிய கொடிய நோய்கள், பலவும்,ஏனைய கண்,

காது, உதடு, நாக்கு முதலிய இடங்களிற் பிறக்கும் பல வகை நோய்களும் பல் நோயை ஏதுவாகக்கொண்டும் பிறப் பனவாம். அன்றியும் பல் ஈறுகளில் உண்டாகும் பலவகைக் கிருமிகளும் அழுக்கும் முதலியன உமிழ்நீரோடாயினும், உட் கொள்ளும் உணவோடாயினும் உட்சென்று இரைக்குடல் முதலிய இடங்களில் பலவகை நோய்களை உண்டாக்குவதன்றி மரணத் தையும் உண்டாக்கும். ஆதலால், பல்லை நோயின்றிப் பாது காப்பது மிகவும் அவசியமானது.

கொடுப்பரணை, உதட்டுப்பிளவை முதலிய தீர்தற்கரிய பல நோய்கள் அவ்வந் நரம்புகளோடு தொடர்புபட்டிருக்கும் பல்லை அறிந்து பிடுங்கிவிடுவதினுற் றீர்ந்துவிடும்.

## மருத்துவம்

### 1. பற்சுற்றுக்கு எண்ணெய்

இருவேலி யிலாசமிச்சுக் கீழ்காய் நெல்லி
யெருக்குத்த மாகாணி நத்தைச்சூரி
திருமேவு சிவன்வேம்பு சிற்றுமுட்டி
சிறுபீளை பேராமுட்டி சேர்ந்த வேலும்
பருவேர்கள் புடியொன்று கோட்ட முள்ளி
பகர்சந்தஞ் செண்பகப்பூக் கரிய சீரம்
உரைமேவு திப்பிலிசுக் கமரர் தாரு
வுறவடித்துப் பல்லடியி லடசிப் பூசே. 927

### 2. பல்லசைவு பல்லரணைக்கு உருண்டை

வேர்க்கொம்பு மிளகுமஞ்சள் கடுக்காய்த்தோ லிந்து
வெளுத்தலுடன் றிப்பிலிவெண் காரமிவை தாமும்
சீர்க்குதிரை வாலியொடு வேலியின்றன் பருத்தி
சிறப்பான பெருமருந்து சேர்ந்தநெடு வேரும்
பார்க்குநல்ல கொடிக்கழலின் பருப்புநிறை யொக்கப்
பசுந்தேனி லுண்டைபண்ணிப் பல்லடியி லடசி
ஏற்குமிள வெந்நீரி லேற்றுக்கொப் பளிக்கி
ளிளமதிபோ னுதலாய்பல் லிறந்தாலும் விழாதே. 928

### 3. வெள்வேலெண்ணெய்

உரைக்கும் வேலி னுறுதோலை யோதும் பலங்க ளைம்பதுகொண்
டுசித நீரு மிருபதுகொத் துகந்தே விட்டு வற்றியபின்
கரைக்குந்தண்ணீரிரண்டுகொத்துக் கலக்குமெண்ணெயொருகொ
கதித்த சரக்கு மதிமதுரங் கடிய வெள்ளி லோத்திரமும்
வரைக்குஞ் சிட்டி யோமமுடன் மருவு மேல மகில்சாதி
வளருங் காயோ டிலவங்கம் வயங்குங் கராம்பு பச்சிலையும்
அரைக்குங்குமிழின்வேர் கோரையம்போருகத்தின் முகையாத்தி
யலரும் புட்டு லோரொன்று வரையுங் கறஞ்சு மூன்றீட்டே.

ஈட்டிய ரைத்துக் காய்ச்சி வடித்தே யியல்பாக
நாட்டிய பல்லைத் தூதிலை வேரா லனமாகத்
தீட்டிய பின்னர்ச் செப்பிய வெண்ணெய் வாய்ப்பெய்தே
காட்டிய வம்முறை செய்திடு பல்லிற் கடுநோய்போம். 928

தீருமே தந்த மீதிற் சேர்ந்தவிற் புருதி சூலை
கூருமே தந்த தாலி கொடியபல் லரணை பல்லிற்
சாருமே நோக்காட் டோடு தயங்கு சீச்சியலுஞ் சுற்றும்
பேருமே குலுங்கும் பல்லும் பெலத்திடும் வாய்நாற் றம்போம். 929

மற்ருெரு பிரதியில் இவ்வெண்ணெய் வேறு செய்யுட்களால் கூறப்பட்டிருக்கிறது. சிற்சில வேறுபாடுகள் காணப்படுதலால் அவற்றையும் இதன்கீழ்த் தருகின்ருேம்.

வேலம் பட்டை விளம்பிடு பச்சையாய்
ஏல நூறு பலமிடித் தெட்டுறு
நாலு நாழி புனல்விடி நன்குற
வாலி தாக வடியிரு நாழியே. 930

ஆட்டு மெண்ணெ யிருபடி யத்துடன்
கூட்டி யோமம் பெருங்குமிழ் கோட்டமும்
நாட்டு தாரு வகில்குலக் காய்நிறம்
காட்டு மஞ்சிட் டியட்டி கிராம்புமே. 931

ஏலம் வங்க மியம்பிய பச்சைதற்
கோல மாத்தியிற் கொணிடிடு பூவும்வெள்
வேலின் வேரு மியல்வெள்ளி லோத்திரம்
மேலுங் கைப்பு வெறிகொள் புழுகுமே. 932

சொற்ற வாறு தொகுத்திடு முக்கழஞ்
சுற்ற மாமுறை கூட்டி யுவந்தெரி
பற்றி யேவடி பக்குவந் தன்னிலே
அற்று மாறு மரியபன் னேய்களே. 933

தூசி லேநணை சொற்பெறு வாயிடை
ஆசி லாம லடக்கி யிருக்கவே
தேசு லாம்பற் செனித்திடு நோயெலாம்
நாச மாமென் றுரைத்தனர் நாடியே. 934

பல்லி லேயுறு சூலை விரணமும்
அல்லல் செய்யுங் கிருமி யரணையும்
வல்ல கெந்தமும் வாயுவு மாதியாய்ச்
சொல்லு நோய்க ளனைத்துந் தொலையுமே 935

## 4. கருவேலெண்ணெய்

புன்னை கருவே னீர்ப்பூலாப் புங்கு நாவ லொதி மருது
பூவி னரசு முடகிளுவை பூலா வொடுசெங் கத்தாரி
மன்னும் வெள்வேல் பன்னிரண்டின் மருவும் பட்டை கருவேலின்
மதித்தபிசினும்பலமிரண்டுவகைக்குக்கூட்டி யெட்டொன்ருய்ப்
பன்னுமுறையேயெரித்றுறுத்துப்பகருமெள்ளிலெண்ணெயொரு
படிதான் கூட்டி யதிற்கற்கம் பகர்செஞ் சந்தம் பூதவர்க்கம்
உன்னு மமரர் தாருவுட னுரைக்கு முறைசேர் சம்பங்கி
யுரிய பட்டை யதுதானு முவந்து வகைக்குப் பலமொன்றே

பலஞ்சேர் கரிய சீர்விளங்கம் பகருங் கைப்போ டதிமதுரம்
பலைமூன் றேலம் வசம்புகளிப் பாக்கு வாசி யிலவங்கம்
குலஞ்சேர் தகர மஞ்சிட்டி கோட்ட மரிசித் திப்பிலியுங்
கொள்கஸ் தூரி மஞ்சளுடன் கூறுங் கிருமி சத்துருவும்
தலஞ்சேர் கடக சிங்கிமணந் தருசெண் பகத்தின் மலர்தானுஞ்
சாருங் கத்தக் காம்பிவைக டவரு தொன்று கழஞ்சிரண்டு
திலஞ்சே ரெண்ணெ யதனேடு சேரக் கரைத்து வடிபூசத்
தேருந் தந்த முறுபணிக டீர்ந்து பல்லும் பெலத்திடுமே. 937

## 5. ஒதியம்பட்டை யெண்ணெய்

வாரீர் மடவீர் பல்லடியின் மருவு முரோக மாற்றவகை
பாரீரொதிவேலிவையிரண்டிற்பட்டைகறுக்காய்குமிழ்கொன்றை
வேரோ ரொன்று பலமிரண்டு வெட்டி யிடித்த பொடியதனிற்
சேரீர் பதக்கு நீரதனைத் தெளியீர் நாலொன் றுனபின்னே. 938

பின்னே யெண்ணெய் நாழிவிட்டுப் பெருகுங் கோட்ட மதிமதுரம்
மன்னுங் கடுக்காய் கொத்தமல்லி மருவுங் கைப்புக் களிப்பாக்கு
மின்னே நெல்லி நிலவேம்பின் வேரோ ரொன்று கழஞ்சரைத்துச்
சொன்னேங்கரைத்துவடித்துப்பற்றுலக்கத்தூ தினிலைநருக்கே.

## 6. வெள்வேலெண்ணெய்

நருக்கித் தூது வளையிலையை நன்றுயடக்கிப் போட்டுப்பின்
நெருக்கி வடித்த வெண்ணெயைவாய் நிறையவலசிக் கொப்பளிக்க
அருக்கிக் கன்ன நோவுடன்பல் லடியி லிரத்தம் பாய்வதனுக்
கிருக்கும் வெள்வேற் பட்டைபல மிருபா னிடித்து நீர்செறியே. 940

செறித்துமுக் குறுணி நாரந் தீயதிற் றினமைந் தூறி
இறுத்தநா னுழி யானு லெண்ணெயு மிரண்டு நாழி
மறித்ததிற் கலந்து [1] நாற்பான் மரத்தினின் முகிழோ ரொன்று
குறித்திவை நாழி நாழி கூட்டிடு கற்கஞ் சொல்வாம். 941

---

1 நாற்பான்மரம்-அத்தி, இத்தி, ஆல். அரசு என்பர்.

சொல்லுகற் கடக சிங்கி தோன்றிய பலைதான் மூன்று
கல்லியே யுலர்ந்த மஞ்சள் கரியசீ ரகமோ ரொன்று
நல்லவாய்க் கழஞ்சு மூன்று நருக்கியே கரைத்துக் காய்ச்சி
வல்லியே வடித்து வாயில் வார்த்துக் கொப்பளிக்க நன்றே. 942

## 7. பற்கோதி குத்துக்கு

பொருந்துமுவாய்வேர்ப்பொடியுடனேபொற்பாரெருக்கம்பால்குழைத்துத்,
திருந்துமிதனைப்பல்லடியிற்றேய்த்துவெந்நீர்கொப்பளிக்கில்,
அருந்துமெயிற்றிற்குறைகரப்பனடுத்தவாதம்பற்கொதிப்பு,
வருந்தும்வாய்நோயிவைமாறிவலுவாய்ப்பல்லும்பெலத்திடுமே. 943

## 8. பல் வலிமைபெற

வெள்ள றுகாடா தோடையிலை மிக்க தூது வளம்பழமும்
உள்ளி வசம்பு கருஞ்சீர முடனே சிற்று முட்டியின்வேர்
கொள்ளுஞ் சந்தன நாகம்பூக் கோழி முட்டை யின்கருவில்
விள்ளுந் தைல மிதினுடே மிடுக்காம் பல்லு மெல்லியலே. 944

## 9. பற்கொதிக்கு

கருங்காலி யுறுவயிரஞ் சாய வேருங்
    கணக்காக மூன்றென்றாய் வற்றக் காய்ச்சி
வரும்நீரைக் கொப்பளிக்க வளைந்த பல்லும்
    வலுவாகிக் கொதிதீரும் வாய்வி ளங்கம்
மருங்காய்நிர்க் குண்டியிலைச் சாற்றி னாலே
    மகிழ்ந் தரைத்துக் கொப்பளிக்கச் சிறிய பீளை
விரும்பாயெட் டொன்றாக்கிக் கொப்ப ளிக்க
    மேவுபல்லிற் கொதிபலவும் விரைந்து போமே. 945

## 10. பொடி

கிராம்பு, வசுவாசி, சாதிக்காய், கொச்சியேலம், கடுக்காய், துரிசு, துத்தம், மாயக்காய் சமன் பொடி செய்து அமாவாசையிலன்று வெருகடி வாயிலிட்டிருக்க வாயூறி நீர்போகும். பற்கொதி மாறும். பல்லுப் பெலக்கும்.

## 11. பற்பேத்தைக்குப் பொடி

சேங்கொட்டை, துரிசு, கல்லுப்பு தனித்தனி சுட்டு எடுத்து, கைப்பு ஏலம் சமன் பொடி செய்து பற்கொம்பிட்டுத் தேய்த்தபின் பல்லிலிடப் பல்லும் பெலக்கும். பின் வாய் கொப்பளிக்க வேண்டாம்.

## 12. புகை

சாதிலிங்கம், சுக்கு, வசம்பு, சாம்பிராணி, சந்தனம், மிளகு, சாரணைக்கிழங்கு, எருக்கலம்வேர்ப்பட்டை இடித்து மண் சுங்கானிலாயினும் ஆவரைக் கட்டையினாற் செய்த சுங்கானிலாயினும்

வைத்து ஆவரை விறகின் நெருப்பிட்டுப் புகை குடிக்க. மிகுந்து நொந்தால் வேப்பெண்ணெயில் தோய்த்துக் குடிக்கப் பல்லுப் பெலக்கும்.

## 13. பற்புழுவுக்கு

1. பாகலிலைச்சாறும் சிறுவழுதலைச்சாறும் நல்லெண்ணெயும் கலந்து வாயில்விட்டு அலசிக் கொப்பளிக்கப் பற்புழு வீழும்.

2. காற்ருேட்டிவேர், உள்ளி, மிளகு, சுக்கு இவை சமன்; பனங்கட்டி கூட்டி அரைத்துச் சீலையிற் கட்டிப் பல்லி லடசப் பற்புழு வீழும்.

3. பசுச்சாணியில் முளைத்த காளானை நசுக்கிப் பிழிந்த சாறும் நல்லெண்ணெயும் கலந்து செவியில் விட்டு உள்ளங்கையி லேந்தியிருக்கப்பற்புழு வீழும்.

வட்டத் துத்தி சமூல முருவியும் வரளாரை பொடுதலை யோடுநற் சூரியும்
சுட்டுச் சாயபல் கரைத்து வடிகொண்டு சுருளக் காய்ச்சி வரட்டிய வுப்பையும்
திட்ட மாங்கறி யுப்பையுஞ் சேர்த்துமே தினம்வெந் நீரி லலசிப்பற்றேய்த்திட
எட்டு நாளைக்குட் பற்புழு நீங்கியே யெண்ணுங் குத்துவலியிவை தீருமே.

5. காரை மூங்கில் கொழுஞ்சியின் மூலமும்
நீரை நாலு படிக்கு நிரப்பியே
சேர நாலொன்று செல்லக் குறுகினுல்
ஊரை வாய்கொண் டுமியக் கிருமிபோம். 947

6. ஈச்சங்கொழுந்தும் இரண்டு மிளகும் உள்ளி வசம்பு கூட்டியரைத்துப் பல்லிற் புறத்தில் வைத்து, முழங்காலில் விளக்கெண்ணெய் தடவி இளவெந்நீரி லிருக்கப் பற்புழு விழும். பின்னர் முற்கூறிய பற்பொடி தைலம் முதலியன இட நன்று.

## 14. பற் சுரோணிதத்திற்கு

பல்லடியி லிரத்த மென்ருற் புங்கம் பட்டை
படர்வேலம் பட்டையுடன் முருங்கைப் பட்டை
அல்லறவிர் வசம்புகடுக் காயெ லாமு
மறுபதினைம் பலமுமொன்ருய்ச் சேரக் கூட்டி
மெல்லநீ யெண்குறுணி கஷாய மாக்கி
விட்டிடுமே ரண்டெண்ணெய் நாழி யொன்று
செல்லுமாங் கொடிவேலி திரிபலை யினேடு
செப்புமர மஞ்சணற்சீர ரகமு மாமே. 948

அதிமதுரந் தக்கோல மேலமில வங்க
மசமோத மெவச்சாரந் திப்பிலியுஞ் சுக்கு
மதிநிகரு முகமானே சிறுதேக்குக் காயம்
வசம்புவிழால் சோமனுப்பு மிளகினெடு முத்தம்

பதிமருவு தேவதாரு வாடுதொடா மூலி
பரிவுபெற வொருகழஞ்சு பண்புடனே தூக்கிக்
கொதிபெறுநற் பதமதிலே வடித்துவைத்து வாயிற்
கொப்பளிக்க வுறுசோரி குறைந்துபல்லு மிறுகும். 949

தேயும் பற்க ளசைவு குடைச்சல்போற்
செறுகு மேற்கெந்த தாளியுஞ் சுற்றதும்
ஆயும் பல்லிற் புழுவு மொழியுமே
யரிய சீனத்தின் காரமேற் றூவிடு
தோயு மெண்ணெய் முறைப்படி செய்திடச்
சோதி சேர்வடி வேலன் கதிரையின்
மேய வண்ண லருள்பெறு வித்தகர்
மேன்மை யென்ன விளங்கிடும் பற்களே. 950

15. நீர் வற்றிய தேங்காயை மெல்லியதாகச் சீவி உத்தமா காணி வேரும் சேர்த்துப் பிசைந்து வெயிலில் வைக்கத் தைலம் பிறக்கும். அதைப் பிழிந்து பச்சைக்கர்ப்பூரம் பொடித்துத் தூவிப் பல்லடியிலிடப் பல்லுப் பெலக்கும்.

———

### 3. நாக்கு

பந்த மாகும் பவநெறி யேவலின்
வந்த வாறு மருந்தும் வழுத்துதற்
கந்த மாதி நடுவில தாகிய
தந்தி மாமுகன் றருளிணை போற்றுவாம். 951

### நோய்வரலாறு

கற்புடைய மங்கையரைப் பெரியோர் தம்மைக்
கவிபாடும் புலவர்களைக் கடவு ளூலை
அற்புடைய நெறிகாட்டு மேன்மை சான்ற
வாலயங்க டமைமதியா தகந்தை யாலே
சொற்பயிலு நிந்தைமொழி வழங்குந் தீய
தொழில்படைத்தோர் கேடுசூழ்ந் துளவு சொல்வோர்
திற்றியிற்றீ விடங்கலந்த தீமை யாளர்
செப்பியவாய் ரோகமுற்று வருந்து வாரே. 952

### தீருமுபாயம்

வருந்தியே யுணவுகொள்ளுஞ் செயலு மற்று
மாண்டாலு முய்திபெறு வழியுங் காணூர்
பொருந்தியவல் வினைதீருஞ் செயல்பு ரிந்து
புண்ணியவைந் தெழுத்தோதிப் புனிதன் கோயில்

தெரிந்தமுறை வலஞ்சூழ்ந்து பணிக ளாற்றிச்
சிவனடியார்க் கடிமைசெய்து பசித்தோர்க் கீய்ந்து
மருந்தருந்தி னேய்தீரு மல்லாற் செய்யு
மருத்துவர்க்கும் வினைவேகம் வந்து தாக்கும். 953

(சிரரோக நிதானத்தைச் சார்ந்த நாக்குரோகம் முதலிய சில பகுதிகள் பிரதிகளில் வசன நடையிலேயே எழுதப்பட்டிருக் கின்றன. வசனங்கள் பிரதிகள்தோறும் வேறுபட்டிருப்பினும் குணங்கள் இரட்சை முதலியன பெரும்பாலும் ஒற்றுமையுடை யனவாகவே இருக்கின்றன். ஆயின் மருந்துகள் மட்டும் சில தவிர) ஒவ்வொரு பிரதியிலும் வெவ்வேருகவே காணப் படுகின்றன. இவ்வேறுபாடுகளை நோக்க; மூலப்பிரதியிலிருந்து அவற்றைப் பெயர்த்தெழுதியோர் தாந் தாம் விரும்பியவாறு செய்யுட்களை வசனமாகத் திரித்தும் தமக்கு வேண்டியதென்று காணும் மருந்துகளை மட்டும் தெரிந்தும் எழுதிக்கொண்டனர் என்று எண்ண இடந்தருகின்றது. வசனங்களைப் பொருள் மாறுபடத் தகுந்த எவ்வித மாற்றமுஞ் செய்யாது பிரதிகளிற் கண்டவாறே பதிப்பித்திருகின்றேம். )

நாக்கரணை, நாக்குப்புற்று, நாக்குப்பிளவை, நாக்குமேற்ருளி, நாக்கிரந்தி, நாக்குவிற்புருதி, நாக்கொட்டி முதலியனவாக நாக்கின்மீது வரும் நோய் முப்பத்துநான்கு வகைப்படும்.

அவை ஆண்களுக்கு நாக்கின் வலது புறத்திலும் பெண்க ளுக்கு இடது புறத்திலும் தோன்றின் மீளுதல் அரிதாம்.

நாக்குரோகம் முதலிய வாய்வியாதிகள் மிகக் கொடிய வினைப் பயனுல் உண்டாவன என்றும் தீர்தற்கரியன என்றும் கூறப் படுகின்றது. ஆயினும் அநேகம் தீர்ந்திருப்பதையும் கண்டோம், ஆதலால் நோய்கண்டவுடன், பரமசிவனை நம்பி நன்மனத்தோடு புண்ணியங்கள் புரிந்து கீழ்க்காணும் பல சூடு, புகை, மருந்து முதலியவற்றைத் தாமதமின்றிச் செய்துபார்க்கவும். சிவன்செயல் ஒருவருக்குந் தெரியாதென்றிறிக.

## நாக்கரணை, நாக்குப்புற்று, நாக்குப்பிளவை இவற்றின் பொதுக்குணம்

நாக்கின்கீழ் குறுணற்சோறுபோல் வெளிறின நிறத்தோடு புறப்படும். புறப்பட்ட உடன் இரு காதுகளினுள்ளும் குத்தும்; தலைவலியுண்டாகும், வாயூறி வணசிற்றள்ளும், நீர்வடியும், ஒங் காளம் உண்டாகும், பிடரி திமிர்க்கும், உடல் வெயர்வை கொள்ளும், சிலேற்பனத்தைப் பற்றும்; சிலேற்பனத்தைப் பற்று மலும் வெயர்வை ஓங்காளம் இவை இல்லாமலும் இருக்குமாயின்

நோய் விரைவில் மீளும் என்பதறிக. சிலேற்பனத்தைப்பற்றி அதற்குரிய மற்றைக் குணங்களையும் கொள்ளுமாயின் தீர அனேக நாட் செல்லும்.

நாக்கில் ஒரு புறத்தில் தடித்துச் சுண்ணும்புபட்டு வெந்தது போலப் புண்ணுய் முளைத்துப் பின் குமிழம்பழம் போலத் தோன்றிப் புண்ணுகும். நாத்திமிர்த்து நாடிபூட்டி விறைக்கும். காதுக்குள் குத்தும். வாயூறி வணசிற் றள்ளும். மிடறு வரளும். பேசில் நாத்தடுக்கும்.

## வாதொட்டி சிங்குநோய்

நாக்கடியிலும் உள்நாக்கிற் பக்கத்திலும் பலாப்பிஞ்சின் முட்கூர்போலத் திரண்டு தடித்து வாயூறி வணசிற்றள்ளும். நீர் வடியும். நாத்திமிர்க்கும். விறைக்கும். காதுக்குள் குத்தி கீழ்க் காதடியும் நோகும்.

## சர்ப்ப சிங்குநோய்

நாக்கின்கீழ் அடிப்புறத்திலே தடித்துப் புண்ணுய்த் திரண்டு கன்றி வீங்கும். நீர்வடியும், காதில் குத்தும், பேச உண்ண ஒட்டாமல் செய்யும்.

## அரிசிங்கு நோய்

நாக்கின்கீழ் ஒரு புறத்திலும் பல்லடிக் கருகிலும் குருக் கொண்டு தடித்துப் புண்ணுயரித்து வணச்சிற்றள்ளும். காதி னுள்ளே குத்தி யெரிந்து நோகும். நெடுநாட் சென்றபின் புறத் திலும் திரண்டு குத்தி வீங்கி அரித்து இரத்தமுண்டாய் இலந் தைப் பொட்டுப்போலப் பல கண்ணறைப் பட்டு வளர்ந்து உபாதி செய்யும். (இலந்தையியட்டுப்போல் என்றும் பாடம்) நாலு மூன்று வருடத்தில் அவலஞ்செய்யும்.

## அபத்தசிங்கு நோய்

நாக்கில் ஒருபுறத்தில் தடித்து இடிந்துப் புண்ணுய்க் குருப் பித்து வளர்ந்து வாய்நீரூறி, காதிற் குத்தி மிடறு கனத்து, பேச அருந்த ஒண்ணுமல் உபாதி செய்யும். வெளியிலும் தோன்றிப் பல முளை கொண்டு இரத்த முண்டாய், நாடி இறுக்கி விறைத்து நாத்தி மிர்த்து வரண்டு தண்ணீர் விழுங்கவொண்ணுது மூன்று வருடம் வேதனைப்படுத்திக் கொல்லும். மகாகொடிய வியாதி என்றறிக.

## அதரகுட்ட சிங்குநோய்

முன்னர்க் கூறிய அதரகுட்டம் என்னும் நோயுடையோர்க்கு நாக்கருகில் வெடித்துப்புண்ணுய் வளர்ந்து எரிந்து குத்தி இரத்தம் சொரிந்து உபாதி செய்யில் அதரகுட்ட சிங்குரோகம் எனப்படும்.

இங்ஙனம் கூறிய வாய்ரோகங்கள் எல்லாம் பொல்லாதகாலன் கைச் சூலமென்பர். அந்தச் சரீரமளவுக்குச் சிவபுண்ணியஞ் செய்க. பிராமணபோசனம் ஆயிரவருக்குக் குறையாது செய்விக்க. பசித்தவர்க்கெல்லாம் அன்னமிடுக. சிவாலயசேவையும் சிவனடியார்ச் சேவையும் செய்க. இவ்வாறெல்லாம் செய்தால் அந்தத் தீயவினை இனிவரும் பிறவிகளிலாயினும் தொடராது நல் வழியில் உய்க்குமென்பதறிக.

'செய்தவல்வினையைத் தீர்க்கச் சிவனன்றி மருந்துமுண்டோ'

ஆயினும் வாய்ரோகங்கள் தோன்றிய உடன் அவற்றிற்குரிய மருந்து செய்யாதொழியின், நாளொருவண்ணமாய் நோய் வளர்ந்து நாக்கை அரித்துத் தின்று அவலஞ் செய்யுமாகலின், இயன்றவாறு கன்ம நிவிர்த்திசெய்து மருந்தையும் உடனே செய்க என்றுராதலால், இனி அந்நோய்களுக்கேற்ற இரட்சை சிகிச்சை முதலியவற்றைக் கூறுவோம்.

## நாக்கறளை புற்று கிரந்தி புண் பிளவைக்கு இரட்சையும் மருத்துவமும்

நாக்குரோகம் தோன்றின உடனே நல்ல பொன்னினுற் செய்த [1] ஆழிச்சூட்டுக் கருவி [2] பொட்டுச் சூட்டுக்கருவி என்னும் இரு இரட்சைக் கருவிகளினுலும் இரட்சை செய்யுமாறு: முதலில் நோய் புறப்பட்ட இடத்தில் பொட்டுச் சூட்டுக் கருவியினுற் சுட்டு வெதுப்பி முளைகளைக் கருக்கியபின் ஆளிச்சுட்டுக் கருவியினுற் சூழ்ந்து சுடுக. கீழ் நாக்கிற் ருேன்றும் முளைகளையும் அவ்வாறே சுட்டுக் கருக்கிய பின் [3] பஞ்சாக்கினித் தைலம் சீலையிற் ருேய்த்துப் போடவும். இப்படி ஐந்துநாட் போட்டபின் வத்திராஞ்சனப் புகை பதினெரு திரி புகைக்க. பின் அட்டசூத பற்பம் நேரம் இரண்டுபணவிடை வீதம் பன்னிரண்டு நாள் காலை மாலை இரு வேளையும் தேனில் உண்டு முடித்தபின், பதினைந்து நாள் காலை மாலை நாலு நாழிகைக்குக் குளிர்ந்த தண்ணீரில் இருக்க.

## வாய்ப்புற்றுக்கு இரட்சையும் மருத்துவமும்

முளைகளை முன்போலக் கருக்கிய பின், காதின்கீழ் இரண்டங் குலம் விட்டும் நெற்றியின் மேலும், உச்சந்தலையினும் பொட்டுச் சூடும் பிடரிச்சுழியில் குறுக்குச் சூடும் சுட்டுப் புண்ணுனபின் நாராயணத் தைலம் எட்டு நாளைக்கு அப்புண்ணின்மீது போடுக.

[1] ஆழிச்சூடு-வட்டமாக மோதிரம் போன்ற இடைவெளியுள்ள சூடு.
[2] பொட்டுச்சூடு-வட்டமாகப் பணம்போன்ற இடைவெளியில்லாத சூடு.
[3] இங்குக் கூறப்படும் தைலம், புகை, பற்பம் முதலியன பின்னர்க் கூறப் படும்.

போட்டு மேற்படி தைலம் காசெடைவீதம் முப்பது நாள் காலை மாலை இருவேளையும் உண்டு, இரு நாளைக்குச் சாராங்கப்புகை ஊட்டுக. பின் வச்சிரக்காயக் குளிகையாகிலும் அட்டசூத சிந்தூர மாகிலும் உண்ணப் புழுக்கள் வெளிப்படும்.

பின்பு பெருமருந்துவேரும் கல்லுப்பும் சமன்கூட்டி எருக்கலம் பால் வார்த்தரைத்துப் பல்லடியிற் றேய்த்து, பனைவேர் தென்னை வேர் நாயுருவிவேர் சமனிடித்து நாலு நாழி தண்ணீர் விட்டு ஒரு நாழியாக வற்றவைத்து வாய் கொப்பளிக்க. இவைக்கெல்லாம் உப்புப் புளி கிரந்திப்பண்டம் நீக்கிப் பால் நெய் கூட்டிப் பத்தியம் செய்க.

மேற்படி புகையினால் வாயில் உபாதி தோன்றில்— கொவ்வை யிலை, தென்னங் குரும்பை, நறுத்தாளியிலை மூன்றும் சமன் கூட்டி யரைத்துப் பசுவின் வெண்ணெயில் மத்தித்துப் பல்லடியிலும் நாக் கிலும் பூசி, எருக்கலம் வேரும் அமுக்கிரா வேரும் அவித்து வாய் நிறைய விட்டுக் கொப்பளிக்க வீக்கம், புழு முதலிய உபாதிகள் ஒழியும்.

## நாக்கொட்டி நாக்குச்சிலந்தி உண்ணாக்கு முதலியவற்றிற்கு இரட்சையும் மருத்துவமும்

நாக்கில் நோய் தோன்றிய இடத்தில் பொற்கம்பித் தூண்டிற் கருவியினாலும், கண்டத்தின் இருபுறத்தும் பொட்டுச் சூட்டுக் கருவியினாலும் இரட்சை புரிந்துபின்; பொரிகாரம், பெருங்காயம், துரிசு, இந்துப்பு, நவச்சாரம், துத்தம் என்னும் ஆறு சரக்கும் சமன் கூட்டி எலுமிச்சம்பழச் சாற்றாலரைத்து, எருக்கலம் பாலூட்டி உலர்த்திய சீலையிற் தடவித் திரியாகச் செய்து தொண்டை அளவுக்கும் ஏற்றி ஒரு நாழிகை கழிந்த உடன் திரியை அகற்றி விட்டு வெந்நீரை வாய் நிறையக் கொண்டு அலசிக் கொப்பளிக்கவும்.

இங்ஙனம் ஐந்து நாளும் ஒவ்வொரு வேளை திரியேற்றி வாங்கி முன்போலக் கொப்பளித்துவர நாக்கொட்டி சிலந்தி உண்ணாக்கு முதலியன கரைந்து புண்ணாகும். பின் பத்து நாள் காலை மாலை வத்திராஞ்சனப் புகை ஊட்டி வர நாக்கிற் புண்ணும் கண்ட ரோகங்கள் பலவுந் தீரும்.

இங்ஙனம் வாய் ரோகங்கள் கண்ட உடனே அவற்றிற்கேற்ற சிகிச்சை இரட்சைகள் செய்து நீக்காது தாமதப் படின் நோய் விரைவில் அதிகரித்துக் கீழ் நாக்கிற் பற்றிப் பல்லடியிலும் கொடுப் பிலும் அறை வகுத்துக் குழியாகும். கீழ் நாக்கிலும் அவ்வாறே அறை வகுத்துக் குழியாகும். நாக்கை நாளிலே அரித்துத் தின்று

வரும். நாக்குச் சமைந்தால் மேல் நாடியையும் பற்றும். பற்றி அறை வகுத்தால் மரணமாகிற குறியாயிருக்கும். ஒரு புளியிலை அகலத்துக்கு நாக்கிருந்தாலும் பரிகாரம் பண்ண இடமுண்டு.

இந்தப் படி வியாதி கோவித்திருந்த காலங்களிலே செய்ய வேண்டிய இரட்சை முதலியன செய்து துவரெண்ணெய் ஒடு வெண்ணெய் வைத்துச் சீலையில் மருவிப் போட வியாதியும் மாருமல் வணசிலும் அதிகப்பட்டிருந்தால் செய்ய வேண்டிய பரிகாரம்:-

காரம் போட்டு எண்ணெய்ப் பற்றையும் புண்ணில் அழுக்கையும் வாங்கி நீக்கி விட்டு, புண்ணை வெளியாக்கி, நாளி வங்க சிந்தூரக் குழம்பு போட வகை:—

## நாளி வங்க சிந்தூரக் குழம்பு

வங்க சிந்தூரமும், ஆவரையில் ஐந்து வகையும், நன்னாரி வேரும், [1] சிந்தூரமும் சரியாகக் கூட்டி மொந்தன் வாழைப்பூவிற் பாலும் முலைப்பாலும் விட்டு ஒவ்வொரு நாளரைத்துக் [2] கவணச் சீலையில், நாவற் கொழுந்தில், வெற்றியில், அரசங் கொழுந்தில் வெண்ணுட்டங் கொழுந்தில், மருதங் கொழுந்தில் இவைகளிற் றடவிப்போடும்பொழுது அழுக்குக் கஞ்சி தண்ணீர் நிறையப் பருக்கிப் போகாதிருந்தால், சங்கினுலும், வெற்றிலையினுலும், செப்புத் தகட்டினுலும் அன்னசாரம் செல்லும்படி உபாயம் பண்ணிக் காலமே நிறையக் கொடுத்துப் பின் குழம்பு போடவும். ஆட் பேசாமல் சிலும்பாமல் உச்சிப் பொழுதுமட்டும் கிடக்கவும்.

உச்சிக்குப் பிறகு மருந்தை எடுத்துவிட்டு உப்பரைத்துப் பல்லு விளக்கி, அமுக்குராக் கிழங்கு, பிரப்பங் கிழங்கு, [3] கத்தூரி இவை மூன்றும் ஓரளவாய்க் கொண்டு இடித்து ஒரு பானையிற் போட்டு எட்டுப்படி தண்ணீர் வார்த்து நாலொன்ருய்க் காய்ச்சிக் கொப்பளிக்கவும். பின்னையும் கஞ்சி பருக்கி இந்தப் படி குழம்பு போட்டுப் பொழுது புகுந்து நாலு நாழிகையிற் பின் எடுத்துப் பின்பும் அந்தத் தண்ணீர் வார்த்துக் கொப்பளித்துக் கஞ்சி பருக்கி இப்படி இருபத்தைந்து நாட் குழம்பு போடவும். போட்டால் நாக்கு வளரும். சியலும் அழுக்கும் மாறும். புண்ணும் எங்கும் மேவி ஒத்திருந்தால் உள்ளுக்கு இரச பற்பம் கொடுத்து இருபத்திரண்டு திரி பதினெரு நாட் புகைக்கவும்.

---

[1] சிந்தூரம் என இரு முறை கூறியதனுல் எல்லாம் கண்ட அளவு வங்க சிந்தூரம் என்பது பொருளோ அல்லது சிந்தூரம் என வேனென்ருறைக் (முன்னர்க்குறித்த அட்டசூத சிந்தூரத்தை) கருதினரோ என்பது விளங்கவில்லை. [2] கவணச்சீலை-புண்ணுக்கு மருந்திட உபயோகிக்கப்படும் ஒருவகைச்சீலை. [3] கத்தூரி மஞ்சள் போலும்.

இந்தக் குழம்பிற் புகையிற் பல்லடியிலே கட்டிப் புண்ணுயிருந்தால் :—

தென்னம் வேர், தென்னங் குரும்பை, பனை வேர்,—பாளை, நன்னாரி வேர், அமுக்குராவேர் இவை இடித்து இரண்டுபடி தண்ணீர் வைத்து ஒரு படியாகக் காய்ச்சிக் கொப்பளிக்கவும். இதரக்கட்டு மாறிப் புண்ணு மாறும்.

இந்த இருபத்தைந்து நாளும் புறத்துக்குப் பஞ்சாக்கினித் தைலமிட்டு, உள்ளுக்கு இரச பற்பம் கொடுத்து வரவும்

இனிப் புண்ணிற் குத்தும், விருண்டுதலும், கிரந்திக் கடியும், எரிப்புமுண்டாயிருந்தால் நோய் எலும்பைப் பற்றிச் சென்றதென்றறியவும்.

### அதற்குப் பூச்சு

எருக்கு, பெருமருந்து, மலைதாங்கி, அமுக்குரா இவை வேர் வகைக்கு ஒரு பாக்களவும், இரசம் இரண்டு மஞ்சாடியெடையுங் கூட்டி வேலிப்பருத்திச் சாறு விட்டு நன்ருக அரைத்துக் கொதிப்பித்துப் புறத்திற் பூசவும். இப்படி ஒருநாளைக்கு மூன்று முறை பதினைந்து நாள் பூசக் குத்தும், விருண்டுதலும், எரிப்பும் கிரந்திக் கடியும் மாறும்.

இவைக்குச் சொற் கேளாது வியாதி மீறிக் கோபங் கொண்டிருந்தால் இரத்தாஞ்சனக் குழம்பு கூட்டிப் போடவும்.

### இரத்தாஞ்சனக் குழம்பு

சாத்திரபேதி, அதிமதுரம், காசுக்கட்டி, களிப்பாக்கு, ஏலம் செண்பகப்பூ, கல்மதம், சாதிலிங்கம், அதிவிடயம் இவை எல்லாம் சமன் கூட்டிக் கண்டளவுக்கு வங்க சிந்தூரஞ் சமன்கூட்டி, சுத்தமான பசுவின் வெண்ணெய் இரண்டு எலுமிச்சங் காயளவு சேர்த்துக் கலப்புறத்திலிட்டுத் துத்தம், துரிசு, பொடி செய்து மேற்பொடி தூவிக் [1] கலத்தொடு கலந் தேய்த்து முப்பதுநாழிகை அரைக்கவும். நாக்கிலே வைத்துப் பார்க்க விருவிருப்புக் கொண்டால் மற்றநாளு மரைக்கவும். அரைத்து நாவில் வைக்கக் குளிர்ந்திருந்தால் பதமென்றறிந்து முன் சொன்ன அனுபானங்களிற் றடவிப் போடவும். இப்படி இருபத்தைந்துநாள் போடப்புண்ணுத் தீர்ந்து வியாதியுந் தீரும். இக் குழம்பு போடும் போது உள்ளுக்கு பற்பமும் இரச புறத்திற்குத் திரிபுகையும் கொடுத்து வரவும். (திரிப்புகை என்றும் சில பிரதிகளிலுண்டு—திரிபுகை எனில் திரியும் புகையும் எனவும் பொருள்படும்).

---

[1] கலம் என்று வருமிடந்தோறும் வெண்கலக்கலுவம் என்று பொருள் கொள்க.

மேல் நாடியிற் குரைவளை பற்றிப் புண்ணறை வகுத்தால், புளியங் கொட்டைத் தோலும் அதிமதுரமும் நறுநெய்யுங் கூட்டிக் கொதிப்பித்துப் பதத்தில் வடித்து நாசியில் நிறுத்தி மேல் நாடியிற் புகை விடவும்.

மேல் நாடியிற் பற்றிக் குரல்வளைப் புண்ணறை வகுத்தால் மரணமென்றறிந்து கொள்ளலாம். பக்கமோடி அறை வகுத்தால் பரிகாரத்துக்கு இடமுண்டென்றறிக. இப்படிச் சூக்குமமாக இந்த வியாதியைப் பார்க்க.

இதற்குத் தீராது நோய் மீறியிருந்தால் இராமபாணக் குழம்பு கூட்டிப் போடவும்.

## இராமபாணக் குழம்பு

நாயுருவி ஒரு கட்டுக் கொண்டு வந்து சுட்டுச் சாம்பலாக்கி ஒரு புதுப்பானையிற் போட்டுத் தண்ணீர் வார்த்துக் கையாற் கலக்கி, முப்பது நாழிகை மூடிவைத்துத் தெளிந்த தண்ணீரை இறுத்துக் கொண்டு, அதில் குன்றிப் பருப்பு ஒரு நாழி யிட்டு அறுபது நாழிகை ஊறவைத்துப் பின்பு நன்றாயரைத்து ஒரு கலத்திலிட்டு வெய்யிலில் ஒரு நாள் வைக்கவும். மற்ற நாள் எடுத்துச் சிற்றாமணக்கெண்ணெய் விட்டுப் பிசைந்து கொழுக் கட்டை போலே பிடித்து ஒரு பானையிலிட்டு, அந்தப் பானையினடிப் புறத்தில் நாலு மூன்று சில்லிகளிட்டுப் பானை வாய் மூடிச் சீலை மண் வலுவாய்ச் செய்து தாழக்குதிர்கொண்டு சேறுசெய்து, அதிலே ஒரு சட்டி வைத்து அதன் மேற் சில்லியிட்ட இரண்டு சட்டிகளடுக்கி மேலே மேற்படி பானையை வைத்து மேலுங் கீழும் விறகடுக்கிப் பத்து நாழிகை எரிக்கவும். எரித்தாற்றைலம் இறங்கியிருக்கும். அந்தத் தைலத்தை வேருன்றும் படாமல் மெதுவாக எடுத்துப் பதனம் பண்ணிக் கொள்ளவும். பின்பு;

மனிதர் தலைமண்டையோடெடுத்து நன்றாக இடித்து மேற் கூறிய பானையிற் போட்டு, பச்சிலைநாவி கழஞ்சு ஒன்று வெள்ளைப் பாஷாணம் கழஞ்சு ஒன்று, பொடி செய்து கூடப் போட்டு முன் சொன்னது போல எரித்துத் தைலம் இறக்கவும்.

இந்த இருவகைத் தைலங்களும் சமனெடை கலந்து கொண்டு, எருமை வெண்ணெய் இரண்டு எலுமிச்சங்காயளவு கலப்புறத்தி லிட்டு, மேல் மருந்து:- இரசம், கெந்தகம், சாதிலிங்கம், துத்தம், துரிசு, மனோசிலை, காந்தம், அரப்பொடி, அதிவிடயம், கல்மதம், செங்கழுநீர்கோட்டம், கைப்பு, களிப்பாக்கு, சாத்திரபேதி, தேவதாரம் இவை சமன் கொண்டு பொடி செய்து கூட்டிக் கலப் புறத்திற்றேய்த்து, வெண்ணெயும் கூடவிட்டுத் தேய்க்கவும்.

இப்படித் தொண்ணூறுநாழிகை தேய்த்துக் குழம்புப்பதமானுற் சீலையில் தோய்த்து விளக்குக்கொழுந்தினுல் ஐந்துவகையாகத் தோன்றில் பதமென்றறிந்துகொள்க. இளம்பதமானுல் வெளிறி எரியும். அந்தப் பதத்தில் புண் வலிகுத்து எடுக்கும். மேலும் தேய்க்கவும். பதம் முறுகினுல் சிவந்தெரியும். அந்தப் பதத்தில் உடம்பு காய்ச்சலெடுக்கும். ஐந்துவகையாக இருந்தால் வியாதியும் மாறிப் புண்ணும் பொறுக்கும். வெகு கூர்மையாகவிருந்து பதம் பார்த்து எடுத்துக்கொள்ளவும்.

இந்தக் குழம்பு போடும்பொழுது அன்னசாரம் நிறையக் கொடுத்து, உரல் உலக்கை சத்தப்படாமல், பூமி அதிர நடந்து கேளாமல், வாய்திறந்து பேசாமல், நாக்கெழும்பப் பேசாமல், கதவு சத்தப்படாமல் அசதி யொடுக்கி முன் சொன்ன அனுபானங் களிலே தடவி ஆறுநாட் குழம்பு போடவும். வியாதி பாதிக்குச் சரிவரப் பொறுக்கும். பன்னிரண்டு நாட்போட வியாதியும் மாறிப் புண்ணும் பொறுக்கும், இந்தக் குழம்பு வாயிலெழுந்த வியாதி முப்பத்துநாலுக்கும் போடவும். அன்ன சார மிறங்காத பேருக்கு இத்தக் குழம்பு போடாமல் மிஞ்சின பரிகாரங்கள் பண்ணவும். இது அன்னசாரத்தின் மேற் செய்யும் பரிகாரமென்றறிக.

## பூநாகத் தைலம்

பழத்தேங்காய் ஒன்று எடுத்துக் கண்ணைத் திறந்து நீரை யூற்றிவிட்டு முக்கால் மட்டும் நிலவேரை (பூநாகத்தை) அடைத்து வாய்மூடி எட்டுநாள் புதைத்துவைத்து, எட்டாம்நாள் எடுத் துடைத்துத் துருவி அதை எண்ணெயாகக் காய்ச்சி இளம் பதத்தில் வடித்து வைத்துக் கொண்டு ஒரு நாளைக்கு நாலுபண வெடை வங்கசிந்தூரம் எண்ணெயிற் குழைத்து மூன்சொன்ன அனுபானங்களிலே தடவிப் போடப் புண்ணுலர்ந்து மாறும்.

இந்த மருந்துகளுக்கெல்லாம் வியாதி பொருமல் மீறிக் கோபங் கொண்டிருந்தால் இரத்தினுதிக் குழம்பு கூட்டிப் போடவும்.

## இரத்தினுதிக் குழம்பு

இரத்தினம் ஒன்பது வகையும் ஒரளவாக நிறுக்கொண்டு பின் துத்தம், சாதிலிங்கம், சாத்திரவேதி, கல்மதம் இந்தநாலும் அந்த ஒன்பது வகைக்கும் சமன்கூட்டி, அதன்மேல் சந்திர காந்தம், சூரியகாந்தம், முத்து, நற்பவழம், பத்தரைமாற்றுப் பொன், எட்டுமாற்று வெள்ளி, நாகசெம்பு, ஈயம், அரப்பொடி, காந்தம் இவையெல்லாம் சமன் கொண்டு முன் சொன்ன பதின் மூன்றுக்கும் சரிகூட்டி, முலைப்பால் வார்த்து ஒருநாளும், புளியந் தேன் வார்த்து ஒரு நாளும், செவ்விளநீர் வார்த்து ஒரு நாளுமாக

அரைத்துப் பின் சுத்தமான பசுவின் வெண்ணெய் மருந்துகண்ட அளவு நிறுத்துக் கூட்டிக் கலப்புறத்திலிட்டுத் தொண்ணூறு நாழிகை கலத்தோடு கலந் தேய்க்கவும். பின் ஒரு எள்பிரமாணம் எடுத்துக் கண்ணிலிடப் பதமானல் கண்குளிரும், பதமில்லா திருந்தால் கரிசல் பற்றும். பின்னேயும் ஒருநாளரைத்துப் பதம் பார்த்து முன்பு சொன்ன அனுபானங்களில் தடவிப் போடவும்.

வாயில் எழுந்த வியாதி முப்பத்தினுலுக்கும், கண்ணில் எழுந்த வியாதி தொண்ணூற்ருறுக்கும் நாசியில் வியாதி பதின் மூன்றுக்கும் உதடு கதுப்பு முதலிய இடங்களிற் பிறக்கும் அரஃ, பிளவை, சூலை முதலியவற்றிற்கும், இந்தக் குழம்பு முன்பு சொன்ன அனுபானங்களிற் றடவிப் போடவும். இருபத்தைந்து நாட்கள் போட நிற்குமெனக் கண்டது.

உள்நாக்கு, உடைசிலந்தி, நாக்கொட்டி, சிற்றுஸேமாந்தை, பேருஸேமாந்தை, இரத்தமாரி, நாக்கரஸே, நாக்குக்கிரந்தி, நாக்கு மேற்கெந்ததாளி, நாக்குப்புற்று, நாக்குப் பிளவை, பற்புற்து, வாய்ப்புற்று, பற்சாரம், அசுகுணி, அழிநாக்கு, கன்னக்கிரந்தி, கன்னக்குருகு, கன்னப்பிளவை, கன்னப் புற்று, கன்ன சூலை பொன்முட்டி, உண்ணுக்குக்கழலை, கொன்னிப்பு, அழல், நோதல், கண்டமாலை, கோழைவிற்புருதி, சிலேட்டுமகிரந்தி இன்னம் சொல்லப்பட்ட வாய்ரோகம் முதலியவற்றை யெல்லாம் (முன் சொல்லியனவும் இனிச் சொல்லபடுவனவுமான) புகைகள், குழம்புவகைகள், சேர்வைகள், தைலங்கள், எண்ணெய்கள் முதலியவற்ருல் அளவறுத்துப் பார்க்கவும். நோய்கள் காலன் கைச் சூலமாயின் அவற்றிற்குரிய மருந்துகள் கந்தன் கைவேலாதல் வேண்டும்.

இனி, இந்நோய்களுக்குச் சொல்லிய தைலங்கள் புகைகள் எண்ணெய்கள் முதலியவற்றைக் கூறுவோம்.

## நாராயண தைலம்

[1] காட்டெருமைக் காய்[2]மாயன் கன்றெறிந்த மரத்தோலும்
கணியழிஞ்சிற் றேருடனேர் கணியத்திற் றுவைத்து
மீட்டுமளந் திவ்விரண்டு மரக்கால்தூ ளிட்டு
மிடாவொன்று துஸேத்தனில் விளிம்பளவாய் நிரப்பித்
தாட்டுகல சத்திலிரு சட்டிதுஸேத் தடுக்கிச்
சட்டியின்மேன் மிடாவைத்துச் சரியாமன் மூடி
ஊட்டியமன் சீலைசெய்தங் கொருநாணின் றெரியி
லுள்வெதும்பிக் கனன்றுகனன் றுருகிவிழுந் தயிலம். 954

[1] காட்டெருமைக்காய்-சதுரக்கள்ளிக்காய். [2] மாயன்கன்றெறிந்த மரத்தோல்-விளாமரத்துப்பட்டை.

தயிலத்தி லொருகூறு வேப்பெண்ணெய் கலந்து
தயங்கிய [1] நாய்க்காந்தப் பருப்பிரண்டு நாழி
பயி[2]னிம்ப காட்டத்திற் சுடுநீற்றி னீரிற்
பதினொருநா ளூறவைத்துப் பருப்பரைத்துப் போட்டே
அயிலாத வெருக்கம்பா லுழக்கிட்டுக் காய்ச்சி
யதுசிவக்கி லொருசிறங்கை [3] யரிசனத்தூள் போட்டு
மயிலான பதமாகி லிங்கழஞ்சு கெந்தி
வடிபதத்தி லைந்துகழஞ் சிரதமிடல் வழக்கே. 955

வளமாக வைப்பதுகா செடைதைலம் வகுத்து
மண்டலமுள் ளும்புறமு மதித்தளவாய்க் கொள்ளில்
பழசாக வரும்புற்று முப்பத்து நாலும்
பயில்சன்னி பதினெட்டும் பதின்மூன்று கரப்பன்
உளவாத மெண்பதுட னேடியவிற் புருதி
யொடுக்காய்ச்ச லுதரசல்லி யங்களியை யெல்லாம்
களவான வரையாப்புத் தொடைவாழை யாதி
கதிரவன்முன் பனிபோலக் கலைந்தகன்று விடுமே. 956

விடுமின்ன மொருவிதங்கே ளிருகூ றெண்ணெய்
மேற்றயில மேற்பொடியு மிட்டு மூழ்கில்
கெடுமண்டை வியாதிமண்டைக் கரப்பன் கோழை
கிரந்திநாக் குக்குருநோய் கபாலத் துள்ளே
அடுநாசி பிணிகையுட னுசி பீட
மடர்ந்தகபா லக்குத்தோ டான்பரிச ரோகம்
தடுமாறு [4] பனசையுடன் பலபிணியுந் தீர்க்குந்
தண்டுளப நாரணனார் தயிலந் தானே. 957

## பாடபேதங்கள்

பயினிம்ப காட்டத்திற் சுடுநீற்றினீரிற், பதினொருநாளூற வைத்து' என்ற அடி ஒரு பிரதியில் 'பயிலு நாயுருவியின்வேர் சுடுற்நீறினீரிற்பதினொருநாளூறவைத்து' என்றிருக்கின்றது. இத் தைலம் செய்வோரும் இருமுறைப்படியும் செய்கின்றனர். ஏற்பது கொள்க.

'நாய்க்காந்தப் பருப்பிரண்டுநாழி' என்பது 'இரவிகாந்தப் பருப்பொருபடி' என்று ஒரு பிரதியிலுண்டு.

'விடுமின்னமொருவிதங்கேள்' என்று தொடங்கும் கடைசிச் செய்யுளுக்குப் பதிலாக ஒரு பிரதியில் வேறுசெய்யுள் காணப் படுகின்றது. சில வேறுபாடுகளிருக்கின்றமையின் அச்செய்யுளை இதன்கீழ்த தருகின்றோம்.

---

[1] நாய்க்காந்தப் பருப்பு-குன்றிமணிப்பருப்பு. [2] நிம்ப காட்டம்-வேப்பம்விறகு. [3] அரிசனந்தூள்-மஞ்சள் தூள். [4] பனசை-கண்டமாலை வகையுள் ஒன்று.

போமின்ன மொருவிதங்கேள் சிரசில் வைத்துப்
பொற்புறவே முழுகிவரப் போகு நோய்கள்
ஆமண்டைக் கரப்பனுடன் மண்டை நோய்க
ளகநாக்கிற் குருநாசி பிணியி னேடு
தாமின்னங் கதுப்பிலுறு பிளவை சூலை
தலைவலிபோ நாரணனுர் தயிலத் தாலே
பூமஞ்சார் மின்னலிடைப் பொருவே லுண்கட்
பொற்றெடிக்கை யுடையநங்கை யிதனைப் பாரே. 958

### நிம்பசமூலத் தைலம்

பாரிலே நூருண்டு சென்ற வேம்பின்
பருவேரிற் பட்டைமரப் பட்டை தம்மில்
ஏருறுமுட் சிவப்பினெடு பூவுங் கொண்டே
யெடுத்தபல நூற்றிருபான் வீத மாகும்
சேருமதன் விதைமரக்கால் சேர்த்தி டித்துச்
சிறக்கமிடா வுண்ணிறைத் தயிலம் வாங்கி
நேரிடையே நிம்பவெண்ணெய் கலந்து கொண்டு
நெடுஞ்சூதங் கெந்தகமு மஞ்சட் டூளும் 969

தூளாக வகைக்கைந்து கழஞ்சு கொண்டு
தொன்மைபெறு மெருக்கம்பா லுழக்கு விட்டுந்
தூளாகப் பதமறிந்து தூவிக் காய்ச்சித்
தூக்கியதோர் காசிடைபத் தியமாய்க் கொள்ள
மீளாத குட்டமரை யாப்புச் சூலை
மிகுநாசி பீடமொடு சிங்க ரோகம்
தாளாத தலைச்சூலை வாயிற் புற்றுத்
தவிர்ந்திடு மூழ்குவையரைப் புவெந்நீ ராலே. 960

### ஆக்கிரமசிங்கத் தைலம்

ஆலமெனு நோய்களுக்காக் கிரம சிங்க
மாகியதோர் தயிலமெருக் கலையி னேடு
பாலுறுநற் சதுரத்தின் கள்ளி புங்கு
பரவுமுயர் காஞ்சூரை யழிஞ்சி வேம்பு
கோலமுறு விளாமுருங்கை முருக்குத் தானும்
குணமான மகிழ்கழற்சி செம்ம ணத்தி
ஏலுமிவை களிற்பட்டை கொட்டை யோடே
யினிமைபெறு தேங்காயோ டிலையின் கள்ளி 961

கள்ளிதனிற் பட்டையொடு கடலி ருஞ்சி
கனவிரையுங் கொடிக்கள்ளிப் பட்டை தானும்
துள்ளுகடற் சில்லரனர்க் குரிய வேம்புந்
தொக்கசேங் கொட்டையிலைக் கள்ளி தன்னில்

உள்ளபட்டை கள்ளிவிரை மரக்கா லொன்று
முற்றமற்றை விரையெல்லாம் படிதா னென்று
மெள்ளவிடித் தொன்ருகக் கலந்து கொண்டு
மேன்மையுள்ள விதிற்றயிலம் வாங்கு வாயே. 963

வாங்கவெரித் திடும்விறகு கள்ளி வேம்பு
வடிவான விளாவாலே சாம நாலு
தூங்காம லெரித்தெடுத்த தயிலத் தோடு
தூசற்ற வேப்பெண்ணெய் சமனுய்க் கூட்டித்
தாங்கெருக்கின் பால்சிறங்கை யரிச னத்தூள்
தான்சிறங்கை யிரசகெந்தி யைங்க ழஞ்சு
பாங்குடனே பொடியாக்கிப் பதத்திற் றூவிப்
பக்குவமா யெடுத்துமண் சாடி யுள்ளே. 964

உண்டுடனே பூசிமுழுக் காட்டிப் பார்க்க
வோடுமே பதினெட்டுக் குட்டஞ் சூலை
மிண்டுபெரு வியாதிசன்னி பதினெட் டோடு
மெத்துவலி பதினெட்டுங் கரப்பன் யாவும்
அண்டியவாய் வியாதிபதி னெட்டுப் புற்று
மடர்வாதஞ் சிங்கநோய் குறளை நோவும்
தொண்டர்பவப் பிணியகற்றிக் கதிரை மேவும்
தூயனருண் முன்மாயை போலப் போமே. 965

## ஆரோக்கியப் புகை

சொன்னவா ரோக்கி யத்தின் புகைதொடர் சூத மீயம்
பன்னுசா திலிங்கம் வெள்ளைப் பாஷாணந் துரிசு துத்தம்
மின்னரி தாரம் வெண்குந் திருக்கங்கெந் தகம்வெண் காரம்
நன்மனே சிலைவ கைக்கு நவில்கழஞ் சொன்று தானே. 966

தானெருக் [1]கிருந்தை தானங் கழஞ்சுபன் னென்றி னேடே
ஈனமில் சரக்குங் கூட்டி யிடித்தெருக் கலம்பா லூட்டும்
மானமாங் கலையிற் பன்னுன் குண்டையாய் வகுத்துக் கட்டி
ஆனதோர் தழலி லேழ்நா ளடரவே புகைத்தி டாயே. 967

புகைத்தபின் குளிர்ந்த நீரிற் பொருந்தவே தோய்ந்து பானெய்
திகைத்திடா தருந்தி யுப்புச் செழும்புளி கழித்துண் பீரேல்
பகைத்தபுண் சூலைக் கட்டுப் பகர்வாத கரப்பன் சூலை
மிகுத்தசீழ் பார மான வியாதிகள் பலவும் போமே. 968

---

[1] எருக்கிருந்தை-எருக்கலங்கரி.

## வத்திராஞ்சனப் புகை

பலமிடி யகற்றும் வத்தி ராஞ்சனப் புகையைக் கேண்மின்
சலமிகு மீய மொன்று தழலினி லுருக்கிச் சூதம்
குலவிய விருக மூஞ்சு கூட்டியே துரிசு துத்தம்
இலகுகெந் தகத்தி னேடே யியன்மனே சிலைமால் தாரம். 969

தாரமவெண் குந்தி ருக்கந் தகுமிவை கழஞ்சோ ரொன்றும்
ஏர்செறி கடுகு ரோணி யிருகழஞ் சிலிங்க மூன்று
சாரநற் பொடி தாக்கித் தகர்த்தெருக் கலம்பா லூட்டும்
சீரிய கலையிற் பன்மூன் ருக்கியே திரியாய்ச் செய்யே. 970

செய்புகை குடித்து மூக்காற் றிடம்பெற வுறிஞ்சி விட்டால்
துய்யதோர் நாசி பீடந் தொடர்நாசி கெந்தஞ் சூலை
கையுநாக் கொட்டி நாக்கிற் குறுமுடை சிலந்தி யுண்ணுக்
கையமில் கபால சூலை யடர்தலை மண்டை நோயும். 971

மண்டைசேர் கபாலக் குத்து வருபிர மியத்தி னலே
மிண்டிய வொடுவு மேகச் சலத்தினல் விரவும் வாதை
தண்டுறு கிரந்தி தண்டுப் பிளவையுண் மூலத் தோடே
அண்டிடு புறமூ லங்க ளழலூறு தசைமூ லந்தான். 972

தானமா மபானந் தன்னிற் றருபவுத் திரம்பீ சத்திற்
தேனுறு தட்டே போலத் திகழ்பவுத் திரமுந் தண்டின்
ஆனதோர் பவுத்தி ரங்க ளடர்குடல் வாத மற்றும்
ஏனைய வண்ட வாத மிவையெலாந் தீரு மன்றே. 673

## அட்டசூத பற்பம்

திருக்கிளர் சூதங் கெந்தி சேரறு கழஞ்சு வீதம்
பெருக்கநற் சுத்தி செய்து பேணிய கல்வத் திட்டே
முருக்கிலை யோடு கையான் மொழிந்திடு மாடா தோடை
நெருக்கிடுஞ் சாற்றி னேடு குமரிநீர் கடுக்காய் நீரே. 974

அரைத்திடிங் கிவற்றி னலே யைமூன்று தினங்க ளொன்றுக்
குரைத்திடு நாண்மூன் ருக வோதிய முறைவ ழாதே
கருத்துடன் வெயின்மு கத்தின் மூன்றுநாட் காய்ந்தாற் கோழி
பொரித்திடு முட்டைத் தோடு புகன்றநற் சுத்தி செய்தே. 975

வைத்திடு தூள்தான் மூன்று பங்குமுன் மருந்தோர் பங்கும்
புத்தமார் சட்டி தன்னிற் புகட்டியோர் சட்டி கொண்டே
அத்தினை மூடிச் சீலை மண்செய்தங் கடுப்பி லேற்றிப்
பத்தியோ டெட்டுச் சாமம் பருநெருப் பெரித்துப் பாரே. 976

எரித்திடிம் மருந்து நீறி யிருந்திடிற் பொடித்துக் கொண்டே
உரைத்திடு மிளகு சுக்கோ டுளபெருங் காய மோமம்
நிரைத்தவெண் கார மெல்லா நிறைக்கொண்டு பொடிய தாக்கிக்
கருத்துட னெரித்த பற்பத் துளவிதைக் கலந்து கொள்ளே. 977

## குக்கில் நெய்

சிவனார் வேம்பு பெருமருந்து சிற்ரு முட்டி கொடுவேலி
நவமார் சீந்தில் வேப்பின்றன் நலத்த பட்டை யுறுங் [1]காரி
குவைசேர் [2]வீழி யுடன் [3] வாசை கூறும் பேயின் புடோலதுவும்
தவரு முள்ளின் வழுதலையுந் தாமோ ரொன்று முப்பலமே. 978

பலமூன் றிடித்து முக்குறுணி [4] பயமே நிரப்பி யெட்டொன்ருய்
நலமே பெறத்தீ யிட்டெரித்து நன்ருய்ப் பிசைந்து வடிகட்டிக்
குலமார் பசுவின் னெய்நாழி கூட்டிக் கடுக்காய் வசம்புவிழால்
மலமே யகற்றுஞ் சவர்க்காரம் மஞ்சள் செவியம் வெட்பாலை. 979

[5] பொன்னார் தருவு மதிமதுரம் புகலு மூன்று கடுகோமம்
மின்னார் விரும்புங் கச்சோலம் வெறிசேர் கோட்ட மஞ்சிட்டி
பின்னே யிரண்டு சீரகமும் பேசு மரத்தை யிந்துப்பு
முன்னோர்மொழிந்தசேங்கொட்டைமுதுசெவ்வள்ளிசதகுப்பை. 980

துவர்ச்சிகை மெழுகு மல்லி தூயவா லுளுவை ரோணி
அவற்றுடன் சிறுதேக் கெல்லா மரைத்திடு கழஞ்சு வீதம்
குவித்திடு முலைநன் மானே குக்கிலோர் பலமி ரண்டு
[6] சிவைக்கினி தென்று முன்னோர் செப்பிடு மரத்தின் பட்டை. 981

முற்றி நூ ருண்டு சென்ற முதுமரந் தனிலே வெட்டி
மற்றினி யிடித்து நீரை வாரொரு குறுணி மேல்வாய்
உற்றிட வண்டு கட்டி யோதிய குக்கில் வைத்தே
வற்றிட வவித்தந நீரில் வளம்பெறக் கழுவு வாயே. 982

கழுவியே யுலர்த்தி நெய்யிற் கருகாமல் வறுத்தி டித்தே
எழில்பெறு கஷாயந் தன்னி லிட்டுநற் பதந்தப் பாமல்
வழிமுறை வடித்து நெய்யை வழங்குகா செடைதா னேரம்
அழிவுறு மிருமல் கோழை யானவாய்க் கிரந்தி மற்றும் 983

வாயி னுக்கினில் வந்திடு நோயெல்லாம்
மேய கண்டத்து மேவுங் கரப்பனும்
தீய பல்பிணி நாசியிற் றெக்கினில்
தேயு மென்று தெரித்தனன் மாமுனி. 984

இந்நெய்யில் பின்வரும் வேறுபாடுகள் ஒரு பிரதியிற் காணப் படுகின்றது.

சிவனார்வேம்பு முதலியன வகைக்குப் பலம் 1 °. தண்ணீர் தூணி. நெய் நாழி 2. கரைக்கும் சரக்குகளுடன் சிற்றமட்டி வேர், கொடுவேலிவேர், சீந்திற்றண்டு, சிவனார்வேம்புவேர், பங்கம்பாலை இவை வகைக்குக் கழஞ்சு 2. மற்றயவை முன்போல.

---

[1] காரி-கண்டங்கத்தரி. [2] வீழியிலை என்றும் பாடம். [3] வாசை, ஆடாதோடை. [4] பயம்-தண்ணீர், [5] பொன்னார்தரு-தேவதாரு, [6] சிவைக்கினியமரம்-வேம்பு,

இதற்கு, கிரந்தி கரப்பன் வகைகளும், உதடு, பல்லு, ஈறு, நாக்கு, அண்ணம், கதுப்பு, அலகு, செவி முதலிய இடங்களில் வரும் நோய்களும் மண்டைக் கரப்பன், கண்டமாலை, கண்டக் கரப்பன் முதலியனவுந் தீரும். உப்பு. புளி, கிரந்தி, வாயுப்பண்டங்கள் நீக்கிப் பத்தியம் வைக்க.

இரசம், அரிதாரம், துரிசு, சாதிலிங்கம் வகை கழஞ்சு 2. கெந்தகம் கழஞ்சு 4. திரிகடுகு, இருசீரகம், ஏலம், இலவங்கம், சாதிக்காய், கிராம்பு, வசுவாசி, இந்துப்பு, மனோசிலை, காந்தம், அக்கரா, வால்மிளகு, கோட்டம், சீனக்காரம், பொரிகாரம், நவச்சாரம், ஈரரத்தை, குங்குமப்பூ, சதகுப்பை, வெளுத்தற் பிசின், ஓமம், மல்லி, களிப்பாக்கு, செவ்வள்ளி, பெருங்காயம், உள்ளி, அபின், கடுக்காய், மாயாக்காய், சுக்கு, வசம்பு, அரப்பொடி வகை கழஞ்சு 1. கையாந்தரைச் சாற்றுல் மூனறுநாள் அரைத்து வெய்யிலில் உலர்த்திப் பொடிசெய்து கொள்க. வெருகடிப் பிரமாணம் தேனில் நாற்பது நாட்கொள்ள - வாய்வியாதி, கிரந்தி, கரப்பன், தொண்டைப்புற்று, அரிகரப்பன், அரிபிளவை, நாக்குரோகம் முதலியன தீரும். பத்தியம் பால், முருங்கையிலை-பிஞ்சு கூட்டவும். உப்பு புளி குளிப்பு முழுக்கு நீக்கவும்.

இரசபற்பம் என்று மேலே பலவிடங்களிற் குறிப்பிட்டது இம்மருந்தையே போலும்.

### வாய்க்கிரந்தியின் குணமும் எண்ணெயும்

கன்னங் காது வாய்கண்டங் கனத்துக் கிரந்தி திரண்டுகட்டில்
அன்னந் தன்னைக் கொள்ளாம லறவே நெருங்குஞ் சிலேட்டுமமும்
சொன்ன கடுக்கா யதனோடு துய்ய கருஞ்சீர் தூதுளைவேர்
இன்ன முத்த நன்னரி யிவையோ டெண்ணெ யெரித்துநக்கே.

### வாய்க்கிரந்தி, பிளவைக்குப் புங்கம்பாலெண்ணெய்

நன்றுநாக் கிரந்திக் கும்மே நல்கிய பிளவைக் குந்தான்
ஒன்றிய வெண்ணெய் கேளு முள்ளியக் கராவி னோடு
கன்றிய வெள்வேன் மிக்க காவிளாய் கண்டங் காலி
நன்றிசேர் தும்பை மாயோ னல்கிய துளசி சங்கே. 986

சங்குவெள் ளறுகு கீழ்க்காய் நெல்லியும் பேய்ப்பு டோலும்
புங்கம்பா லவுரி மண்மேற் பொருந்திய குமிழ்வே ரெல்லாம்
இங்கிவை யிடித்திட் டேநல் லெண்ணெயிற் காய்ச்சி வாயில்
அங்கதை யடக்கி வைத்தே யலசிக்கொப் பளிக்க நன்றே. 987

மேவிய பிளவைக் கெல்லாம் விரும்புமா காணிப் பஞ்சில்
தாவியே தோய்த்துப் போடத் தான்புழுப் புறப்பட் டோடும்
பாவிய துகிலிற் றேய்த்துப் பரிவுடன் புண்ணிற் போட
மாவடு விழியி னாளே மாறுமென் றுரைக்க லாமே. 988

## துருசெண்ணெய்

உரைத்த தோர்பிள வைக்கு நற்றுரி சுற்ற திப்பிலி மஞ்சளும்
நிரைத்த நாயுரு விக்கொ முந்துட னிம்ப முந்துளிர் நம்பியே
அரைத்ததாமணக்கெண்ணெயிற் கொதித்தானவுத்தமகாணியிற்
திருத்துபாலதி லூட்டியேயது சேர்த்தெடுத்தபினெண்ணெயே.

மேற்கூறியவாறு உத்தமாகாணிப்பால் போட்டு எடுத்தபின் இவ்வெண்ணெய் போடுக என்பது கருத்து.

வீழிவேர், கோரைக்கிழங்கு, கருஞ்சீரகம் நல்லெண்ணெயிற் கொதிப்பித்துச் சீலையிற் றேய்த்துப் போடவும்.

அதிமதுரம், புளியங்கொட்டைக்கயர், கையாந்தகரை, நெய்யிற் கொதிப்பித்தும் போடவும்.

## செங்கத்தாரி நெய்

உற்றவிரு மட்டிபுங்கு செங்கத் தாரி
யுடனசுவ கந்திவட்டுச் சிவந்த முள்ளி
மற்றுமிரு வேலியிலா மிச்சி மாயன்
மணிவிகண்டங் காரிமால் காந்தி யோடு
வெற்றிதரு மீருள்ளி யுடன் [1]று ருக்கம்
மிக்கதிரி கடுகுமுச்சீர் வெளுத்தல் கோட்டம்
பற்றியபீ நாறிகராம் புடன்செஞ் சந்தம்
பகர்வாசி சாதிகளிப் பாக்குக் கைப்பே. 989

கைப்புடனே யிவையெல்லாந் தூள தாக்கிக்
கடிகமழ்நெய் காயவைத்துக் கருகி டாமல்
செப்பமுடன் வேர்தூவிச் சரக்குத் தூவிச்
சீராக வாற்றிவைத்துக் காலை மாலை
வெப்பறவே யுள்ளருந்தி மேலும் பூசின்
மிடைவாயிற் கிரந்திமுதற் படுவன் வீக்கம்
இப்புவியோர்க் கெழுநோய்க ளனைத்துந் தீரு
மிருகண்டத் துறுநோயுந் தீருந் தானே. 990

## முருக்கிலைச் சாற்றி லெண்ணெய்

முருக்கு, பருத்தி, குப்பைமேனி, பொடுதலை, கோழியவரை ஈருள்ளி இவை சாறு எலுமிச்சைச்சாறுவகை படி $\frac{1}{4}$ நல்லெண்ணெய்

[1] துருக்கம்-குந்துருக்கும்.

படி 1. குந்துருக்கம், ஓட்டறை, துரிசு கூட்டி வடித்து, உள்ளுந் தின்று தலையிலும்வைத்து முழுகிப் பூச வாய்ப்புண் கிரத்தி தீரும்.

## நாக்குச்சிலந்திக்கு

செவ்விளநீர்மட்டைச்சாறு நாழி ½. விட்டுணுகிராந்திச் சாறு நாழி ½. வசம்பு, கருஞ்சீரகம், அக்கரா வகை கழ ½. கூட்டிக் காய்ச்சி வடிகட்டி ஏழுநாள் உள்ளுக்கும் குடித்து வாய்கொப்ப ளித்தும் வரவும்.

## வாலுளுவை நெய்

வாலுளுவை யரிசியுடன் சீந்திற் றண்டு
[1] வசம்பசுவ கந்தியிலா மிச்சின் வேரும்
ஏலுமுறை வருமாடா தோடை வேரு
மிவைமூன்று பலம்பதக்கு நீரி லிட்டே
சீலமுற நாழியயதாய் வடித்துக் கொண்டு
செப்பமுள பிரமியிலைச் சாற்றி னேடு
பாலினுறு நெய்நாழி யிரண்டு விட்டுப்
பகர்சிவதை யசுவகந்தி பங்கம் பாளை 991

செருந்திப்பூ நாயுருவி வேரி னேடு
சிறுமூலங் கரியசீ ரகங்கார் கோலும்
பொருந்துமுறை பலமுக்கா லிவற்றி னேடு
புகன்றிட்ட வாலுளுவை யுழக்குக் கூட்டித்
திருந்துமுறை யாய்க்கரைத்துப் பதத்தில் வெந்து
செவ்வேளை யடிபணிந்து வடித்த நெய்யை
அருந்துமுறை மண்டலத்திற் கரண்டி யுண்டா
லகன்றிடுமே யிருமலுட னீளை குட்டம். 992

நாக்கிலுறு நோயனைத்துந் தீரு மூமை
நாக்கதுவும் புரண்டுமொழி பேசு மின்னும்
வாக்கினெடு புத்திமிக வளரு மேனி
வடிவுநிறம் பொன்னுகு மிடற்றி னேசை
ஆக்குமிக வினிமையுறக் கலைஞானங்க
ளடைவிக்கும் விருந்தோம்பி யமர்வோர்க் கெய்தும்
பாக்கியம்போற் சுகம்வளரு மென்று முன்னுட்
பகர்ந்தனரம் மறையாய்ந்த பண்பி னேரே.

வல்லாரல் சாறு இரண்டு படி கூட்டிச் செய்க என ஒரு பிரதியில் எழுதப்பட்டு இருக்கிறது. ஆராய்ந்து செய்க.

---

[1] வசம்பைச்சுட்டுச் சாம்பலாக்கிப் பலம் மூன்று கூட்டுக.

### உள்நாக்கின் குணம்

இயம்புவ னுண்ணுக் குள்ளே யிடதாய் வளர்ந்து சுற்றி
நயம்பெற விருமி யீழை நருநருப் புடனே விக்கும
உயும்படி யில்லா தாக வூடழிந் திருமிக் கக்கல்
செயம்பெற நிற்கு மென்று செப்பினர் நூல்வல் லோரே. 994

### மருத்துவம்

தாமினி யிதற்குக் கேண்மின் றனித்தனி யைங்க ழஞ்சு
பூமிசேர் நேர்வா ளந்தான் பொன்னரி தாரத் தோடு
நாமமென் றுரிசு கூட்டி நருக்கிச்சூ ரணம தாக்கி
ஆமினித் தின்ன ரிந்து சமிக்குமென் றறைந்தார் நூலோர். 995

ஆலம்விழுதின் நுனி, கொடுவேலிவேர்ப்பட்டை, தொய்யில் வேர், நாயுருவேர், ஆமணக்கம் முத்தின் ஓடு சமனெடை பொடித்து உள்நாக்கில் அழுத்திப் பூச வாங்கும்.

தொண்டை அரித்தால், அதிமதுரம், செங்கழுநீர்க்கோட்டம், முந்திரிகைப்பழம், இலுப்பைப்பூ, பசுவின் பால், நெய், முசு முசுக்கைச்சாறு அரைத்துக் கரைத்துக் காய்ச்சிசீப்பதத்தில் வடித்துக் காசெடை நக்கவும்.

கொடிக்கழற்கொழுந்தை எருமை வெண்ணெயில் அரைத்து விழுங்கவும்.

வேப்பங்கொழுந்து ஒருபிடி, உப்பு அரைப்பிடி, வெள்ளுள்ளிப் பருப்பு 6 அரைத்து மூன்று நாள் அந்தி சந்தி தின்னமாறும்.

### காரம்

சுண்ணக்கல்லு என்னும் வெள்ளைக் கல்லைச் சுட்டுத் தண்ணீர் வார்த்து நீற்றி இசங்கிலை கூட்டு அரைத்து உண்ணுக்கிற்றடவக் கோழையாய் விழும். விழுந்தபின் புழுங்கலரிசியில் இசங்கிலை கூட்டியரைத்து உப்புச்சேராது அடை சுட்டுக் கொடுக்கவும்.

இசங்கு, முருக்கு, முருங்கை, முசுமுசுக்கை, கோவை இவற்றின் இளந்துளிர்களும் ஈருள்ளியும் குறுணையாக அரிந்து புழுங்கலரிசி மாவுடன் சேர்த்துப் பிசைந்து சுத்தமான பசு நெய்யில் அடை சுட்டுக் கொடுக்கத் தொண்டை யரிப்பு புண் மாறும்.

### புறக்கிரியை

முடிதும்பையிலையும் வெள்ளுள்ளியும் நசுக்கிப் பிடரிக்குழியில் நரம்பிலும் உச்சியிலும் மூன்றே முக்கால் நாழிகை தேய்க்கவும். இப்படி மூன்று நாள் தேய்த்து, உச்சிமயிரிற் பத்துப் பன்னிரண்டு பிடுங்கி எடுத்துவிட உள்ளுக்கு வாங்கும். மூன்று நாளும் அவ்விடங்களுக்கு நெய் பூசவும்.

கீழ்க்காய்நெல்லியிலேயும் வெள்ளுள்ளியும் அல்லது மாவிலங்கி னிலேயும் வெள்ளுள்ளியும் முன்போற் செய்து உச்சிமயிர் பிடுங்கி னுலும் உண்ணுக்குத் தீரும்.

கோழியவரைச் சாறு பிழிந்து அதில் வசம்பு பொடிபண்ணிப் போட்டு வெய்யிலில் ஒரு நாழிகை வைத்தெடுத்து உச்சியில் 6 நாள் மத்தித்து முன்போல் உச்சிமயிரைப் பிடுங்கிவிடமாறும்.

உண்ணுக்கு அதிகம் வளர்ந்திருப்பின், இச்சிகிச்சைகளினுல் எளிதில் வசப்படாதாதலால், சத்திர விதியிற் கூறியபடி அதற்குரிய கருவிகொண்டு அதன் முனையைச் சோதித்தேனும், இரட்சை விதியில்கூறியபடி இரட்சை புரிந்தேனும் நீக்குக. கருவியினுற் சோதித்து நீக்கின் மேற் செய்யவேண்டியவற்றை அந் நிதானத்திற் (சத்திரநிதானம்) கண்டறிக. இரட்சை முறையை மட்டும் இங்கெடுத்துக் கூறுவோம்.

## இரட்சை

அன்பினுற் றன்னை வழிபடு மடியார்க்
கருவினைப் பிறவிநோ யறுத்தே
யாண்டுகொண் டருளிக் கதிரையின் மேவு
மறுமுகன் சரணபங் கயங்கள்
துன்பற மலர் தூய் வழிபடல் புரிந்து
தூயபொற் கம்பியைக் காய்ச்சிச்
சொல்லுமுண்ணுக்கின் முனையுற வழுத்தித்
தோகையே பொட்டினுற் கழுத்தில்
தன்புற மிரண்டி லறிவுசெய் திப்பாற்
றகுபொரி காரமோ டிந்து
சார்ந்திடு துரிசு துத்தநற் காயஞ்
சாரமிங் கிவைசம மாக
நிம்பமார் பழத்தின் சாறுவிட் டரைத்து
நீடெருக் கலையிற்பா ரேய்த்த
நேரிய துகிலிற் பூசியே திரியாய்
நிகழ்த்திடு மாறினிக்கேண்மோ. 996

திரியதை யுண்ணுக் கதிலுற முன்னர்ச்
செப்பிய மூறைவழு வாமற்
றேனன்ன மொழியாய் வைத்தபி னகற்றித்
தீயினில் வெந்தநீ ரதனுல்
பரிவுற வலசிக் கொப்பளித் திடுவாய்
பயின்முறை யைந்துநாட் செய்தே
பகர்ந்திடு வத்தி ராஞ்சனப் புகையைப்
பத்துநாட் காலைநன் மாலை

இருபது திரியும் புகைத்திடப் புண்போ
மியல்புளி யுப்பிவை நீக்கி
யேற்றநற் பசுப்பா னெய்யுடன் முருங்கை
யிலையதன் பிஞ்சுமே யாகும்
தெரிவுற வதற்பின் குளிர்ந்தநீர் மூழ்கச்
செப்பினுன் றென்மலை யிருந்து
தீந்தமி ழாராய்ந் திலக்கணம் வகுத்த
செய்தவத் துயர்முனி தானே. 997

### புகை

கொந்தாளங்காய், சாதிக்காய், பவழப்புற்று, அக்கரா, சாதிலிங்கம் சமன்கொண்டு தூள்செய்து மண்ணினுலேனும் பூவரசந் தடியினுலேனும் செய்த சுங்கானில் அடியிற் பூவரசம் பூவைத்து அதற்குமேல் மேற்படி தூள் போட்டுப் பூவரசங்கரி நெருப்பு வைத்துக் குடிக்கவும். உப்புப் புளி நீக்கிப் பத்தியம் இருக்க உள் நாக்கு, வாய்வியாதி, கிரந்தி, கரப்பன் தீரும்.

### உள்நாக்கிற் கெந்தாளிக்கு நெய்

செண்பகப்பூ, கிராம்பு, நற்சீரகம், கோட்டம், அதிமதுரம், ஓமம், மாதுளம் பிஞ்சு சமனிடித்து நறுநெய்யிற் கொதிப்பித்துப் பூசத் திண்ணம் மாறும்.

### சூடு தணிய
### நீற்றுப்புசினிநெய்

[1] திருமறு மார்பன் கண்ணென முன்னுட்
சிவனடி யருச்சனை புரிந்த
சீரிய மலர்க்கு மூலமு [2] மதவேள்
செங்கையில் வில்லுடன் [3] வாளிற்
றருமொரு விழுது மாதுளங் கனியுஞ்
சாம்பல்சேர் வழையின் பழமுஞ்
சாற்றிடு முசுக்கை யோரிதழ் காணி
தரு [4] சிறு மட்டியின் வேரும்
கருதுமிங் கிவற்றின் சாறிள நீருங்
காட்டிடு முறைவழு வாமற்
கயல்பொரு விழியாய் தனித்தனி யெடுத்துக்
காணவே நாழியொன் றரையாம்

---

[1] திருமறுமார்பன்...............மலர்க்கு மூலம்-தாமரை வளையம்.
[2] மதவேள் செங்கையில் வில்-கரும்பு. [3] வாளிற்றருமொரு விழுது-தாழம்விழுது. [4] சிற்றுமுட்டிவேரை நன்கிடித்து அவித்துவிடுக.

பருகுறு பசுப்பா லதுவிரு நாழி
 பயின்றிடு நெய்யொரு நாழி
பண்புசேர் நீற்றுப் பூசினிக் காயிற்
 பயன்பெறு சாறிரு நாழி. 998

[1]நாழியொன் றுற்ற வெள்ளரிக் காயி
 னவின்றிடு சாறு[2] நீர்விட்டா
னலம்பெறு சாறு மொன்றரைப் பாதி
 நன்குற விவையெலாங் கூட்டி
வாழிய வடுப்பிற் காய்ச்சிநா லொன்ருய்
 வற்றிடிற் பசுதரு நெய்யை
வார்த்ததிற் கற்க மரத்தைகச் சோல
 மலையிரு வேலிலா மிச்சுக்
காழுறு சந்து திப்பிலி கோட்டங்
 கருதுசெண் பகமலர் நாரி
கிராம்புமஞ் சிட்டி விழாலதி மதுரங்
 கற்பெறு தகரமோ டேலம்
மாழையொண் விழியாய் மல்லி செவ்வள்ளி
 வருகுலக் காய்வசு வாசி
மதிதரு முப்புக் கூறில வங்கம்
 வந்திடு விடயம்வெட் பாலை. 999

சுவைதரு நெல்லிக் காயுட னெல்லாந்
 தோகையே யொருகழஞ் சாகத்
தொகுமுறை கூட்டி யரைத்ததிற் கலக்கிச்
 சுகந்தரு பதமுறை பார்த்து
நவையற வடித்துக் குங்குமப் பூவும்
 நல்லகோ ரோசனை யதுவும்
நாடிமேற் பொடிக டூவியே கரண்டி
 நாற்பது நாட்குறையாமல்
கவையுடன் சீனி சேர்த்துமே யுண்டு
 காக்கநற் பத்திய மினிதாக்
கதித்திடு சூடு பிரமிய மிருபான்
 கபமுறு மிருமலோ டீளை
அவையெலாந் தீரு மென்றுமா முனிவ
 ரறைந்தனர் மருந்துணுங் காலத்
தறைந்திடு [3] சிற்ரு முட்டியின் றயில
 மதுசிர மூழ்குத னன்றே. 1000

[1] வெள்ளரிக்காய்ச் சாறு ஒரு நாழி. [2] தண்ணீர்விட்டான் சாறு நாழி முக்கால். [3] சிற்ருமுட்டித் தைலம் பின்னர் பெறப்படும்.

## நீற்றுப்புசினி நெய்

நீற்றுப்பூசினிப்பழச்சாறுபடி-4, பசுப்பால் படி-3, கரும்பு, கையாந்தகரை, பொன்னுங்காணி, தாழைவிழுது, முசுமுசுக்கை, சாதாவாரி, செவ்விளநீர், தாமரை வளையம், முந்திரிகைப்பழம், வெள்ளரிக்காய், சாம்பல்வாழைப்பழம், மாதளம்பழம் இவை சாறு வகை படி-1, முத்தககாசு, அமுக்கிரா, வில்வவேர், சாரணை, கொட்டிக்கிழங்கு. சீந்திற்றண்டு, ஆடாதோடை, கண்டங்கத்தரி இவை வேர் ஒவ்வொரு பலம் எடுத்து இடித்து பதக்குநீர்விட்டு நாலொன்ருக் காய்ச்சிப் பிழிந்த நீர் இவையெல்லாங் கலந்து அடுப்பில் வைத்து எரித்துப் பாதி வற்றியபின். பசுநெய் படி 4 கூடவிட்டு, மேல் மருந்து-சாதிக்காய், மதுரம், கோட்டம், கோரோசனை, ஏலம், திப்பிலி, சுக்கு. இலவங்கம், அரத்தை, சதகுப்பை, இந்துப்பு, செவ்வள்ளி, இருசீரகம், வெட்பாலை, செண்பகப்பூ, குங்குமப்பூ, மல்லி, செஞ்சந்தனம் வகை கழ. 4 அரைத்து கரைத்து மெழுகு பதத்தில் வடித்து இரண்டு கரண்டி நெய் சீனி சேர்த்து மண்டல முண்ண இருமல், காசம், கோழை, உட்காய்ச்சல் இவை தீரும்.

இம்மருந்தை லேகியமாகச் செய்யவேண்டில்; சரக்குவகை கழஞ்சு-4, சர்க்கரை பலம் பத்து, நெய் தேன் செல்லத்தக்க அளவு விட்டுக் காய்ச்சிக்கொள்க.

## ஒடு எண்ணெய்

தேங்காயெண்ணெய் படி-1 புங்கம்பால் படி-½, கொடுவேலி, வேர் பாக்களவு அரைத்துப் போட்டு, மெழுகு ஒரு பச்சைப் பாக்களவு, துத்தம், துரிசு, இரசம், மிளகு, வெள்ளைக் குங்கிலியம் வகை கழஞ்சு-½ பொடி செய்து எல்லாங் கலந்து காய்ச்சவும். சிவந்து வெற்றிலை வெடிக்கும் பதத்தில் இறைக்கி வைக்க உறையும்.

## துவரெண்ணெய் 1

நீர்ப்பூலா, முட்பூலா, கான்றை, ஆவரை, புங்கு, எழு முள்ளு, சாயவேர், கடலடக்கி, துடரி, இவை வேர்; முட்கிளுவை, கல்லொதி, சிற்றகத்தி, இவை பட்டை; களிப்பாக்கு, கைப்பு, கடுக்காய், உலுவா, சீரகம், ஏலம், திப்பிலி, ஓமம், செவ்வள்ளி, செஞ்சந்தனம், துத்தம், துரிசு, வேம்பாடம், கொத்தமல்லி, அதிமதுரம், இலவங்கம் எல்லாம் சமன்; புங்கம் பட்டைச்சாறு ஒதியம் பட்டைச் சாறு, வெற்றிலைச்சாறு, நல்லெண்ணெய் சமன் கலந்து காய்ச்சிப் புண் தீரும் பதத்தில் வடித்துச் சீலையில் தடவிப் போடவும்.

## துவரெண்ணெய் 2

வெற்றிலை, பாகலிலை, இலவங்கப்பட்டை, ஓதியம்பட்டை, அரசம்பட்டை, வேப்பம்பட்டை, புங்கம்பட்டை, மாவிலங்கம் பட்டை இவை சாறு, நல்லெண்ணெய் சமன், செங்கத்தாரி, கொடுவேலி, சாரணை, துளசி, ஆடுதின்னுப்பாளை, புங்கு, வேம்பு இவை வேர், இரசம், வேம்பாடல், காசுக்கட்டி வகை கழஞ்சு—2, கெந்தகம், களிப்பாக்கு, துரிசு, கருஞ்சீரகம், வசம்பு, வெள்ளுள்ளி, சாதிலிங்கம் வகை கழஞ்சு—1

காய்ச்சி வடித்துப் போட வாய்ப்புண், உதட்டுப்புண், கண்டத்திற்புண் முதலிய புண்வர்க்கமெல்லாம் தீரும்.

## வாய் கொப்பளிக்கக் கியாழம்

புங்கம்வேர், ஆயில்வேர், சீதுழாய்வேர், தேவதாரு, அகில், திப்பிலி, அத்தித்திப்பிலி, சிறுபயறு அவித்து நித்தியமும் வாய் கொப்பளித்து வரவும்.

## பூச்சு

அரிதாரம், மஞ்சள், இந்துப்பு, அக்கரா, திரிபலை பொடி செய்து தேனிலாகுதல் நெய்யிலாகுதல் குழைத்துப் பூசவிம்.

வேப்பிலையும், மோரும், அல்லது குழிழ்வேரும் வெள்ளாட்டுக் கோமியத்திலரைத்துப் பூசவும்.

இவை செய்யுங் காலத்தில் பறங்கிக் கிழங்கு அவித்துக் குடித்துவர நன்மை செய்யும்.

வாய் நோய் முற்றுப்பெற்றது

---

## தலைநோய் நிதானம்

ஏழாவது

## கழுத்து நோய்

கண்டமாலை, கழுத்துமேற் கெந்தாளி, கண்டக் கிரந்தி, கண்டக்குருகு, பனசை எனக் கண்டத்தைப்பற்றி வரும் நோய்கள் ஐந்துவகை.

(இவ்வாறு பெயர்களை மட்டும் குறித்துவிட்டு, கண்டமாலை வகைகளின் குணங்களும் சிகிச்சைகளுமே பெரும்பாலும் இங்கு கூறப்படுகின்றன. கண்டக்கிரந்தி கிரந்திநோய்நிதானத்திலும் கண்டக்குருகு கரப்பன்நோய் நிதானத்திலும் கூறப்படுவன வாம். கெந்ததாளி, பனசை இரண்டும் சிரை நிதானததிலேனும், இரட்சை விதியிலேனும் பெறலாகும். கண்டக்கிரந்தி

கண்டக்குருகு என்பன கன்னக்கிரந்தி கன்னக்குருகு என்றே எல்லாப் பிரதிகளிலும் காணப்படுகின்றன.)

### கண்டமாலை 5

களகண்டமாலை, சுழுத்தைச்சுற்றிய கண்டமாலை, உட்கண்டமாலை, ஒருபுறக் கண்டமாலை, முள்ளுக்குத்தின கண்டமாலை எனக் கண்டமாலை ஐந்து வகைப்படும். அவற்றுள் களகண்டமாலை, கழுத்தைச்சுற்றிய கண்டமாலை இரண்டும் அசாத்தியங்களாம். ஒருபுறக் கண்டமாலை ஒன்றும் சாத்தியம். ஏனையிரண்டிலும் தீர்வன சில.

### அசாத்தியம் இரண்டில்

### 1. களகண்ட மாலையின் குணம்

சுற்றியே மிடறு கண்டஞ் சூழ்ந்திட வளைத்துக் கட்டிப்
பற்றியே மிடறெுன் றுக்கிப் பரந்திடு மடைத்து வீங்கும்
வற்றிடா துரத்து முட்டாய் வரவரக் கடின மாகிச்
செற்றிடுங் களக ளக்குற் றிகழ்கள கண்டமாலை. 1001

### 2. கழுத்தைச் சுற்றிய கண்டமாலையின் குணம்

கண்டத்திற் கிரந்தி தோன்றிக் கனத்துடன் திரண்டு வீங்கித்
துண்டித்து மிடற்றிற் கட்டித் துயர்செயு மிடற வைத்தே
மிண்டித்தான் கஞ்சி தண்ணீர் விழுங்கிடின் வணசி லுண்டாம்
தண்டித்த கண்டமாலை தான்செயுங் குணங்க டாமே. 1002

கண்டத்தை வளைத்துக் கட்டிக் களகளத் தடைத்து மூசி
மிண்டித்தான் முட்ட தாகி வீங்கிடுங் கடின மாய்நோம
உண்டநீர் மூக்கி லேறி யுபாதிசெய் தெட்டிற் பத்திற்
சண்டனூர்க் கிடமே செய்யுந் தான்சுற்றுங் கண்டமாலை. 1003

### ஒருபுறக்கண்டமாலையின் குணம்
### இது சாத்தியம்

ஒருபுறக் கண்டந் தன்னி லுற்றிடுந் துவார மொன்றாய்
மருவிறக் கட்டி வீங்கி வணசிலு நிறையத் தள்ளிச்
செருமியே யடைத்து முட்டாய்த் தியக்கிடு மயக்க மாகிப்
பருவுறு மெட்டா நாளிற் பயமில்லை யுடைத்தே மீளும். 1004

### உட்கண்டமாலையின் குணம்

கிரந்தியும் பரந்து மொய்த்துக் கிளர்கண்டத் தழுந்திப்புண்ணாய்
உரந்தரு மிடற்றி னுள்ளே யுறுதியாய்க் கனத்துக் கட்டிச்
சிரந்தனிற்கொதிப்புண்டாகித்திகழ்கண்டத்தடைத்துமுட்டாய்ப்
பரத்தெழும் வணசி லுண்டாய்ப் பரக்குமுட் கண்டமாலை. 1005

## முள்ளறுத்த புண்ணிற் கண்டமாலையின் குணம்

அறுத்துமுள் ளழுந்திற் புண்ணு யடைத்திடுந் திரண்டு கட்டிச்
செறுத்திட மிண்டி வீங்கித் தீமையாய்ப் பிடரி வாங்கி
இறுத்திடக் குத்தி வீசி யிறுக்கியே முட்ட தாகும்
பொறுத்திடுஞ் சிலது தீராப் பொருந்துறுங் கண்டமாலை. 1006

கண்டத்தி லெழுந்த நோய்கள் காலன்கைப் பாச மாகும்
மிண்டவே விடாது நல்ல மிருதுவா மருந்து சொல்வாம்
உண்டிடப் பாளச் சீலை யுள்ளுக்கே னுதி நெய்கள்
பண்டுசெய் யிரட்சை யாதி பதனமா யிருந்து செய்வீர். 1007

### இரட்சை

சொல்லிய கண்ட மாலை சூழ்கெந்த தாளி கண்டத்
தல்லல்சேர பனசை கண்டக் கிரந்திமேற் குருகோ டைந்தும்
வெல்லுறு மிரட்சை தன்னை விளம்புவன் சிவடி யென்பில்
வல்லியே பொட்டுச் சூடும் வளர்காதிற் கீழ்மூன் றிப்பால். 1008

பொட்டுச்சூ டிருபு றத்தும் பொருந்திய பிடரி மூட்டின்
திட்டமாய்க் குறுக்குச் சூடுஞ் செய்துநா யுருவி யோடு
தொட்டிடு வாழைத் தாறுஞ் சுட்டிடு சாம்பல் மஞ்சள்
இட்டமா யேரண் டத்தின் வித்திவை சமனெ டுத்தே. 1009

அரைத்துமேற் பூசி யாரோக் கியப்புகை யாறு நாளும்
விரைக்குழன் மானே யூட்டி வேண்டுபத் தியத்தி னேடே
உரைத்தநற் சூத பற்ப முண்டிடக் கிரந்தி யாதி
தெரித்திடு மைந்து நோயுந் தீருமென் றருளி னரே. 1010

இரட்சைக் கருவி பொன்னினுலேனும் செம்பினுலேனுஞ் செய்க. மேற்கூறிய பூச்சு இரட்சை செய்த புண்ணிற் பூசுவதாகும் அங்ஙனம் பூசிவரப் புண் அழுக்குக்கொள்ளும். பின் பஞ்சாக்கினி தைலம் அப்புண்ணிற்கும் மிடற்றில் வீக்கத்துக்கும் பூசவும். இரட்சை புரிந்த நாள் தொடக்கம் உள்ளுக்கு இரசபற்பம் கொடுத்துவரவும். உப்புப் புளி முதலியன நீக்குக.

### மருத்துவம்

#### 1. பாளச்சீலை

நெய்க்கொட்டான்பழம், இம்பூறல் சமூலம், அடம்புவித்து, மஞ்சள், துத்தம், துரிசு, சீனக்காரம், நிலக்குமிழ்வேர், கொறுக் காய்ப்புளி சமன்கொண்டு ஆடாதோடைச்சாறு விட்டரைத்துச் சீலையிற்றடவி வேப்பெண்ணெயிற் பொரித்து அடச நன்று.

மருக்காரம்பழம் நூறு பிழிந்து அச்சாற்றில் இந்துப்பு சீனக்காரம் துரிசுபொடிபண்ணித்தூவிச்சீலையிலூட்டி அடசவும்.

மாயாக்காய், திப்பிலி, நற்சீரகம், மதுரம், சாதிக்காய், செண்பகப்பூ இவற்றைப் பொடித்து மருக்காரம்பழச் சாற்றில் அரைத்துச் சீலையிலூட்டி அடசவும்.

## 2. கொதியெண்ணெய்

காரிகை யேல மிலவங்கன் கிராம்பு சாதிக் காயிருசீர்
சீரிய வோமஞ் சதகுப்பை திப்பிலி மதுரம் வெள்ளுள்ளி
நேரிய செஞ்சந் தனம்பூத நேரும் விருக்கங் களிப்பாக்குக்
கூரிய கைப்புச் செவ்வள்ளி கொதிப்பித் தடசி னுவறுமே. 1011

அறுமே திப்பிலி நற்சீரு மான கடுக்கா யதிமதுரம்
கறுவு வசம்பு கருஞ்சீருங் கடுகு ரோணிசெஞ் சந்தமஞ்சள்
நறிய மாயாக் காய்துத்த நல்ல துரிசு மிளகுள்ளி
சீறிய நன்னூர் குமிழ்கறுக்காய் கான்றை வட்டுத் தேடுகவே. 1012

தேடுந் தூது வளைமுட்பூல் சிறந்த வேரைத் தூளாக்கிக்
கூடுந் திலத்தி னெண்ணெயினில் கொதித்தே தின்று வடசிடுகில்
நீடுங் கரப்பன் கிரந்திகண்ட நின்ற வியாதி வேறும்பின்
கோடுங் குவடு நிகர்முலையாய் குறித்தே யிதனைக் கூறுகவே. 1013

துரிசுதுத்தங் களிகைப்புக் கடுக்காய் பாட
றுவற்சந்தந் திரிகடுகு மதுரஞ் சாதி
இருசீர கமுருக்குக் கான்றை வட்டோ
டிம்பூறல் கருஞ்சூரை நன்னூர் தூது
பெருமருந்து குமிழ்துடரி யாவிரை யின்வேர்
பிடியளவு தூள்திலத்தி னெண்ணெய் கூட்டிக்
கருதரிய கண்டத்திற் கரப்ப னுக்குக்
கற்றோர்க ளுரைத்தார்கள் கருதிச் செய்யே. 1014

### சூளிகை

சீனக்காரம், பொரிகாரம், இந்துப்பு, கெந்தகம், துரிசு, துத்தம், கோட்டம், மதுரம், அக்கரா, திப்பிலி, மிளகு, சுக்கு, கடுக்காய் வகை கழஞ்சு 3. அமுக்கிராவேர், புனரைப் பழம், கிளுவம் பட்டை, இவை சரிகொண்டு எலுமிச்சம்புளி, வேப்பிலைச்சாறு, தேன், நல்லெண்ணெய் இவற்றில் வகைக்கு ஒரு சாமமரைத்துத் தூதுளங்காயளவுருட்டி முன் சொன்ன நாலு அனுபானமும் கலந்து குளிகை உரைத்துச் சீலையிலூட்டிக் கொடுப்பிலடக்கி உமிழ் நீரிறக்க கண்டமாலை மிடற்றுநோய் முதலியன தீரும்.

வட்டுக்காய் பிழிந்த தண்ணீரும் நல்லெண்ணெயுங் கலந்து நசியமிட்டுப் பின், துத்தமும் துரிசும் பொடி செய்து வேப்பெண்ணெயிற் குழைத்துச் சீலையில் ஊட்டிக் கொடுப்பிலடக்கி உமிழ் நீரிறக்க உடைக்கும்.

பொன்னுவரை வேர் பொடி செய்து நல்லெண்ணெயிற் குழப்பி அடக்கவும்.

குன்றிப்பருப்பும் அபினும் எருக்கலம் பால் விட்டரைத்துப் புறத் திரட்சியிற் பூசவும்.

## புண்ணூற

உடைத்தபின், குள அடம்பின் விதை சீவித் தூள் செய்து நல்லெண்ணெயிற் கொதிப்பித்து சீலையிற் தோய்த்து அடக்கப் புண்ணூறும்.

கறுக்காவேர், நத்தைச்சூரிவேர், தூதுளைவேர், பருத்தி வேர் சூரைவேர், கருஞ்சீரகம், கிராம்பு, வசம்பு, மிளகு, திப்பிலி, கடுக்காய் இவை சமன் கொண்டு தூள் செய்து நல்லெண்ணெயில் கொதிப்பித்து சீலையிற் தோய்த்து அடசப் புண்ணூறும்.

## வழலையறுக்க

கொடிக்கழற்சிவேர், அடப்பங் கொட்டை, துரிசு, துத்தம், நல்லெண்ணெயில் கொதிப்பித்து அடச வழலை யறுக்கும். வேப்பெண்ணெயிலும் கொதிப்பிக்கலாம். மேற்கூறிய சரக்குகளை எலுமிச்சம் புளி, வேப்பெண்ணெய், தேன் இவற்றிலரைத்து உண்டை பண்ணிக் கொடுப்பிலடச வழலையறுக்கும்.

## கோழைமுட்டடைப்பனுக்குச் சூரணம்

திரிகடுகு, திரிபலை, இந்துப்பு, கருஞ்சீரகம், கற்கடகசிங்கி, தேற்றுன்விதை, வகை கழஞ்சு 1 தூதுளையிலை, பாகலிலை, வேப்பிலை, வெள்ளறுகு வகை பிடி 1 காயவைத்து இடித்து வடி கொண்டு சிறுக வறுத்து அரைக்கவும். இப்படி மூன்று முறை புடமிட்டு அரைத்து வெருகடி தேனிற் தின்ன முட்டடைப்பன், கண்டக் கிரந்து, கண்டமாலை, கோழை, விலாநோக்காடு, நெஞ்சில் துடிப்பு, நெஞ்சடைப்பு இவை தீரும்.

## பாகு

தேற்றுன்விதை 50. திப்பிலி 20. மிளகு 50. செங்கழுநீர்க் கோட்டம் கழஞ்சு 1. கோரோசனை, திப்பிலிமூலம் கிராம்பு, ஏலம் வகை கழஞ்சு 16. பொடிசெய்து தேன் பாகுகாய்ச்சி அதில் தூவிக் கிண்டி சுண்டைக்காயளவு உருட்டி வைத்து கொண்டு தேனில் ஒருண்டை குழப்பித் தின்ன கோழைக்கட்டு முட்டடைப்பன் நெஞ்சிற் கட்டு, நெஞ்சுநோய் முதலியன தீரும்.

### பாளச்சீலை

பனரை, தேற்ருன், முசுமுசுக்கை, தூதுவளை, அழிஞ்சில், கொன்றை, மருக்காரை, வியாய் இவற்றின் பழச்சாற்றை மெல்லிய வெள்ளைச் சீலையில் ஒவ்வொருநாளூட்டி யுலர்த்திப் பின், இரு சீரகம், கடுக்காய், திப்பிலி, மதுரம் இவற்றை முன் சொல்லிய பழச்சாறுகளில் ஏதேனுமொன்றை விட்டரைத்து அச்சீலையிலூட்டி யுலர்த்தி வைத்துக் கொள்ளவும். காசெடை நறுக்கிக்கொடுப் பிலடச மிடற்றுநோய், கண்டமாலை, கண்டக் கிரந்தி தீரும்.

### புங்கம் வேரெண்ணெய்

புங்கம் வேர், பனரைப்பட்டை, அமுக்கிராவேர், கான்றை வேர், நீர்வள்ளிக் கிழங்கு, குன்றிமணிசமூலம், செவ்வகத்திப் பட்டை, முருங்கைப்பட்டை, அவுரி, சிறுபீளைசமூல வகை பலம் 5 இடித்தவித்து, இலுப்பெண்ணெய், எருமைநெய், பசுநெய் சமன் கூட்டி அதில் சீனக்காரம், சவற்காரம், வெண்பிசின், சிற்றரத்தை அதிமதுரம், வசம்பு, கத்தூரிமஞ்சள், மிளகு, சுக்கு, பெருந்தேன் மெழுகு சமன்கூட்டி இளம் பதத்தில் வடிக்கவும். நாசியில் நசியமிட்டு உள்ளும் கொடுத்து சீலையில் தோய்த்துக் கொடுப்பில் அடசவும். இந்த எண்ணெய் கொடுக்கு முன்னே, உப்பை வெந்நீரில் அரைத்துச் சுரையிலையில் தடவி மிடற்றில் போட்டு உள்ளுக்குக் கொடுக்கவும். மிடற்றில் வரும் வியாதி, மிடற்றின் புண்சகலதுந் தீரும்.

### எருக்கம்பூ எண்ணெய்

எருக்கலம்பூ தூத்துமக்கொற்ருன், குப்பைமேனி, ஊமத்து, கரிப்பான், வெட்பூலா, இயங்கு, பிரண்டை, மாவிலங்கை, தைவேளை, இவற்றின் சாறு வேப்பெண்ணெய் வகை நாழி 1 திரிகடுகு, ஓமம், வசம்பு, வெண்காரம், வெள்ளுள்ளி, கடுக்காய், இரு சீரகம், துத்தம், துரிசு, நெய்க்கொட்டான்பழம் வகை கழஞ்சு 1. மூன்ரும் நாள் மெழுகு பதத்தில் வடித்து உள்ளும் கொடுத்து தலைக்கும் வைத்து, புண்ணிலும் போடவும். முன் சொன்ன வியாதிகள் தீரும்.

### வெள்ளறுகு நெய்

வெள்ளறுகுச்சாறு, கோழியவரைச்சாறு, புங்கம்வேர்ப் பட்டைச்சாறு, பசுநெய், வகை உரி. திப்பிலி, சிற்றரத்தை, மதுரம், ஏலம், மல்லி, தூதுளைவேர், ஆடாதோடைவேர், குன்றி மணிவேர், நாயுருவிவேர், அமுக்கிராவேர், பெருமருந்துவேர் சம னிடை கொண்டு அரைத்துக் கரைத்துக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்து மிடற்றிற் பூசி, உள்ளுங்கொடுத்து கொடுப்பிலுமடசவும்.

## வெள்ளறுகு நெய் 2

புங்கம்வேர்ப்பட்டை, கோழியவரை, செருப்படி, வெள்ளறுகு இவை சாறு பசுநெய் வகைக்கு உரி. அதிமதுரம், கோட்டம், பீநாறி, உள்ளி, வசம்பு வகை பலம் ½. அரைத்துக் கரைத்துக் காய்ச்சி வடித்து உள்ளுங் கொடுத்துக் கொடுப்பிலும் அடசவும்.

## கண்டமாலை உடைக்க மருந்து

பாகலிலைச்சாறு, குப்பைமேனிச்சாறு, வட்டுப்பழச்சாறு, சமன் கலந்து அடப்பங்கொட்டை, எய்ப்பன்றி முள்ளுச்சுட்டசாம்பல், இலுப்பைப் புண்ணாக்கு, இவை தூள் செய்து போட்டு வேப்பெண்ணெயும் விட்டுக் கலக்கிக் கொடுக்க உடைக்கும். உடையாதிருந்தால் துத்தமும் துரிசும் பொடிசெய்து கலக்கிக் கொடுக்க உடைத்துச் சியல் கக்கியபின் மேற்கூறிய நெய்வகை எண்ணெய்வகை பூசி அடக்கவும்.

## மிடற்றில் நோவுக்குப் பாகு

இயங்கமிலை, ஆடாதோடையிலை சமன் கொண்டு அவித்துப் பிழிந்து திப்பிலி, சுக்கு, மஞ்சள், திரிபலை, இந்துப்பு, நற்சீரகம், தூதுவளைவேர் இவை யரைத்துக் கரைத்துக் காய்ச்சி நெய்யுந் தேனும் விட்டுப் பாகுதத்தில் இறக்கி, தேற்ருவிதையளவுதின்று வர மிடற்றில் நோதிரட்சி முதலியன தீரும்.

## கொடுப்பிலடச

பங்கம்பாளை, தூதுவளை, சிவனர்வேம்பு, மூக்கறைச்சி இவை வேர் துத்தம், துரிசு கூட்டித் தண்ணீர் வார்த்து அரைத்து நெல்லிக்காயளவு கொடுப்பிலடசியிருக்க மிடற்றில்நோ தீரும்.

## எருக்கலம்பூ எண்ணெய்

எருக்கலம்பூ, ஊமத்து, குப்பைமேனி, மாவிலங்கை, கையாந் தகரை, இயங்கு, வெட்பூலா, முடக்கொத்தான், பிரண்டை இவை சாறு வகைக்கு நாழி 1. வேப்பெண்ணெய் நாழி 1. திப்பிலிமூலம், குக்கில், வெண்காரம், வசம்பு, வெள்ளுள்ளி, நற்சீரகம், கடுக்காய் வகை கழ. 1. மெழுகு பதத்தில் வடித்து மேலும் பூசி உள்ளுங் கொடுத்து அடசவும். குளிர் இருந்தால் தலையிலும் வைக்கவும். கண்டக்கரப்பன், மிடற்றில் நோ முதலியன தீரும்.

## கண்டப்புற்றுக்கு எண்ணெய்

எலுமிச்சம்புளி நாழி 1. புங்கம்பால் நாலு காசெடை, மரமஞ்சள், வெளுத்தற்பிசின், மனேசிலை, துரிசு, அக்கரு, பொன்மெழுகு,

நெல்லி, தேவதாரம், பீநாறி வகை பலம் 1. நல்லெண்ணெய் விட்டுப் பதத்தில் வடித்துப் பஞ்சிலூட்டி அடசு நாப்புற்று, வாய்ப் புற்று, கண்டப்புற்று முதலியன தீரும்.

## குளிகை

தான்றிக்காய், திப்பிலி, கருஞ்சீரகம், மஞ்சள், வட்டுவேர், தூதுவளைவேர், பன்னைவேர், பெருமருந்துவேர், பனரைப்பழம், அரப்புக்கட்டி, அடப்பம் விதை சமன் கூட்டிக் குப்பைமேனிச் சாற்ருலாட்டிக் குளிகை செய்து அடசவும். நோய் கடினமாஞல் வேப்பெண்ணெயில் ஒரு குளிகை உள்ளுக்குக் கொடுத்து அடசியிருக்கவும்.

## வாயால் இரத்தம் எடுத்தால்

சீலை சுட்ட சாம்பலும் பருத்தியிலை அரைத்த விழுதும் நல்லெண்ணெயில் கலக்கி விழுங்கவும்.

(ஓர் பிரதியில் 'வேறு' என்ற தலைப்பின்கீழ் ஆட்சியிலுள்ளன வாகக் குறிக்கப்பட்டிருக்கும் நூற்றுக்கணக்கான மருந்துகளுட் சிலவே இங்கு சேர்க்கப்பட்டன இவை இந்நூலுக்கு வேருனவை).

உதடு, நாக்கு, பல்லு, அண்ணம், அலகு முதலிய இடங்களில் உண்டாகும் பலவகை நோய்களை ஏதுவாகக்கொண்டு கழுத்து நரம்புகளில் கழலை, திரட்சி முதலியன தோன்றும். அவற்றின் காரணத்தைக் கண்டறிந்து சிகிச்சை புரிந்தாலன்றித் தீருதல் அரிதென்றறிக. பல் வேவு, பற்சூலை, பற்ருளி, முதலிய நோய்களினுல், கழுத்தினிருபுறத்துமுள்ள நரம்புகளில் திரண்டு வீங்கும். அதனுல் மிடறு நெருக்குண்டு உண்ணவொட்டாமல் உபாதி செய்யும். இவ்வாறு இடையிடை தோன்றிப் பல ஆண்டுகள் நீடித்து நின்று வருத்தஞ் செய்யும். இரு விலாப்புறம் முதலிய இடங்களிலும் உபாதி தோன்றும். அதற்கு வெள்வே லெண்ணெய், பஞ்சாக்கினித்தைலம், புகை முதலியவற்ருல் பல்நோயக்குச் சிகிச்சை புரிந்து பஞ்சாக்கினித் தைலம் முதலிய வற்றை வீக்கம் தோன்று மிடங்களிற் பூசுக. உள்ளுக்குக் குக்கில்நெய் முதலியவற்றைப் பத்தியத்தோடு கொடுக்க.

மூலக் கிரந்தியினுலும் மிடற்றில்நோ முதலியன உண்டாகும். மூலக்கிரந்திக்குக் கூறியநெய் சூரணம் முதலியவற்றை உண்டு ந்நோயை விலக்குக. (பஞ்சாக்கினித்தைலம் என்பது முன் கூறிய நாராயணதைலத்தைப் போலும்.) பின் கூறப்படும்.

கழுத்துநோய் முற்றுப் பெற்றது.

———

## பைத்தியம் பலவுக்கும்
## கிரணசூரிய நாராயண தைலம்

வரமுறு முனிவர் தொகுத்திடு வாத
மெண்பதின் வருபயித் தியமு
மறுவிலாப் பித்த நாற்பதிற் சேடம்
வளரிரு பதிற்பயித் தியமும்
கெருடனை யெதிர்த்த சர்ப்பமே போலக்
கெட்டுவிட் டோடுதற் குரிய
கிரணசூ ரியநா ராயண தைலங்
கிளத்துவ னெச்சிகுப் பிளையும்
அரமுறி சிவன்வேம் பவுரிநன் னரி
யமுக்கிரா வெருக்கிரு குறிஞ்சா
வான்றகாற் றேட்டி பெருமருந் திரண்டு
குருந்துபொற் காணிபொன் முசுட்டை
திரமிகு வாசை கான்றைபேய்ப் பலவன்
சிறியதோர் பீளைநா ரத்தை
சிறக்குமா மணக்கு முருங்கைநா யுருவி
சிலந்திக ளிரண்டுகன் முரிசே. 1015

சேருமோ ரிதழ்த்தா மரையிரு நெருஞ்சி
செய்யபேய்ப் பீர்க்கிரு வேலி
சிறந்த[1]மா வாலி நிலக்குமிழ் வட்டுச்
சீரகத் தியினெடு கொற்றான்
ஆருமா விலங்கை பருத்திபுங் கிலாமிச்
சரியகைத் தகரை[2]கா லடக்கி
யடர்கருங் காக்கந் தூதுளை யெலுமிச்
சதுவுமல் லிகைநில பாகல்
நேரில்மா காணி சாரணை யோடு
நீர்கடி ரிருவகைப் பூலா
நிகழுகுத் துக்காற் சம்மடி [3]புருண்டி
நேயமா ரியங்கியார் வீழி
பாரிலேர் குப்பை மேனிவெள் ளறுகு
பகரிரு துத்தியீர் முட்டி
பன்னைசீ தேவி தயிர்வளை யுவாய்செங்
கத்தாரி பகர் [4]கொடுப் பையுமே. 1016

---

[1] மாவாலி-குதிரைவாலி. [2] காலடக்கி-வாதமடக்கி. [3] புருண்டி-காட்டுமல்லிகை. [4] கொடுப்பை-பொன்னுங்காணி.

மேவுமீ தெல்லாம் வேர்சம னுலர்த்தி
வேண்டுநற் சரக்கினைக் கேண்மோ
வெளுத்தலிற் பிசின்சண் பகமுகை கிராம்பு
விடயமுக் கடுகமீ ரரத்தை
தாவுவான் மிளகு பச்சிலை கோட்டந்
தகரம்வேம் பாடல்கர்ப் பூரஞ்
சன்னிய ணுயன் றுரிசுகச் சோலஞ்
சாத்திர வேதிநற் காயம்
தேவர்க டாருதக் கோலநற் குக்கில்
செவ்வியம் வசம்புவா லுளுவை
செவ்வளி மதுர [1]மஞ்சணல் வகையுஞ்
செய்யசந் தகில்வலம் புரிக்காய்
பூவிழா லரிசி சீரக மூன்று
புகல்கட னுரைவசு வாசி
பூதமாம் விருக்க மரே ணுகங் குப்பை
பொருவிலா வோமமக் கராவே. 1017

வேலைநேர் விழியா யிருவகை யுள்ளி
விளங்குகுண் டோசனை துத்த
மிளிர்கிளி யூறல் கரியகுந் திருக்கம்
விரும்பு[2]கற் கம்பொரி காரம்
ஏலமே வங்கங் கடகசிங் கியினே
டிருகுரோ சானியு மாஞ்சி
லியல்சிறு மூல கங்[3]கெச திப்பி
லேர்சீனக் காரமோர் நிறையாய்
வாலிதாஞ் சரக்கும் வேரும்வெவ் வேருய்
வலிபெறுத் தூள்செய்து வேம்பின்
வரமுறு தைலத் துடன்கழு தையின்பால்
மதிப்பினேர் நிறைகலந் தெரித்துச்
சீலமா யிறக்கி வேருடன் சரக்குஞ்
செறியவிட் டாற்றியுட் கொண்டு
சிரத்திலிட் டெரித்த நீரினின் மூழ்கிற்
றீருநோய் வகைகள் செப்புவனே. 1018

செப்புவே தாள வாயுமங் கையர்கை
மயக்கினிற் செறிபயித் தியங்கள்
தீர்கிலாப் பிரமை யாசினு லுற்ற
திறன்மிகு பிதற்றுடன் விறைப்பும்

---

[1] மஞ்சள் நால்வகை-கஸ்தூரிமஞ்சள், கறிமஞ்சள், குளவிந்தமஞ்சள், மரமஞ்சள். [2] கற்கம்-இலுப்பைப்பூ, [3] கெசதிப்பிலி-ஆனைத்திப்பிலி.

இப்புவி மீதில் வாதமெண் பதினு
லெய்திய பயித்தியம் பித்தத்
தியல்பயித் தியநாற் பதுவுடன் சேர்பத்
திசைபயித் தியமிரு பதுவும்
வெப்புறு வலிகள் பலவித முளவும்
வீறுள சன்னிகள் பலவு
மிகுமொளி படைத்த பருதிமு னிமம்போன்
மீளுமென் றுரைத்தன ரந்நாட்
சொற்பெறு மாயுண் மறைதெரி முனிவர்
துணிந்துசொன் முறைதவ ருது
துடிநிக ரிடைமென் கிளிமொழித் தொடித்தோட்
சுரதமெல் லியகருங் குயிலே. 1019

இத் தைலம் ஓர் பிரதியில் அமுதரோகத்தின்

ஈற்றில் எழுதுப்பட்டிருந்தது.

தலைநோய் மருத்துவம் முற்றுப்பெற்றது.



---

